# ஆரம்பக் கல்வி



கொடுமுடி ராஜகோபாலன்



ஸ்டார் பிரசுரம்

66. பெரிய தெரு

திருவல்லிக்கேணி, :: சென்னை 600 005.

# ஆசிரியர் முன்னுரை

மிகப் பொறுப்புணர்ச்சியுடன் குழந்தைகளின் கல்விக்குத் திட்டமிட வேண்டும். ஆரம்பக் கல்வித் திட்டம் நல்ல முறையில் அமைந்தால்தான்—நமது பண்பாட்டை யொட்டி அமைந்தால்தான் குழந்தைகளின் ஞானமும்-ஒ ழுக்கமும் ஆரம்பத்திலிருந்தே முன்னேற்றப் பாதையில் வளமுற உருவாக முடியும்.

ஒவ்வொரு நாட்டிற்கும் தனியான சில விசேஷ அம்சங்களுண்டு. ஆயினும், பூரா உலகத்தையும் பொதுவாக இணைக்கும் அம்சங்களையும் நாம் ஒவ்வொரு நாட்டிலும் காணமுடிகின்றது. உலகத்தின் ஒரு பாகத்தில் நடைபெறும் ஒரு மாறுதலின் உத்வேகம் இன்னொரு பாகத்தில் உள்ள ஒரு நாட்டையுந்தான் பாதிக்கிறது. தினம் தினம் வெகு வேகமாக நிகழ்கின்ற சம்பவங்களினூடேயும், நாம் காண்கின்ற பலவிதப் போக்குகளினூடேயும், உலகம் முழுவதையும் பாதிக்கக்கூடிய ஒரு உத்வேகம் வல்லமையுடன் செயல்படுகிறது. இந்த உண்மையை நாம் மறுக்க முடியாது சோவியத் ருஷ்யாவின் ஐந்து வருஷத் திட்டங்களின்படியான மாபெரும் முன்னேற்றமும், புதிய சீனுவின் மகத்தான சாதனைகளும், அமெரிக்காவில் நடைபெறும் விஞ்ஞான ஆராய்ச்சிகளும், பிரிட்டனின பார்லிமெண்டரி ஜனநாயக சம்பிரதாயங்களும், அரசியல் — சமூக—பொருளாதாரத் துறைகளில் நம்மைச் சிந்திக்கச் செய்யவில்லையா ? அவைகளின் பல உயரிய அம்சங்கள் நமது தேசியத் திட்டங்களில் இடம் பெற்றிருக்கவில்லையா ? அதுபோலவே, கல்வித் துறையில் அங்கெல்லாம் நடந்த பரிசோதனைகளும், அவைகளின் பயனுய் உருவாகியுள்ள பல கல்வித் திட்டங்களும், ஜனநாயகமுறைப் பாதையில் பெரிய பெரிய சோதனைகளைச் செய்து கொண்டே முன்னேறும் நமக்கு உதவியாயிருக்கும்

என்பதில் ஐயமில்லை. இந்தத் திருஷ்டியுடன் தான் இந் நூல் தோன்றியுள்ளது. இந்நூலில் கல்வித் துறையின் முதல் கட்டமான—முக்கிய அடிப்படைக் கட்டமான ஆரம்பக் கல்வித்துறையில் இதர நாடுகளின் அனுபவங் களைப் பற்றி எழுதப்பட்டுள்ளது.

1954-ஆம் ஆண்டில், ராஜாஜியால் கொண்டு வரப் பட்ட ஆரம்பக் கல்வித் திட்டத்தைப் பற்றி முழுக்க முழுக்க நாம் சர்ச்சை செய்திருக்கிறோம். சர்ச்சையின் அரசியல் நோக்கத்தைப் பற்றி ஆராய்வதால் எவ்விதப் பலனும் எவருக்கும் ஏற்படப் போவதில்லை! ஆயினும், இந்தக் காலத்தை மட்டும் நாம் என்றென்றும் மறக்க முடியாது. இக்காலத்தில்தான்—ராஜாஜியின் கல்வித் திட்டம் வெளி வந்தபோதுதான்—கல்விப் பிரச்னைகளைப்பற்றி கல்வி நோக்குடன் விருவிருப்பான வாதப் பிரதிவாதங்களும் நாடெங்கும் நடைப்பெற்றன என்பதைக் குறிப்பிட விரும்பு கிறேன். அந்த வேளையில்தான் "சுதேசமித்திரன்" துணை ஆசிரியர் ஸ்ரீ. சாரங்கரத்தினம் அவர்கள், ஆரம்பக்கல்வித் துறையில் பிறநாடுகளின் அநுபவங்களைப்பற்றித் தொடர்ச் சியாகக் கட்டுரை எழுதும்படி என்னை உற்சாகப்படுத்தினர். அதன் பின்னரே, நான் வாரம் ஒரு முறை "சுதேசமித்திரன்" பத்திரிகையில் 'ஆரம்பக் கல்வி, என்ற தலைப்பில் கட்டுரை எழுத ஆரம்பித்தேன்.

இக்கட்டுரைத் தொடரில் நான் மொத்தம் பதினான்கு நாடுகளில் நிலவுகின்ற கல்வித் திட்டங்களை எடுத்துக் காட்டியிருக்கிறேன். சிறிய—பெரிய, முதலாளித்வ ஜன நாயக—கம்யூனிஸ—பாஸிஸ, சர்வாதிகார—மதச் சார்புள்ள —மதச் சார்பற்ற; ஆசிய—ஐரோப்பிய இந்த அடிப்படை யில் உலகில் உள்ள முக்கிய நாடுகளை என் ஆராய்ச்சிக்குத் தொகுதிப்படுத்தியிருக்கிறேன். இக் கட்டுரைத் தொகுப்பே இப்போது புத்தக வடிவில் வெளி வந்திருக்கிறது. ஆயினும், "பிற நாடுகளின் அனுபவங்கள்" : "ஒரு லட்சியப் பள்ளிக் கூடம்" : "பிராஜக்ட் முறை" : "கட்டாயக் கல்வி"

**"சில பிரபலக் கல்வி நிபுணர்களும் அவர்களுடைய கல்விக் கொள்கைகளும்"**: இந்த அத்தியாயங்கள் இந்நூலுக்கென விசேஷமாக எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளன.

இக்கட்டுரைத் தொடரை முதன் முதலில் "மித்திர"னில் நான் எழுத ஆரம்பிப்பதற்கு எனக்குப் பல அறிஞர்கள் உதவி செய்தார்கள். அவ்வாறு உதவி செய்த மிஸ்டர் N. E. வில்லியம்ஸ் (பிரிட்டிஷ் கவுன்ஸிலின் சென்னைக் கிளையின் கல்வி அதிகாரியாக இருப்பவர்) ஸ்ரீ V. ராமமூர்த்தி, M.A., டாக்டர் V. N. சர்மா (மைலாப்பூரில் உள்ள 'குழந்தைகளின் தோட்டப் பள்ளி'யின் டைரக்டராயிருப்பவர்): மிஸ்டர். கிளாடி ஜோர்ஜெட் (டெல்லியில் உள்ள பிரெஞ்சு நாட்டின் தூதராலயத்தில் கலாசார ஆலோசகராயிருப்பவர்) முதலியவர்களுக்கு நான் என் வந்தனத்தைச் செலுத்திக் கொள்கிறேன்.

இதை நல்ல முறையில் வெளியிட்டுள்ள ஸ்டார் பிரசுராலயத்தாருக்கும் நான் என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் பத்திரிகையில் தொடர்ச்சியாகக், கட்டுரைகளாக வெளி வந்த இக் கட்டுரைத் தொகுப்பைப் புத்தகமாகப் பிரசுரித்துக் கொள்வதற்கு அனுமதி தந்த "சுதேசமித்திரன்" ஆசிரியருக்கும் என் வணக்கம் உரித்தாகுக.

சென்னை
29—8—'55

**கொடுமுடி ராஜகோபாலன்**

# பதிப்புரை

ஆரம்பக் கல்வி என்ற இந்த நூல், 1955 இல் முதல் பதிப்பு வெளி வந்தது. இப்போது இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது.

இந்த 22 ஆண்டுகளிலும்கூட இந்தியக் கல்வித் திட்டத்தில் எந்தவிதமான மாறுதலும் இல்லை. ஆனால், கல்வித் திட்டத்தில் மாறுதல் வேண்டும் என்ற பேச்சுக்கள் பேசப்பட்டுக்கொண்டே வருகின்றன. இந்த 22 ஆண்டுகளில் மட்டுமல்ல, அதற்கும் முன்பிருந்தே கல்வித் திட்ட மாறுதல் பற்றி அறிஞர்கள் பேசிவந்தனர். நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்பிருந்தே தேசீய இயக்க காலத்தில் நமது கல்வி முறையில் மாறுதல்கள் செய்யப்பட வேண்டும் என்ற எண்ணங்கள் தோன்றி இருந்தன. தேசீயப் போராட்ட காலத்திலேயே சுதந்திர இந்தியாவிற்கு எம்மாதிரியான கல்விமுறை அமையவேண்டும் என்பது பற்றி ஏராளமான சர்ச்சைகளும், வாதப் பிரதிவாதங்களும் தீர்மானங்களும் வெளிவந்தன.

பாலகங்காதர திலகர், மகாத்மா காந்தியடிகள், பண்டித மதன்மோகன் மாளவியா, ஜாகிர் உசேன், அபுல்கலாம் ஆசாத், ஜே. சி குமரப்பா, அரிய நாயகம், சுபாஷ்சந்திர போஸ் முதலிய பல அறிஞர்களும் சுதந்திர இந்தியாவின் கல்வி முறை பற்றிப் பல திட்டங்கள் வெளியிட்டுள்ளனர். ஆனால் சுதந்திரத்திற்குப் பின்னர் இவையெல்லாம் பரிசீலிக்கப்பட முடியாமல் பல பல காரணங்களால் இவை ஒத்தி வைக்கப்பட்டுக்கொண்டே வந்துவிட்டன.

நமது நாட்டில் இன்று நிலவும் கல்விமுறைக்கும், நமது நாட்டுப் பண்பாடு, நாகரிகம், கலாசார அமைப்பு, பொருளாதார அமைப்பு ஆகியவற்றிற்கும் எந்த வித சம்பந்தமுமில்லை. அப்படியானல் நாம் பயிலும் கல்விமுறைதான் என்ன ?

இன்று நம்மிடையே ஊடாடும் கல்விமுறை லார்டு மெக்காலே என்பவரால் இந்திய மக்கள்மீது சுமத்தப்பட்ட

ஒரு கல்விமுறையாகும். நம்மையாண்ட பிரிட்டிஷ் அரசுக்கு விசுவாசமுள்ள ஊழியர்கள் தேவைப்பட்டார்கள். பெரிய உத்தியோகங்களிலும், முடிவெடுக்கும் அதிகாரமுள்ள உத்தியோகங்களிலும் ஆங்கிலேயர்களையே நியமித்திருந் தார்கள். அவர்களுக்கு விசுவாசமாகத் துணைபுரியும் ஊழியர் களுக்கு இந்தியர்கள் தேவைப்பட்டார்கள். அவ்வகையான ஊழியர்களைத் தயாரிப்பதற்கென்றே லார்டு மெக்காலே இக் கல்விமுறையைத் தயாரித்து நம்மீது சுமத்தினர். அதாவது ஆங்கில அரசுக்கு விசுவாசமுள்ள ஊழியர்களைத் தயாரிக்கும் ஓர் உற்பத்தித் தலமாகவே கல்விக்கூடங்கள் விளங்கின. இன்றளவும் அப்படியேதான் இருக்கின்றன. கல்விக் கூடங்கள் சென்று படித்தவர்கள் எல்லாரும் அரசாங்க உத்தியோகம் ஒன்றையே புருஷார்த்தமாக எண்ணி ஏங்கிக் கொண்டிருப்பதற்கும் இதுதான் காரணம். இந்தமுறை மாற்றி அமைக்கப்படாவிட்டால் நாம் முன்னேறுவது எப்போது ?

நமது பாரம்பரியப் பண்பாட்டிற்கும், ஆழ்ந்த அறி விற்கும், தெளிந்த சிந்தனைக்கும் ஊட்டம் தரும் முறையில் புதிய கல்விமுறை அமைய வேண்டும். ஒழுக்கம், உடல் வளம், கல்வியறிவு, (Discipline, Health, Education) இந்த மூன்றையும் நம் இளைஞர்களுக்குத் தரும் வகையில் நமது கல்விமுறை அமைய வேண்டும்.

இந்த சிந்தனையைத் தூண்டுவதற்கென்றே இந்த நூல் வெளிவருவதாகக் கொள்ளலாம். பலதரப்பட்ட அரசியல் பொருளாதார, சமூகக் கொள்கைகளை உடைய நாடுகளின் கல்வித் திட்டங்கள் இந்நூலில் தரப்பட்டுள்ளன. இவை நமது நாட்டிற்கு ஏற்ப, நமக்கென்று நம் பாரம்பரியத்திற் கேற்ப ஒரு கல்விமுறையைத் தயாரிப்பதற்கான சிந் தனையைத் தூண்டும் என்று நம்புகிறேன்

அன்புள்ள,
கண. இராமநாதன்
பதிப்பாசிரியர்.

# பொருளடக்கம்




# ஆரம்பக் கல்வி

## 1. மூன்று முக்கியமான கல்விப் போக்குகள்

மூன்று விதமான கல்விப் போக்குகளைப் பிரதிபலிக்கும் சில முக்கியமான நாடுகளில் தற்காலத்தில் அமுலாகும் ஆரம்பக் கல்வித் திட்டங்களின் நடைமுறை அம்சங்களை நான் இப்போது முதலில் ஆராய விரும்புகிறேன். படிப்படியாக அவை எவ்வாறு தோன்றி வளர்ந்து, அரசியல், பொருளாதார, சமூகக் கருத்துக்களாலும் கொள்கைகளாலும் பாதிக்கப்பட்டுப் பல மாறுதல்களுக்குள்ளாகியிருக்கின்றன என்பதைப் பற்றிய சரித்திர வரலாற்றை நான் இங்கே ஆராயவில்லை.

அந்த நாடுகளில் இன்று அமுலாகும் ஆரம்ப செகண்டரி உயர்தரக் கல்வித் திட்டங்களுக்கு ஆதாரங்களாக அமைந்துள்ள மூன்றுவிதமான முக்கியக் கல்விப் போக்குகளையும், இதர சில அம்சங்களையும் கீழே தருகிறேன்:—

1. 'பிராடெஸ்டெண்டு, கிறிஸ்துவ மதப் பிரிவினரின் செல்வாக்குப் பெற்றதும், ஜெர்மானிய மூலத்திலிருந்து தோன்றியதுமான கல்விப் போக்கு பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள், தென்னாப்பிரிக்க யூனியன், ஸ்காண்டி

நேவியன் நாடுகள் (நார்வே—ஸ்வீடன்); இந்த நாடுகளில் இந்தக் கல்விப் போக்குக் காணப்படுகின்றது.

2. பொருளாதார, பூகோள நிலைமைகளை யொட்டியோ, அல்லது தீவிர 'ஒரே நோக்கு' அரசியல் சித்தாந்த அடிப்படையிலோ உருவான கல்விப் போக்கு: இந்தப் போக்கைக் கம்யூனிஸ்டு நாடுகளிலும், சில ஆசிய நாடு களிலும் காண முடிகின்றது.

3. நிர்வாக ரீதியில் மத்திய 'கெடுபிடி' ஆட்சியின் மேலாதிக்கத்தின் வியாபகத் தன்மையினின்று தோன்றிச் செயல்படும்|கல்விப்போக்கு: பிரான்ஸ், இத்தாலி, ஸ்பெயின், பெல்ஜியம், போர்ச்சுகல், தென் அமெரிக்கக் குடியரசுகள் 'ரோமன் காதலிக்' கிருஸ்துவ செல்வாக்கு மண்டலத்தி லிருக்கும் நாடுகள், அராபிய—அராபியரல்லாத முஸ்லிம் நாடுகள்: இங்கெல்லாம் இந்தக் கல்விப்போக்கு நிலவு வதைப் பார்க்கலாம்.

ஸ்தல சுயாட்சிப் பாதையில், உரம் பெற்ற 'பாரம்பரி ய'த்தை இன்னமும் பாதுகாக்கும் சில நாடுகளில், மத்திய ஆட்சியின் வரம்பில்லாத மேலாதிக்கத்தை ஒப்புக்கொள் ளாத 'அரசியல் உணர்ச்சி' இன்றும் நீடிக்கிறது. அந்த நாடுகளில் இந்த 'உணர்ச்சி'யின் விளைவாக உருவானது தான் மேலே குறிப்பிடப்பட்ட முதலாவது கல்விப்போக்கு என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

இரண்டாவது மூன்றுவது கல்விப் போக்குகளில் நாம் ஓர் ஒற்றுமை 'அம்ச'த்தைப் பார்க்க முடிகின்றது. கல்வித் துறையில் மத்திய ஆட்சியின் மேலாதிக்கம் அவையிரண் டிலுமே மூலத்தையே தொடும் ரீதியில் புகுந்திருக்கின்றது என்பதுதான் அந்த ஒற்றுமை 'அம்ச'மாகும். இந்த உண் மையை நாம் கவனிக்கத்தவறக்கூடாது. இந்த நாடுகளில் சிலவற்றில் ஆரம்பக் கல்வி ஸ்தாபனங்களை ஸ்தல ஸ்தாப

ஙங்கள் நடத்துகின்றன என்பது உண்மைதான். ஆயினும் மத்திய ஆட்சியின் மேலதிகாரத்திலிருந்து உருவான கல்விக் கொள்கைப்படியே அவை நடத்துகின்றன என்பதைக் கவனிக்கவேண்டும். தவிரவும், மூன்றுவது கல்விப் போக்கு நிலவும் நாடுகளில், மாறுதல் வேண்டுபவர்களுக்கும், மாறுதலே கூடாதென்பவர்களுக்கும், சிறப்பாக, தீவிர மதப் பற்றுள்ளவர்களுக்கும், அரசியலிலோ அல்லது கல்வி—கலைகளிலோ மதச் சார்புக்கு இடமிருக்கக் கூடாதென்பவர்களுக்கும் இன்னமும் 'போராட்டம்' நடந்து கொண்டேயிருப்பதை பிரான்ஸ் போன்ற ஐரோப்பிய நாடுகளிலும், சில முஸ்லிம் நாடுகளிலுங்கூட நாம் காண முடிகின்றது.

தீவிர மதச் சார்போ அல்லது தீவிர ராஜீயவாதச் சார்போ இல்லாத சில ஜனநாயக நாடுகளில்கூடக் கல்விக் கொள்கையை வகுப்பதிலும், அதன் நிர்வாகத்திலும் மத்திய ஆட்சியின் செல்வாக்கை அதிகமாக நுழைக்கும் முயற்சிகளும் நடைபெறுகின்றன. இதே சமயத்தில், 'அரசியல் தத்துவாதிக்கம் கல்வித் துறையில் எவ்விதத்திலும் நுழைவதைத் தடுக்கவேண்டும்' என்ற போக்கும், 'குழந்தையின் கல்வி வீட்டிலிருந்தே, அதன் எதிர்கால வாழ்க்கைக்கும் சமுதாய நலத்திற்கும் உதவி செய்யும் வகையில் சுயேச்சையாக ஆரம்பமாகவேண்டும்' என்ற போக்கும் எழுந்திருக்கின்றன. ஜான் டுயி போன்ற மேதைகள் வலியுறுத்தும் போக்கு இதுதான். இதை, ஜனநாயக முற்போக்கு என்று பல மேற்கத்திய நாடுகள் ஏற்றுக்கொண்டிருக்கின்றன.

மேலே குறிப்பிடப்பட்ட எல்லா நாடுகளிலும் ஏற்பட்டிருக்கும் பிரமாதமான கல்வி அபிவிருத்தியை மட்டும் நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். எத்துணையோ கஷ்டங்களை அந்த நாடுகள் சமாளிக்கும் அற்புதத்தை நாம் மறுக்க

இயலாது. விவசாயம்—தொழில் துறைகளில் தங்கள் குழந்தைகளுக்குச் செயல்முறை ஞானமிருக்கும்படியாகவும் கல்வியை நாடு பூராவிலும் பரவும்படியாகவும் அந்த நாடு களின் சர்க்கார்கள் தங்கள் தங்கள் லட்சிய சாதனங்கள் மூலம் விரிவான ஏற்பாடுகளைக் கட்டுப்பாடாகச் செய்கிறார்கள் என்பதையும் நாம் மறுக்க இயலாது. எந்தச் சர்க்காரும் பழமையைப் பூரணமாக அழித்துவிட்டே புதிய மாறுதலைச் செய்துவிட்டதாகச் சொல்வதற்கில்லை. 'சர்வ தேசீயம்' பேசுகிறவர்கள்கூட, தங்கள் தங்கள் நாடுகளைப் பொறுத்தளவில் அவைகளின் சாரமுள்ள பழமையான ஏற்பாடுகளை அழகாகப் பாதுகாக்கத்தான் செய்கிறார்கள்! ஆயினும், 'ஜனநாயகம்—கலாசாரம்—கல்வி' முதலிய பதங்களுக்கு ஒவ்வொரு சாராரும் ஒவ்வொரு விதமாகத் தங்கள் தங்கள் கண்ணோட்டத்தின்படி 'அர்த்தம்' சொல்லுகிறார்கள்! இதில்மட்டும் ஒரு சாராருக்கு மற்றொரு சாரார் இளைத்தவராய்த் தெரியவில்லை!

இன்னொரு விஷயத்தையும் நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். ஒரே மொழியோ அல்லது ஒரே கலாசாரமோ இல்லாத நாடுகளில் கல்வித் துறையில் எவ்வளவோ மோதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. பிராந்திய தனி உணர்ச்சிகள் விகாரமான உச்ச நிலைக்குக்கூட எழுந்துமிருக்கின்றன. ஆயினும், குழந்தைப் பிராயத்திலிருந்தே நாட்டின் பொதுவான ஐக்கியத்தை வளர்க்கும் போக்குக்கே முக்கியத்வம் கொடுக்கும் ரீதியில் கல்விமுறை வகுக்கப்பட்டிருக்கிறது. பிராந்திய மொழி—பொது மொழிக்கும், பல்வேறு பண்பாடுகளுக்கும் பரஸ்பர இணைபாடுகள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. அநேகமாக எல்லா நாடுகளிலும் ஆரம்பக் கட்டத்திலிருந்து செகண்டரிக் கட்டம் வரையிலும் போதனு மொழி பிராந்திய மொழியாகத்தானிருக்கிறது. பொது மொழிக்கு இரண்டாவது ஸ்தான

மும், இதர சர்வதேச மொழிகளுக்குரிய ஸ்தானமும், போதனைத் திட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ரஷ்யா, ஜப்பான், துருக்கி, இஸ்ரேல் முதலிய நாடுகளில் ஆங்கிலம், ஜெர்மன், கிரேக்க—லத்தின் பிரெஞ்சு, மொழி களில் குழந்தைகளுக்கு ஞானம் ஏற்படுவதற்காக அம் மொழிகள் அந்நாடுகளின் பாடத் திட்டங்களில் இடம் பெற்றிருக்கின்றன. பிராந்திய அல்லது தாய் மொழிக்கே முக்கியமான இடம் தரப்படுகின்றது. ஆயினும், அநேக மாகப் பல நாடுகளில், தாய்மொழியில் வெறி யுணர்ச்சிக்கோ அல்லது பிற மொழிகளின்மீது துவேஷத்துக்கோ இடமில் லாதிருக்கும் விசேஷமான உண்மையை நாம் மறந்துவிடக் கூடாது.

# 2. பிற நாடுகளின் அநுபவங்கள்

1. சிறு குழந்தைகளுக்கும் இளஞ்சிறுவர்களுக்கும் என (2 அல்லது 3 வயதிலிருந்து, 6 அல்லது 7 வயதுவரை) 'கிண்டர் கார்டன்' பள்ளிக்கூடங்களும், 'நர்ஸரி' பள்ளிக் கூடங்களும், அநேகமாக எல்லா நாடுகளிலுமே இருக் கின்றன. இவை சில நாடுகளில் கட்டாயமாகவும், சில நாடுகளில் இஷ்ட பூர்வமாகவும் செயல்படு கின்றன. ஆரம்பக் கல்வியின் விஸ்தரிப்புக்களாகவே இந்தப் பள்ளிக்கூடங்கள் சில நாடுகளில் பாவிக்கப்படு கின்றன.

2. குழந்தைகளுக்குக் கைப் பழக்கத்தையும், பல வேலைகளைப் பழகிக்கொள்ளும் ஆர்வத்தையும் ஏற்படுத்த 'வொகேஷனல்' பள்ளிக்கூடங்கள் பல நாடுகளில் இருக் கின்றன. வேலைப் பழக்கத்தை வளர்த்தல்—தொழிற் பயிற்சி—உடற்பயிற்சி அளித்தல் சம்பந்தமாகச் சில நாடு களில் இருவிதக் கருத்துக்கள் இருக்கின்றன.

குழந்தைகளின் வயதையொட்டி அவர்களுக்கு இந்தப் பயிற்சிகளில் ஆர்வத்தைமட்டும் உண்டுபண்ணிவிட்டால் போதும் என்பது ஒரு சாராரின் கருத்தாகும்; ஆனல் மற்றொரு சாராரோ, இந்தப் பயிற்சிகள் ஒருவித ராணுவக் கட்டுப்பாடு அடிப்படையிலே கொடுக்கப்படவேண்டு மென்று கருதுகிறார்கள்.

3. அங்கஹீனமுள்ள குழந்தைகளைப் பராமரித்து அவர்களுக்குக் கல்வியளிப்பதற்கென 'சில்டிரன்ஸ் ஹோம்' களும், 'ரெஸிடென்ஷியல் ஸ்கூல்'களும், 'சாரிடி ஸ்கூல்' களும் இருக்கின்றன.

4. ஆசிரியர்களுக்கு நிறையச் சம்பளம் தரப்படுகிறது. சில நாடுகளில் கிராம ஆசிரியர்களுக்கு வீடு கட்டிக்கொள்ள மனைக்கட்டும், பண உதவியும் அளிக்கப்படுகின்றன. கிராம ஆசிரியர்கள் கிராமத்தைவிட்டுப் போகாமலிருக்கும்படியாக அவர்களுக்கு எல்லா வசதிகளும் சில நாடுகளில் செய்து தரப்படுகின்றன.

5. கம்யூனிஸ்ட் நாடுகளில் எல்லாவற்றிலுமே ஒரே மாதிரியான கல்வி முறை இல்லை. அந்தந்த நாட்டின் தேசீயப் பாரம்பரியம் அந்தந்தக் கல்வித் திட்டத்தினிலே மணம் கமழத்தான் செய்கிறது; ஆனால் அவையெல்லாவற்றிலும் ஒரே மாதிரியான ராஜீய நோக்கம்-தத்துவம் புகுத்தப்பட்டிருக்கவில்லையென்றோ அல்லது புகுத்தும் வேலை தொடர்ந்து பொதுவாக நடைபெறவில்லை யென்றோ நிச்சயமாகச் சொல்லமுடியாது.

6. பாடத் திட்டம் வகுப்பதிலும், அதற்கான பாடப் புத்தகங்களைத் தயாரிப்பதிலும், மிகுந்த ஆராய்ச்சியும், சிரத்தையும் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இந்த விஷயத்தில் சில நாடுகளில் சர்க்கார்களே இதைத் தயாரிக்கிறார்கள் ; வேறு சில நாடுகளில் சர்க்கார்களும்—நிபுணர்களும் கலந்து திட்டம் வகுத்து, அதன்படி தயாரிக்கிறார்கள்.

7. ஆரம்பப் பள்ளிக்கூடக் கட்டத்தை முடித்துக்கொண்டு, மேல் வகுப்புக்குத் தேர்வதற்காகக் குழந்தைகளுக்குப் பரீட்சையின் கண்டிப்பு எதுவும் கிடையாது.

8. ஆசிரியர் பற்றுக்குறையைச் சமாளிப்பதற்கும், இருக்கும் வசதிகளைக்கொண்டு பள்ளி செல்லும் வயதடைந்த எல்லோருக்கும் கல்வியளிக்கவும் குறுகிய கால (4-6-8-மாதங்களுக்கு நீடிக்கும்) போதனா முறைப் பயிற்சி அளிக்கும் பள்ளிக்கூடங்களும், குழந்தைகளும் (குறிப்

பாக விவசாய-தொழிலாளர் வகுப்புக்களைச் சேர்ந்த குழந்தைகளுக்கு) ஓய்வு வேளைப் பள்ளிக்கூடங்களும், குறுகிய காலப் பள்ளிக்கூடங்களும் சில நாடுகளில் இருக்கின்றன.

9. சில நாடுகளில் உபாத்தியாயர் தொழிலுக்கு ஏராளமான பெண்கள் முன்வருகிறார்கள் ; வேறு சில நாடுகளில் இத் தொழில் வாலிபர்களைக் கவர்ச்சி செய்வதில்லை.

10. சில நாடுகளில் தனி நபர்கள் — ஸ்தல ஸ்தாபனங்களால் சர்க்காரின் ஆதரவும் ஆலோசனையும் பெற்று ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் நடத்தப்படுகின்றன. சில நாடுகளில் சர்க்காரின் மேற்பார்வையின்கீழ் ஸ்தல ஸ்தாபனங்கள் ஒரு புறமும், மத ஸ்தாபனங்கள் மற்றொரு புறமுமாக ஆரம்பப் பள்ளிக்கூடங்களை நடத்துகிறார்கள் ; இன்னும் சில நாடுகளில் சர்க்காரின் நேரடியான சர்வ வியாபகமான கட்டுப்பாட்டின்கீழ் ஆரம்பப் பள்ளிக் கூடங்கள் நிர்வகிக்கப்படுகின்றன.

11. அநேகமாக எல்லா நாடுகளிலுமே ஆரம்பக் கல்வி கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது. இதனால் சர்க்காருக்கு ஆகும் அதிகச் செலவை அந்நாடுகளின் சர்க்கார்கள் பொருட்படுத்துவதில்லை. மேலும் மொத்த தேசீய வருமானத்திலிருந்து கல்விக்கு ஒதுக்கப்படும் தொகை அதிகமாகத்தானிருக்கிறது.

12. சின்னஞ் சிறு குழந்தைகளுக்குக் கல்வியளிப்பது சம்பந்தமாகப் பல ஆராய்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றன. கல்வி நிபுணர்கள் அடிக்கடி மகாநாடு கூட்டிக் கல்விப் பிரச்னைகளை விவாதிக்கிறார்கள். ஜெனிவாவில் உள்ள உலகக் கல்வி ஆராய்ச்சிக்கழகம் இத்துறையில் பெரிய தொண்டு செய்துவருகிறது என்பதைக் குறிப்பிடவேண்டும். ஐக்கிய நாடுகளின் கல்வி-விஞ்ஞான-கலா

சாரக் கழகமும் இத்துறையில் சிறந்த பணியாற்றுகிறது என்பதையும் குறிப்பிட வேண்டும். மாண்டிஸோரி பிரோபல், டாக்டர் சூஸான்க் இஸாக்ஸ், ஜான் டூயி, டாக்டர் டெக்ரேலி போன்ற தலைசிறந்த கல்வி நிபுணர்கள், மனோதத்துவ நிபுணர்கள்-தத்துவஞானிகளின் கல்வி பற்றிய கொள்கைகள் இன்று பல நாடுகளில் உள்ள ‘நர்ஸரி-கிண்டர் கார்டன்-இன்பண்டு’ பள்ளிக்கூடங்களில் அமுல் நடத்தப்படுகின்றன.

13. கம்யூனிஸ்ட் நாடுகளிலுங்கூட இந்தச் செல்வாக்குகள்தான் நிலவுகின்றன. ஆயினும், அந்நாடுகளின் முதலாளித்துவ எதிர்ப்புப் போக்கு இந்தச் செல்வாக்குகளின் கர்த்தாக்களை மட்டும் ஒப்புக்கொள்ள மறுக்கிறது! சாரத்தைப் பின்பற்றுகிறார்கள்; ஆனால், அவர்களின் பெயர்களைச் சொல்லி, அவர்களுடைய முறைகள் எல்லாம் “மேலெழுந்தவாரியானது” என்று கூறுகிறார்கள்!

14. ‘நர்சரி-கிண்டர்கார்டன்’ பள்ளிக்கூடங்களைப் பல நாடுகளில், பொதுவாகத் தனிப்பட்டவர்களே பிரத்யேகமாக நடத்துகிறார்கள். கம்யூனிஸ்ட் நாடுகளில் மட்டும் இவை அநேகமாக சர்க்காராலேயே ஆரம்பக் கல்வியின் விஸ்தரிப்புகளாக நடத்தப்படுகின்றன.

15. ‘மாண்டிஸோரி-பிரோபல்’ முறைகளின்படி நடைபெறும் ‘நர்சரி-கிண்டர்கார்டன்’ பள்ளிக்கூடங்களில் உபகரணங்களும் செலவுகளும் அதிகமாக ஏற்படுகின்றன. தனிப்பட்டவர்கள் இதன் நிர்வாகப் பொறுப்பை வகிப்பதால், குழந்தைகளிடம் கட்டணம் அதிகமாக வசூலிக்கப்படுகிறது. எனவே இப்பள்ளிக்கூடங்களில் வசதியுள்ள குடும்பக் குழந்தைகளே சேர்ந்து படிக்க முடிகின்றது. ஆனால், கம்யூனிஸ்டு நாடுகளில் இப்பள்ளிக்கூடங்களின் பூராப் பொறுப்பையும் சர்க்கார் வகிப்பதால் எல்லாக்

குழந்தைகளும் எவ்விதக் கட்டணமுமின்றி இப்பள்ளிக் கூடங்களில் சேர்ந்து படிக்க முடிகிறது.

16. 4-வது அத்தியாயத்தில் விபரம் தரப்பட்டுள்ள எல்லா நாடுகளிலும் குழந்தைகளுக்குச் சிறு பிராயம் முதற் கொண்டே இரண்டு அல்லது மூன்று மொழிகள் சொல்லித் தரப்படுகின்றன. தங்கள் தாய்மொழியை வளர்ப்பதில் எவ்வளவு ஆர்வமிருக்கிறதோ, அவ்வளவு ஆர்வம் விசால மான அறிவு பெற முக்கியமான பிற மொழிகளைக் கற்பதிலும் இருக்கிறது. 'மொழி வெறி' என்பது அங்கெல்லாம் இல்லவேயில்லை!

17. ஆசிரியர்கள் ஒழுக்க உயர்வையும், கடமை யுணர்ச்சியையும் பேணி வளர்க்கும் உயர்ந்த பண்பாட் டைப் பின்பற்றுகிறார்கள்.

18. தரச் சிறப்பையும் செயல்திறனையும் ஆதாரமாகக் கொண்டே ஆசிரியர்களின் போதனாமுறைப் பயிற்சிப் பள்ளிக்கூடங்கள் செயல்படுகின்றன.

கீழ்க்கண்ட முக்கிய அம்சங்களைக் கருத்தில் கொண்டும் அவைகளுக்கேற்பவுந்தான் அந்த நாடுகளில் கட்டாயக் கல்வி முறை அமுல் செய்யப்படுகின்றது என்பதை அவசிய மாய்க் கவனிக்கவேண்டும்.

1. பொருளாதார அம்சங்கள். (மொத்த தேசீய வரு மானம், தொழில்துறை அபிவிருத்தியின் அளவு, விவசாய வரி அளவு, நாட்டின் வாழ்க்கைத்தர நிலைமை முதலியன.)

2. நிதி அம்சங்கள். (வரி விதிப்பு முறை, தேசீய, பிராந்திய, ஸ்தல வரவு-செலவுகள் முதலியன.)

3. சமூக அம்சங்கள், (பல்வேறு சமூகங்களின் ஸ்தாபன அமைப்பு. பொதுச் சமுதாய அமைப்பு, பிற்

பட்ட சமூகங்களின் நிலைமைகள், குடும்பவாழ்க்கை, பெண் குலத்தின் அந்தஸ்து முதலியன.)

4. பூகோள அம்சங்கள். (ஜன நெருக்கடி அதன் வினியோக விவரம், கிராம-நகர வளர்ச்சி, சீதோஷ்ண ஸ்திதி, நில விஸ்தீரணம், போக்குவரத்து வசதிகள் முதலியன.)

5. அரசியல் அம்சங்கள். (அரசியல்-நிர்வாக அமைப்பு முதலியன.)

6. மொழி அம்சங்கள். (வழக்கில் உள்ள இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மொழிகள், எழுத்து வடிவத்திலில்லாத மொழிகள் முதலியன.)

# 3. ஒரு லட்சியப் பள்ளிக்கூடம்

[ பில்தோவனில் (ஹாலந்தில்) உள்ளது.]

"நவீன முறைகளில் குழந்தைகளுக்குக் கல்வியளிக்க வேண்டும் என்பவர்களை ஒரு பெரிய பிரச்சினை எதிர்நோக்கி நிற்கிறது; குழந்தைகளின் தனிக் குணச் சிறப்பியல்களை யொட்டிய கல்வியை எப்படி யளிப்பது? ... அவ்வழியில் அவர்களுடைய பூரண வளர்ச்சிக்கான வாய்ப்புகளை எப்படித் தோற்றுவிப்பது? அதே சமயத்தில் மனிதவாழ்விற்கு ஆதாரமான அமைதியையும், கட்டுப்பாட்டையும் எப்படி நிலைநிறுத்துவது?...மனிதத்வத்தின் மாண்பினைக் காக்க வல்ல பண்புகளை எப்படித் தொடர்ச்சியாகக் காப்பாற்றுவது?... இத்தனை கேள்விகளும் அடங்கியதே அப்பெரும் பிரச்னையாகும். ஆரம்பக் கல்வி சம்பந்தமாகப் பெற்றோர்களும்-ஆசிரியர்களும் அடிக்கடி பேசுகிருர்கள்! குழந்தைகளுக்கு அளிக்கப்படும் கல்வியில் அதிக சுதந்திரம் இருக்க வேண்டும் என்று அவர்கள் எத்தனையோ மேடைகளில் முழக்கம் செய்கிருர்கள்! ஆயினும், அவர்களுடைய முழக்கங்களும்-முயற்சிகளும் வெறும் சப்தத்திலும், குழப்பத்திலுமே முடிவதை நாம் பார்க்கிறோம்! இதனால். சுதந்திர வழிகளில் பலருக்கு நம்பிக்கை போய்விட்டது; அதற்குப் பதிலாக, அர்த்தமற்ற, மூடப் பழக்க வழியில் வந்த கட்டுப்பாடுகளில் அவர்களுடைய மனம் நம்பியிருக்கிறது!

"தன்னம்பிக்கை-பொறுப்பு-பரஸ்பர உதவி-எனப்படும் சிறப்புகளின் அவசியம்பற்றி எடுத்துச் சொல்லத் தேவையில்லை. இவைகளின் பெருமையை நாம் உணர்ந்து தானிருக்கிறோம்! இச்சிறப்புகளை யொட்டிய 'செயல் சாதனை' யைப் பற்றிக் குறிப்பிடவே எனக்கு வெட்கமாயிருக்

கிறது! ஏனெனில், நம்மில் பலருடைய 'செயல் சாதனை' வெறும் தத்துவ ஆராய்ச்சியிலேயே இன்னமும் நின்று வருகிறது! ஆனால், இச்சிறப்புக்களைப்பற்றி நாம் மிகச் சாதுர்யமாகப் பேசுகிறோம்! ஆயினும், அன்றாட வாழ்க்கையின் பிரத்தியட்ச உண்மைக்கும், நமது வாசாலகமான பேச்சுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை!

"நமது பேச்சுக்கும் செயலுக்குமிடையே காணப்படும் இந்த வித்தியாசத்திற்கு நிச்சயமான காரணங்கள் இருக்கின்றன. அற்ப விஷயங்கள் என்று நம்மால் நினைக்கப்படுபவைகளின் முக்யத்வத்தை நாம் காணத் தவறிவிடுகிறோம். அடிக்கடி நம்முன் தோன்றும் சிறிய ஸ்தாபனப் பிரச்னைகளைப் பூரண கவனத்துடன் தீர்க்க முயற்சி செய்வதில்லை; அவைகளைத் தீர்ப்பதில் குழந்தைகளின் கபடமற்ற ஒத்துழைப்பை நாம் திரட்டுவதில்லை: இது முதல் காரணமாகும். இதேபோன்ற கஷ்டங்கள் பெரியவர்களாகிய நம்முடைய வாழ்க்கையிலேயே அடிக்கடி நிகழ்கின்றன. இவைகளைத் தீரமாக நாம் சமாளிப்பதில்லை! எவருடைய வாழ்க்கையிலே அமைதி கட்டுப்பாடு-லயம் முதலியவை இல்லையோ, அவரால் பிறருடைய வாழ்க்கையை எப்படி ஒழுங்குபடுத்தமுடியும்?" என்று **கீஸ் போயக்** என்பவர் கூறுகிறார். இவரைப்பற்றிய பூரா விவரங்களையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டும். அழகிய — செழிப்பான ஹாலந்து நாட்டில் பில் **தோவன்** என்ற நகரில் இவர் ஒரு அற்புதமான பள்ளிக்கூடத்தை நடத்திக்கொண்டிருக்கிறார். இந்தப் பள்ளிக்கூடம் ஹாலந்தின் ஒரு லட்சியப் பள்ளிக்கூடமாக-குழந்தைகளின் **தொழிற்சாலைச்** சமுதாயமாக சிறப்புற வளர்ந்தோங்கிக்கொண்டிருக்கிறது. இவர் வெறும் கல்வி நிபுணர் மட்டுமல்ல; குழந்தை மனத் தத்துவ நிபுணர் மட்டுமல்ல; ஒரு பெரிய கர்ம வீரருமாவார். இவருடைய பள்ளிக்கூடம் சர்வதேசப் புகழ்பெற்றது என்பதை வாசகர்கள் அறியவேண்டும்.

அவருடைய எட்டுப் பெரிய குழந்தைகளுடன் இந்தப் பள்ளிக்கூடம் ஒரு ஜனவரி மாதம் 26ந் தேதி ஆரம்பமாயிற்று. தனிப்பட்டவருக்குச் சொந்தமான ஒரு சிறிய பங்களாவில் இப்பள்ளிக்கூடம் ஆரம்பமாயிற்று. பசுமை நிறச் சோலையின் சுற்றுச் சார்புடன்—கம்பீரமான தோற்றத்துடன் விளங்கியது இந்தப் பள்ளிக்கூடம் அமைந்திருந்த இடம். எட்டுக்குழந்தைகளுடன் ஆரம்பிக்கப்பட்ட இந்தப் பள்ளிக்கூடத்தில், சில ஆண்டுகளில் மேலும் சில குழந்தைகள் சேர்ந்தார்கள். குழந்தைகளின் எண்ணிக்கை பெருகவே, பள்ளிக்கூடம் வேறு ஒரு இடத்திற்கு மாற்றப்பட்டது. இந்தப் பள்ளிக்கூடத்தின் லட்சியத்திற்கேற்ப, விசேஷமாக ஒரு தனியான கட்டிடத்தைக் கட்டி, அதைப் போயக்குக்கு நன்கொடையாக அளித்தார் ஒருவர். இந்த எழில் நிரம்பிய புது இடத்தில் போயக்கின் பள்ளிக்கூடம் நன்கு வளர்ந்தோங்கத் தொடங்கியது. போயக்கின் நண்பர்களும் ஆதரவாளர்களும் அவருடைய இந்த முயற்சிக்கு அதிக உதவி செய்ய ஆரம்பித்தார்கள். 1936ம் ஆண்டு ஆரம்பத்தில் இப்பள்ளிக்கூடத்தில் பயிலும் குழந்தைகளின் எண்ணிக்கை 100 ஆக உயர்ந்துவிட்டது. 3 வயதிலிருந்து 19 வயது வரையிலுள்ள இருபால் குழந்தைகளும் இங்கே படிக்க ஆரம்பித்தார்கள். அவருடைய 9 சகாக்கள் இங்கே ஆசிரியர்களாகச் சேவை செய்தார்கள்: 18 பேர்கள் தினம் பிரத்தியேகமான பாடங்களைப் போதிப்பதற்கென இப்பள்ளிக்கூடத்திற்கு வெளியிலிருந்து வந்தார்கள். சில புதிய கட்டிடங்கள் கட்டப்பட்டன; மேலும் அவை போதாத காரணத்தினால், வெளியில் இரண்டு கட்டிடங்கள் வாடகைக்கும் அமர்த்தப்பட்டன!

1935—36ல், ஹாலந்தில் பல கல்வி மகாநாடுகள் நடந்தன. இதன் விளைவாக, ஹேகில் புதிய கல்விக் கழகத்தின் டச்சுக் கிளை ஆரம்பிக்கப்பட்டது. இக்கிளையின் சார்பாக

உலகக் கல்வி நிபுணர்களின் பிராந்திய மகாநாடு ஒன்று ஹேகில் 1936ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் நடைபெற்றது. "ஒன்றுபட்டு வாழக் கற்றுக்கொடுக்கும் படிப்பே மிகச் சிறந்த படிப்பாகும்" என்ற விஷயம்பற்றி அம் மகாநாட்டில் பல அறிஞர்கள் பேசினர்கள். இந்த லட்சியக் கல்வியைத்தான் தம் பள்ளிக்கூடத்தில் போயக் குழந்தைகளுக்கு அளித்து வருகிறர். மக்கள் சமுதாயம் இக்கலையில் தேர்ச்சி பெறுவதுதான் மிக முக்கியம் என்று அவர் கருதுகிறர்.

"மனிதன் பல பெரும் விஷயங்களை அறிந்திருக்கிறன்; ஒரு தலைமுறைக்கு முன்னதாக அற்புதங்கள்-அதிசயங்கள் என்று கருதப்பட்ட பல காரியங்களை அவன் இன்று அனுயாசமாகச் செய்துவிடுகிறன். ஆனலும் அவனல் ஒரு காரியத்தைத்தான் இன்னமும் செய்ய முடியவில்லை; அவனுடைய நுண்ணறிவினல் வடிவம் பெற்றியங்கும் பல யந்திரங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களை விநியோகம் செய்யும் பிரச்னைக்குத்தான் அவனல் இன்னும் தீர்வுகாண இயலவில்லை! எல்லோருக்குமாக அளிக்கப்பட்டவைகளை மற்றவருடன் பகிர்ந்துகொள்ள அவன் பயப்படுகிறன்! .... தன் சகோதரர்களை நம்பவும், அவர்களுக்காக இரங்கவும் அவன் இன்னமும் கற்றுக்கொள்ளவில்லை!" என்று இந்த ஹேக் கல்வி மகாநாட்டில் எழுப்பப்பட்ட கோஷம், போயக்குக்குப் புதியதல்ல! மேலும், "குழந்தைகளால், சம உரிமைகள்-சம கடமைகளின் நியாயத்தை அறியமுடிகின்றது. எனவே, நியாயத்திலிருந்து கிளம்பும் இந்தக் கோரிக்கைகளின் அடிப்படையில் குழந்தைகளுக்குப் பயிற்சி கொடுத்தால், மனிதத்தன்மை மிகுந்த ஒரு சமுதாயத்தை உருவாக்குவதில் அவர்கள் தோல்வியடையமாட்டார்கள்" என்ற நம்பிக்கையில் அவர் ஆழ்ந்திருப்பவராதலால்தான், அவருடைய பள்ளிக்கூடம் நல்ல முறையில் நடைபெறுகிறது.

"எல்லோரும் நல்ல மனிதர்களாக வாழவேண்டுமானல் அதற்கான பயிற்சி குழந்தைப் பிராயத்திலிருந்தே ஆரம்பமாக வேண்டும். இந்தப் பயிற்சியை அளிப்பவர்களாகிய ஆசிரியர்கள் குழந்தைகளைப் பயமுறுத்தக்கூடாது; நிர்ப்பந்தப் படுத்தக்கூடாது; ஆயினும், எதை வேண்டுமானலும் குழந்தைகள் செய்யட்டுமே என்று நினைத்து அவ்விதப் போக்குக்கு இடந்தரவுங் கூடாது. மற்றவர்களின் நியாயமான கோரிக்கைகளும், பூராச் சமூகத்தின் உரிமைகள் — நலன்கள் — இவ்விரண்டும் கட்டு மீறிக் கிளம்பிவிடக்கூடாது; அத்தகைய சுயநலத்தை அடக்கவல்ல தடைகளாகவும் அவை பரஸ்பரம் இருக்கவேண்டும்; தானே ஒழுங்கினை வகுத்துக்கொண்டு, அவ்வொழுங்கின் வரம்பினில் வளருகின்ற சமுதாய வாழ்வினை அப்போதுதான் நாம் தோற்றுவிக்கமுடியும். சம்பவங்களின் சம்பந்த முக்யத்வத்தைச் சீர்தூக்கிப் பார்த்து, சரியான சமயத்தில் அவைகளில் ஈடுபடத் தயாராயிருப்பதுதான் முதியவர்களின் கடமை யாகும். தங்கள் அனுபவங்களைக் கொண்டுமட்டும், குழந்தைகள் அறிந்துகொள்ளுவதை நான் அனுமதிப்பதில்லை. அவர்கள் சில அனுபவங்களைப் பெறமுடியாதபடி நான் தடுக்கிறேன்; வேறு சிலவற்றை அவர்கள் பெற நான் அனுமதிக்கிறேன்."

"எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவுக்கு நாம் குழந்தைகளுக்குப் பின்னல் வேண்டுமென்றே ஒதுங்கியிருக்கவேண்டும். ஆயினும், எந்த நேரத்தில் முன்வந்து செயல் புரியவேண்டும் என்பதும் நமக்குத் தெரிந்திருக்க வேண்டும். அவ்விதச் செயல் வேகத்தால்தான், குழந்தைகளின் மனிதத் தன்மை சிறப்புடன் ஓங்குவதற்கான ஒரு அமைதியான சுற்றுச் சார்பைச் சிருஷ்டிக்க முடியும்." இதுவே, கீஸ் போயக் நடத்தும் ஆதாரப் பள்ளிக்கூடத்தின் லட்சியமாகும்.

இனிமேல், பள்ளிக்கூடம் எப்படி நடைபெறுகிறது? என்னென்ன விஷயங்கள் போதிக்கப்படுகின்றன? எப்படிப் போதிக்கப்படுகின்றன? என்பதைப்பற்றி ஆராய்கிறேன்.

பில்தோவனில் கீஸ் போயக் நடத்தும் பள்ளிக்கூடத்திற்கு அந்நாட்டு மொழியில் "வெர்க் பிளாட்ஸ்" என்று அழைக்கப்படுகிறது. 'தொழில் செய்வதற்கோரிடம்' என்பது தான் நமது மொழியில் அதன் பொருளாகும்.

இங்கு படிக்கும் குழந்தைகள் மிகவும் அமைதியாக இருக்கும் பழக்கத்தைப் பெற்றிருக்கிறார்கள். இந்நாளில், எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் அமைதி நிலவுகின்றது! பலவந்தமாகவோ அல்லது செல்வாக்காலோ அல்லது மேற்பார்வையிடும் ஆசிரியராலோ இந்த அமைதி இப் பள்ளிக்கூடங்களில் நிலை நிறுத்தப்படுகின்றது என்றுதான் சொல்ல வேண்டும்! மன வளர்ச்சிக்கு இவ்வித அமைதி உதவி செய்கின்றது என்பது உண்மையே; ஆயினும், ஆழ்ந்த போதனை முறையில் நம்பிக்கை கொண்டுள்ள போயக்குக்கு, அமைதியை நிலைநாட்டும் இம்முறை பிடிக்கவில்லை. குழந்தைகள் ஒன்றோடொன்று பேசாமலிருக்க முடியாது என்பார்கள் சிலர். இது உண்மைதான்! இங்கே, குழந்தைகள் பரஸ்பரம் பேசிக்கொள்வதற்காகக் குறிப்பிட்ட காலங்கள் ஒதுக்கப்படுகின்றன. குழந்தைகள் மற்ற சமயங்களில் படிக்கின்றன; பல வேலைகளைச் செய்கின்றன. அப்போது அங்கே நிலவுகின்ற பூரண அமைதி உணர்ச்சி யூட்டுவதாக இருக்கிறது. "குழந்தைகள் கொம்மாளமடிக்கத்தான் பிரியப்படுகின்றனர்" என்பவர்களின் கூற்றைப் பொய்யாக்குகிறார்கள் இப் பள்ளிக்கூடக் குழந்தைகள்!

இந்தக் குழந்தைகள் சமுதாயத்தின் அன்றாட வாழ்க்கை அதிக ருசிகரமானதாகும். இக் குழந்தைகளுக்கு

உருப்படாத பரிட்சைகளில்லை; பொய்யான 'மார்க்'குகள் இல்லை; கொடுமையான தண்டனைகள்—வேஷப் பரிசுகள் இல்லை; அவர்களைப் பயமுறுத்துவாருமில்லை!

ஆனாலும், அவர்களுக்கு மகத்தான பொறுப்புகள் இல்லாமலில்லை. அவர்களே கூடி, பேசி முடிவுசெய்து கொள்கின்றபடி பல வேலைகளை அவர்கள் செய்கிறார்கள். அவர்களுடைய பாடப் படிப்புடன் சம்பந்தப்பட்ட வேலை களைத் தவிர, பள்ளிக்கூடக் கட்டிடங்களைச் சுத்தமாகவும், ஒழுங்காகவும் வைத்திருக்கும் வேலைகளை அவர்கள்தான் செய்கிறார்கள்; இதற்கெனத் தனிச் சிப்பந்திகள் கிடையாது; ஆசிரியர்களுக்கும், 'ஹாஸ்டல்' மாணவர்களுக்கும் தேவை யான ஆகாராதிகளை அவர்களேதான் தயார் செய்யவேண் டும்; பள்ளிக்கூடத்திற்கு அவசியமான மரச்சாமான்களையும் போதனைக்கு அவசியமான சாதனங்களையும் அவர்களே தான் உற்பத்தி செய்யவேண்டும்; அங்கே, குழந்தைகள் மிக எளிமையான வாழ்க்கையை நடத்துகிறார்கள். ஆடம் பர வாழ்வினால் நம் குழந்தைகள் மகிழ்ச்சியடைய முடியும் என்று சிலர் தவறாக நினைக்கிறார்கள்! இந்த ஆடம்பரத் திற்கு அங்கே இடமில்லை!...

சாந்தி தரும் மகிழ்ச்சிகள்—சங்கீதம்—உடற் பயிற்சி, கனிகள்—மலர்கள், சுத்தமான தண்ணீர், சுத்தமான காற் றோட்டம்—இவை நடுவேதான் அக் குழந்தைகளின் சமு தாயம் ஜீவகளையுடன் நடைபெறுகிறது!

குழந்தைகளின் எண்ணிக்கை அதிகப்படுத்தப்படுவ தில்லை. கூட்டம் பெருகிவிட்டால், குழந்தைகளுக்கு வாழ்க்கை பாரமாய்விடுகின்றது! தங்கள் அன்றாட வாழ் வினை முறைப்படுத்திக்கொள்ள அவர்களுக்குக் கஷ்டமேற் படுகிறது என்பதற்குத்தான், 'பாரமாய்விடுகிறது' என்று சொன்னேன். "குடும்ப வாழ்க்கை அடிப்படையில் குழந்தை களின் சமுதாயம் வளரவேண்டும்" என்று போயக்

கருதுகிருர். உண்மையான குடும்ப வாழ்க்கை வளர்க்கும் போக்கில்தான் எல்லாக் கல்வியும் இருக்க வேண்டும். மனித சமுதாயம் இன்னும் அதிகத் துன்பங்களுக்கும் ஊழல்களுக்கும் இரையாகிச் சீர்கேடு அடைவதைத் தடுக்கவும், புதிய கலாசாரத்தை உருவாக்கவும், இம்மாதிரிக் கல்வியைத் தவிர வேறு ஒன்ருலும் இயலாது.

நம்பிக்கை யின்மையாலும், மனத் தளர்ச்சியிஞலும் இன்று எண்ணற்ற குடும்பங்கள் பள்ளத்தில் வீழ்ந்து கிடக்கின்றன. இதன் விளைவை, இன்றையப் பள்ளிக்கூடங்களிலும், 'ஒளியிழந்த' குழந்தைகளிடத்திலும் நாம் காணமுடிகின்றது!

இப்பள்ளிக்கூடத்தில் 'போர்டிங்' முறை எல்லோருக்கும் பொருந்தியதாக இருக்கவில்லை! பள்ளிக்கூட 'ஹாஸ்ட'லிலேயே தங்கிக் குழந்தைகள் படிப்பதை போயக் சிலாகிப்பதில்லை. குழந்தைகள் பள்ளிக்கூட நேரம் போக மற்ற வேளைகளில், தங்கள் குடும்பச் சூழ்நிலையிலேயே இருக்கவேண்டும் என்பதையே அவர் அதிகம் வற்புறுத்துகிருர். அங்கே இருக்கும் 'ஹாஸ்டல்' தூரத்திலிருந்து வரும் குழந்தைகளுக்காகவே இருக்கின்றது.

  

ஹாலந்து பள்ளிக்கூடங்களில் பொதுவாகப் பின்பற்றப்படும் பழக்கத்திற்கு மாருன பழக்கமொன்றை போயக்கின் பள்ளிக்கூடம் பின்பற்றுகிறது. பகல் 12 மணிக்கும் பிற்பகல் 2 மணிக்கும் இடையே உள்ள நேரத்தில் மற்ற பள்ளிக்கூடங்களில் படிக்கும் குழந்தைகள், ஒரு சிலரைத் தவிர, பகல் போஜனத்திற்காக தங்கள் வீடுகளுக்குச் செல்கிருர்கள். ஆனுல் இப்பள்ளிக்கூடத்தில் மட்டும் குழந்தைகள் எல்லோரும் பகல் போஜனத்திற்காகப் பள்ளிக்கூடத்திலேயே தங்கிவிடுகிருர்கள். "குழந்தைகள் எல்லோரும் ஒரே இடத்தில் பொதுவான—இடத்தில்

அமர்ந்து உணவு சாப்பிடும் பழக்கம் வகுப்பு சௌஜன்யத்தை வளர்க்கவல்ல ஒரு சக்தியுள்ள வாய்ப்பு" என்று போயக் கருதுகிறார். ஆகையால்தான் அவருடைய பள்ளிக்கூடத்துக் குழந்தைகள் பகல் போஜனத்திற்காக இடைவேளை ஓய்வு நேரத்தில் தங்கள் வீடுகளுக்குச் செல்லாமல், ஆசிரியர்களுடன் சேர்ந்து பள்ளிக்கூடத்திற்குள்ளேயே சாப்பிடுகிறார்கள். மேலும், இப் பழக்கத்தின் விளைவாக, சாப்பாடு முடிந்தவுடன் ஒரு மணி நேர ஓய்வும் கிடைக்கிறது. இவ்வேளையில், குழந்தைகள் சங்கீதம் கேட்கிறார்கள்; உரக்கப் படிக்கிறார்கள்; சதுரங்கம் விளையாடுகிறார்கள்; பிறகு, அரைமணி நேரம் மைதானத்தில் கால் பந்தாட்டம் முதலிய விளையாட்டுகளில் ஈடுபடுகிறார்கள்.

  

இங்கே குழந்தைகள் 'ஆள'ப்படுவதில்லை. இதனால் குழந்தைகள் மற்றவரை மதிக்கும் பழக்கம் இங்கேயில்லை என்று எண்ணிவிடக் கூடாது. ஒவ்வொருவருடனும் மரியாதையுடன்—அன்புடன் பழக வேண்டுமென்ற சீரிய உணர்ச்சியைக் குழந்தைகள் தாங்களாகவே பெற்றிருக்கிறார்கள். "யந்திரச் சுழற்சி போன்றதொரு அதிகாரச் சுழற்சி கூடவே கூடாது" என்கிறார் போயக்.

ஆத்மாவின் ஆக்ஞைக்கு வணங்க வேண்டுமென்பதே போயக்கின் விருப்பமாகும். குழந்தைகளின் தலைவரோ அல்லது தலைவியோ இங்கில்லை; குழந்தைகளின் 'கோர்ட்'டுகளுமில்லை; ஆனாலும், இங்கே கட்டுபாடு நிலவுகின்றது!

**பள்ளிக்கூடத்தின் செயல்முறை அம்சங்கள் :**

இப்பள்ளிக்கூடத்தில் தவறாது நடப்பது வாராந்திரக் கூட்டமேயாகும். பதட்டமோ அல்லது ஆர்ப்பாட்டமோ இல்லாமல் இக்கூட்டத்தில் எல்லா விஷயங்களும் விவாதிக்கப்படுகின்றன. பிரதி சனிக்கிழமையிலும் காலை 9

மணிக்குப் பள்ளிக்கூடத்தின் ‘ தொழிலாளிகளும் ’—(பெரிய குழந்தைகள்) ஆசிரியர்களும், ஒரு பொதுக்கூடத்தில் கூடு கிருர்கள். ‘ தலைவரும் ’, ‘ எழுத்தாளரும் ’ தங்கள் மேஜை களுக்குப் பக்கம் அமருகிருர்கள், சென்ற கூட்ட நடவடிக் கைகளைப்பற்றியும், இக்கூட்டத்தில் வரும் விவாத விஷ யங்களைப் பற்றியும் குறிப்புகளடங்கிய ‘ மினிட் ’ புத்தக மொன்று ‘ எழுத்தாளர் ’ வசம் இருக்கும். கூட்டம் பிரார்த் தனையுடன் ஆரம்பமாகும். பிறகு, ‘ தலைவர் ’ சென்ற கூட்ட விவரத்தை மெதுவாகவும், அழுத்தமாகவும் படிப் பார். பிறகு, பெயர்கள் எழுதப்பட்டிருக்கும் அட்டை அடையாளச் சீட்டுகள் குலுக்கப்படும். எவருடைய பெயர்ச் சீட்டு முதலில் எடுக்கப்படுகிறதோ, அவர் ‘தலைவ’ ரின் மேஜை அருகில் வரவேண்டும். ‘ தலைவ’ரால் படிக்கப் பட்ட சென்ற கூட்ட நடவடிக்கைகளை அவர் தன்னுடைய நடையில் திருப்பிச் சொல்லவேண்டும். அவ்வாறு அவ ரால் முடியவில்லையென்ருல், ‘ மினிட் ’ புத்தகத்தைப் பார்த்தே உரக்கப் படிக்க வேண்டும்.

இம்முறையின்மூலம், குழந்தைகளால், தங்களுடைய சென்ற கூட்டத்தில் நடைபெற்ற விவரங்களைப் பரிசீலனை செய்யவும், ஞாபகப்படுத்திக் கொள்ளவும் பழக்கப்படுத் திக்கொள்ள முடிகின்றது.

இதற்குப் பிறகு, சென்ற கூட்டத்தின் பாக்கிப் பிரச்சினை ஏதாவது இருந்தால் அது முதலில் விவாதிக்கப் பட்டு, முடிவு காணப்படுகிறது. பிறகு, அந்தப் புதிய வாரத்திற்கென வகுக்கப்பட்டிருக்கும் நடைமுறைகளைத் ‘ தலைவர் ’ கூட்டத்தினருக்கு விளக்குகிருர். அந்த வாரம் முழுதும், ஒரு மத்திய இடத்தில் காரியக் கிரம விவரணம் குறிக்கப்பட்ட அட்டை தொங்கவிடப்படுகிறது. ஒவ் வொரு காரியத்திற்கும் வரிசைக்கிரமமான எண் அளிக்கப் படுகிறது. எவருக்காவது எந்தக்குறிப்பிட்ட காரியத்தைப்

பற்றியேனும் அடுத்த கூட்டத்தில் விவாதம் செய்ய வேண்டுமென்றிருந்தால், அவர் அந்தக் காரியத்தைக் குறிக்கும் எண்ணை ' தலைவரிடம் முன்னதாகவே தெரிவித்துவிட வேண்டும்.

விவரணப்படி முறையாகக் கூட்டத்தில் விவாதிக்கப்பட வேண்டிய சென்ற வார விஷயங்களின் ஜாபிதா பின்வருமாறு :—

1. ஒழுங்குப் பிரச்னைகள்.
2. சென்ற கூட்டத்தின் நடவடிக்கைகளைப் படித்தல்.
3. சென்ற வார வேலைகளைப் பற்றிய விமர்சனம்.
4. வெளியாருடன் பழகியது பற்றியும், ஆசிரியர்களுடன் பழகியது பற்றியும், தங்களுக்குள்ளேயே பழகிக்கொண்டது பற்றியும் விவாதித்தல்.
5. அமைதியைப் பராமரித்த விதம் பற்றிய விவாதம்.
6. ஒப்புக்கொள்ளப்பட்ட பொறுப்புகளை அவரவர் நிறைவேற்றிய விதம் பற்றிய விமர்சனம்.
7. தொழிற்சாலை – அதன் சாதனங்களைப் பற்றிய விவாதம்.
8. சுத்தமாயிருந்தது பற்றிய பேச்சு.
9. எதையும் குறித்த காலத்தில் செய்ததுபற்றி விவாதித்தல்.

பிறகு, அந்த வாரத்திற்கான வேலைகளைப்பற்றிப் பேசுவது ஆரம்பமாகும். யார் சமைப்பது ? சாப்பாட்டு அறையை யார் சுத்தம் செய்வது? எவர் மணியடிப்பது ?... இவைபோன்ற நடைமுறைகள் விவாதிக்கப்படும்

இதற்குப்பிறகு, சென்ற வாரம் நடைபெற்ற முக்கிய சம்பவங்களைப் பற்றியும், பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப் பட்ட அல்லது அளித்த நன்கொடைகள்—பரிசுகளைப் பற்றியும், பள்ளிக்கூடத்தின் கடிதப் போக்கு வரத்து பற்றியும், புதியதாக நிர்மாணிக்கப்பட்ட விஞ்ஞானக் கருவி, அதன் வேலைகளைப் பற்றியும் விமர்சனம் நடைபெறும்.

இத்தனை விவாதங்களும், விமர்சனங்களும், பேச்சுகளும் குறித்து வைக்கப்படும். பிறகு மாணவர்களால், நடத்தப்படும் ' தேனீ ' பத்திரிகை பற்றிய விமர்சனம் தொடங்கும் இப்பத்திரிகையில் குழந்தைகளே எழுதுகின்றனர்.

சிறிய குழந்தைகளும் இம்மாதிரித் தங்கள் கூட்டத்தை நடத்துகின்றனர். ஆறு அல்லது ஏழு வயதுள்ள ஒரு குழந்தையே அவர்களின் ' தலைவர்! ' ஒவ்வொரு கூட்டத்திலும் ஒரு ' கனம் அங்கத்தினர் ' குழந்தை தனது முக்கியமான ' முதல் பிரசங்க'த்தைச் செய்யும்! பெரிய குழந்தைகளின் கூட்டத்திற்கும் இவர்களின் கூட்டத்திற்கும் ஒரே ஒரு வித்தியாசந்தானுண்டு. சிறிய குழந்தைகளால் ' மினிட் ' புத்தகம் எழுதமுடியாததால், இக்கூட்டத்தின் ' எழுத்தாளர் ' ஒரு பெரிய குழந்தையாகத்தானிருக்கும். இதுதான் அந்த வித்தியாசம்!

நன்கு திட்டமிடப்பட்ட சமுதாய வாழ்விற்கு இம்மாதிரியான வாராந்திரக் கூட்டம் எவ்வளவு முக்கியமானதென்பதை நாம் தெரிந்துகொண்டோம். அதைப்போல, மாதத்திற்கொருமுறையும் கூட்டம் நடக்கிறது. இக்கூட்டம் " வேலைப் பிரிவினைக் கூட்டம் " என்று அழைக்கப்படுகிறது.

இம்மாதாந்திரக் கூட்டம் குழந்தைகளின் பல்வேறு " பொறுப்புக்களை"ப் பிரித்து நிர்ணயிக்கிறது. இப்பொறுப்

புக்களை நிர்ணயித்து அவைகளுக்குத் தலைமை தாங்குகிற வர் " பொது நிர்வாகி " என்று அழைக்கப்படுகிறார். இப் பொது நிர்வாகி அந்த மாத வேலைகளை வகுத்து, தலைமை தாங்கி நடத்தி வைப்பதற்காகக் குழந்தைகளிலிருந்தே தேர்ந்தெடுக்கப்படுகிறார்! இங்கே, " வேலை வருஷம் ' 4 வாரங்கள் கொண்ட 10 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக் கின்றன. ஒவ்வொரு 4 வாரங்களைக் கொண்ட மாதத்திற் குத்தான் ஒரு பிரிவு என்று அழைக்கப்படுகிறது. முதல் வாரத்தில் சிறிய குழந்தைகள் இந்த வேலைகளில் ஈடுபட வேண்டும் ; அதாவது இந்தப் ' பரிட்சை'களில் அவர்கள் தேறுவதற்குச் சந்தர்ப்பம் அளிக்கப்படுகிறது. 4-வது வாரத்தின் ' வெள்ளிக்கிழமைதான் வேலைப் பிரிவினைக் கூட்டம் ' நடைபெறும் ; அதையடுத்து வரும் சனிக்கிழமை விடுமுறைநாள்; அன்று தொழிற்சாலை மூடப்பட்டிருக் கும். இம்மாதிரியாக, வேலைகளைப் பிரித்து முறைப் படுத்திச் செய்யும் " காலப் பழக்கம் " குழந்தைகளுக்குப் போதிக்கப்படுகிறது.

தங்களிடம் ஒப்படைக்கப்படும் பொறுப்புக்களை சரியாக நிறைவேற்றாத குழந்தைகள் அவைகளை மீண்டும் ஒரு மாதத்திற்குச் செய்தாகவேண்டும். தங்களிடம் எவ் வளவு சுத்தமாக ஒப்படைக்கப்பட்டனவோ—அவ்வளவு சுத்தமாக அவ்வேலைகளை ஒப்புக்கொண்ட குழந்தைகள் நிறைவேற்றி, மற்ற " தொழிலாளி "களின் கோஷ்டியிடம் ஒப்புவிக்கவேண்டும் என்ற உணர்ச்சி குழந்தைகளுக்கு ஏற்படுகிறது.

அறைகள், நடைபாதைகள், கக்கூஸ்கள், கட்டிடங் களின் இதர பாகங்கள், கட்டிடங்களைச் சுற்றியுள்ள மைதானம் முதலியவைகளைச் சுத்தமாக வைத்திருப்பது குழந்தைகளின் வேலையேயாகும். பொது நிர்வாகத்தை மேற்பார்வையிடவும், பொது ஸ்தாபன வேலைகளை நடத்த

-வும் ஒரு கோஷ்டியிருக்கிறது; கடிதங்கள் எழுதவும், நன்கொடையாளர்களுக்கு வணக்கம் தெரிவிக்கவும், வராமலிருப்பவர்களின் ஜாபிதாவை வைத்திருக்கவும், நூல் நிலையத்தை நிர்வகிக்கவும் செய்யப்படும் வேலைகளே பொது ஸ்தாபன வேலைகள் எனப்படுபவையாகும். வாராந்திர—மாதாந்திரக் கூட்டங்களை நடத்தும் ("தலைவர்"கள்; "எழுத்தாளர்"கள் அடங்கியது) கோஷ்டியுமிருக்கிறது; உணவு தயாரிப்பதுமுதல் பரிமாறுவது, பாத்திரங்களைக் கழுவுவது, சாப்பாட்டு ஹாலைக் கழுவுவது போன்ற வேலைகள்வரையில் கவனிப்பதற்கென ஒரு கோஷ்டியுண்டு. தவிரவும், "தேனீ" பத்திரிகையை நடத்துவதற்கென ஒரு கோஷ்டியும் இருக்கிறது. பொறுப்பேற்றுக் கொள்ளும் குழந்தைகள் வராமலிருந்தாலோ, அல்லது நோயுற்றுவிட்டாலோ, அவர்களுக்குப் பதிலாக வேலை செய்வதற்கு "பதிலிகள்" நியமிக்கப்படுகிறார்கள். வேலை செய்வதற்கு உபயோகப்படுத்தப்படும் கருவிகள் வேலைக்கு முன்பும்-பின்பும் அந்தந்த இடங்களில் ஒழுங்காக வைக்கப் பட்டிருக்கவேண்டும். பகல் போஜனம் முடிந்தவுடன், பொது நிர்வாகியான அவனோ அல்லது அவளோ ஒவ்வொரு அறைக்கும் போய், கருவிகள் எல்லாம் அந்தந்த இடங்களில் ஒழுங்காக வைக்கப்பட்டிருக்கின்றனவா என்று கேட்கிறான்; அல்லது கேட்கிறாள். அந்தந்த இடங்களில் உள்ள தொழிலாளிகளே அவனுக்கு அல்லது அவளுக்குப் பதில் சொல்லியாகவேண்டும். ஒவ்வொரு அறைக்கு முன்பாகவும், சிவப்பு நிற வர்ணம் பூசப்பட்ட பலகை சுவரில் பதிக்கப்பட்டிருக்கும். அப்பலகைமீது பல கொக்கி ஆணிகள் அறையப்பட்டிருக்கும். அவைகளில் தான் வேலைக் கருவிகள் மாட்டப்பட்டிருக்கும், காணாமல்போகும் கருவிகளுக்குத் தொழிலாளிகளே ஜவாப்தாரி யாவர்.

"மாதக் கடிகாரம்" ஒன்று இருக்கிறது. நான்கு வாரங்களின்-அதாவது வேலை மாதத்தின் ஒவ்வொரு நாளை

யும் குறிக்க அதில் கோடுகள் வரையப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு நாள் காலையிலும், அந்த நாளுக்கு எதிராக முள்ளைத் திருப்பி வைப்பது பொது நிர்வாகியின் பொறுப் பாகும். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அறையையும் சரி பார்க்கக் கமிட்டி ஒன்று இருக்கிறது. இக்கமிட்டிக்கு 'இன்ஸ்பெக்டிங் கமிட்டி'' என்று பெயர். இவைகளைத் தவிர, வேறு மூன்று விஷயங்களையும் இங்கே குறிப்பிடாம லிருக்க முடியாது.

1. " வேலை வேகக் குறிப்புப் புத்தகம்." (Logbook)

2. " சுவர்-பத்திரிகை." (Wall-Journal)

3. " கடை" (Shop)

10 அங்குலம் அகலமுள்ள காகிதத்தில் ஒவ்வொரு தொழிலாளியினுடைய வேலைகளைப் பற்றிய விவரங்களையும், படங்களையும் ஒரு கோஷ்டி குறித்து வைக்கிறது. இம் மாதிரியான குறிப்புகளடங்கிய காகிதங்கள் சுருளாக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. கண்ணாடிப் பெட்டிகளுக்குள், இவை வேண்டும்போது பிரித்துக்கொள்ளும்படியாக வைக் கப்பட்டிருக்கின்றன.

சுவர்-பத்திரிக்கையில்,குழந்தைகளின் "தொழிற்சாலை" சமுதாயத்தில் தினசரி நிகழும் சம்பவங்களைப்பற்றிய கேலிச் சித்திரங்கள் பொறிக்கப்பட்டிருக்கும். இவை மிக ஹாஸ்யச் சுவையுடன் வரையப்பட்டிருக்கும்; குழந்தை களின் "சமுதாய" வாழ்வைத் திருத்துவதற்கு உதவும் ரீதி யில் குணதோஷங்களை எடுத்துக்காட்டும் சித்திரங்களும் வரையப்பட்டிருக்கும். மூன்ருவது "கடை" நிர்வாகத்தைப் பற்றியதாகும். இக்கடையைக் குழந்தைகளே நடத்து கின்றன. குழந்தைகளின் தேவைக்கான அத்தனை பள்ளிக் கூடச் சாமான்களும் இங்கே விற்கப்படுகின்றன. இக் கடையில் 24 பிரிவுகள் இருக்கின்றன. ஒவ்வொரு பிரிவி

லும் சாமான்கள் நம்பர் போட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பிரிவுக்கு முன்பும், ஒரு அட்டைப் போர்டு தொங்கவிடப்பட்டிருக்கிறது. சாமான் வாங்கும் ஒவ்வொரு குழந்தையும் தான் எடுத்துக்கொள்ளும் சாமான்களின் குறியீட்டு அக்ஷரங்களையும், தன்னுடைய பெயரையும், தேதியையும் ஒரு பசைக் காகிதத்தில் எழுதி, அதை அந்த போர்டில் ஒட்டிவிடவேண்டும்.

இனிமேல், தொழிற்சாலைச் சமுதாயத்தில் குழந்தைகள் செய்யும் கைவேலைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறேன்.

இங்கே கையாளப்படும் கருவிகள், சாதனங்கள் எல்லாம் குழந்தைகளால் செய்யப்பட்டவைதான். புத்தகங்களை வைத்துக்கொள்ளும் பெட்டிகள், சாப்பாட்டு அறை மேஜைகள், பெரிய-நீளமான பெஞ்சுகள், நாற்காலிகள்-இவைகளெல்லாம் குழந்தைகளால் செய்யப்பட்டவையே. மேலும் சிமெண்டு, காங்கிரீட் சாமான்களையும் குழந்தைகளே செய்கின்றன ; சிறு குளங்களை வெட்டுகின்றன ; மரங்களைத் துண்டு போடுகின்றன ; பூஞ்சோலையை அமைக்கின்றன ; பொதுவாக எல்லாச் சுத்தம் செய்யும் வேலைகளையும் செய்கின்றன ; அட்டைப்பெட்டிகள் செய்வதுபோன்ற சுலபமான வேலைகளையும் செய்கின்றன ; தங்களுடைய அன்றாட வேலைகளைப் பற்றிய வேலை விவரப் புத்தகத்தையும் அவர்கள் கூடவே தயாரிக்கிறார்கள். இப்புத்தகம், பள்ளிக்கூடத்தின் எதிர்கால உபயோகத்திற்காக, ஒரு கலைக் களஞ்சியமாக வளர்ந்து வருகிறது என்பதை இங்கே குறிப்பிட வேண்டும்.

இந்தக் கைவேலைகளால் தயாரிக்கப்படும் சாமான்கள் பள்ளிக்கூடத் தேவைக்கு அவசியமானவைதான் என்பதைக் கவனிக்கவேண்டும். “ இவைகள் மனத்தத்துவக் காரணங்களுக்காகவும், நன்றாக இருக்கின்றன என்பதற்காகவும் செய்யப்படவில்லை ; இவைகள் எங்களுக்குத் தேவையாக

இருப்பதால்தான் செய்யப்படுகின்றன என்பதை எவரும் உணரத் தவறக் கூடாது' என்கிருர் போயக். இங்கே வேலே செய்யும் சகாக்களுக்கு, அவர்களின் குறைந்த பட்சச் செலவுகளுக்காகவே பணம் கொடுக்கப்படுகின்றது என்பதையும் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

இந்தக் கை வேலேப் பயிற்சி எவ்வளவு முக்கியமாகக் கருதப்படுகின்றதோ, அவ்வளவு முக்கியமாகப் பாடமூலப் படிப்பும் கருதப்படுகின்றது. "சமூகத்திற்குத் தேவையான எல்லாவிதச் சாமான்களேயும் குழந்தைகள் கோஷ்டி கோஷ்டியாக ஒரு நிலே மனத்துடன் இருந்து செய்யும் காட்சி எனக்கு எவ்வளவு அற்புதமாயிருக்கிறது! குழந்தைகள் வேலே செய்யப் பிரியப்படுகின்றன என்பதை இதைக் காட்டிலும் வேறு எந்தக் காட்சி நன்ருக எடுத்துக் காட்ட முடியும்? அவர்கள் கை வேலே செய்கிருர்களா? அல்லது மூளே வேலே செய்கிருர்களா? என்பதைப் பற்றிக் கவலேப்படத் தேவையில்லே! ஏனெனில், ஒன்றில்லாமல் மற்ருென்று வாழமுடியாது என்பதை அவர்கள் புரிந்து கொள்ளத் தொடங்கிவிட்டார்கள். எந்த வேலேயாயினும் அதன்மீது அவர்களுக்கு விருப்பம் ஏற்பட்டுவிட்டது தான் பெரிய காரியம்! ஒழுங்கான சமுதாய வாழ்வின் உண்மையான அடிப்படையே தொழிலுக்கு வந்தனே செய்வதுதான் என்பதை நாம் அனேவரும் உணரவேண்டிய காலம் வந்துவிட்டது. போயக்கின் இந்த அனுபவஞான மொழிகளே நாம் கவனிக்கப் போகிருேமா?...

  

தங்களுடைய குழந்தைகள் எல்லாவற்றையும் பள்ளிக் கூடத்திலேயே பூரணமாகக் கற்றறிந்துகொள்ளவேண்டுமென்ற ஆசையும் ஆர்வமும் பெற்ருேர்களிடம் இன்று பொங்கித் ததும்பி நிற்பதைக் காண்கிருேம்! இதன் விளேவு என்ன வென்பதை நீங்கள்தான் தினந்தோறும் பார்க்கிறீர்

களே ! எல்லாப் 'படிப்பும்' குழந்தைகளுக்கு திணிக்கப்படுவ தால் அவர்கள் எங்கே உப்பிப்போய் வெடித்து விடுவார் களோ என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது !

குழந்தைகளுக்கு, வீடுகளில் செய்வதற்காக 'வீட்டு வேலைகள்' ஏராளமாகக் கொடுக்கப்படுகின்றன. தாங்க முடியாத இந்த 'வீட்டு வேலை'ப் பளுவை, தங்களுடைய குழந்தைகளுக்காக பெற்றோர்களே ஏற்கவேண்டிய கதி ஏற்பட்டிருக்கிறது ! எப்படியாவது தங்கள் குழந்தைகள் 'பாஸ்' பண்ணவேண்டும் ; 'செர்டிபிகேட்' பெறவேண்டும் ; இதுவே பெற்றோர்களின் அவா ! இதனால்தான், பெற்றோர் களே தங்களுடைய குழந்தைகளின் 'வீட்டு வேலை'களைக் கூடச்செய்யும் பரிதாப நிலைமை ஏற்பட்டுவிட்டது ! ஜுன், ஜுலை மாதங்களில் எங்கும் ஒரே பரபரப்பு ! ''பரீட்சை'' என்ற கனமேகம் குழந்தைகளின் தலைக்கு மேலே பயங்கர மாய்த் தொங்குகிறது! எண்ணற்ற குழந்தைகள் பரீட்சைக் குத் தங்களைத் தயார்செய்துகொள்ளக் கடினமாக உழைத்து நலிந்து விடுகிறார்கள் ! பரீட்சையில் தேறாத குழந்தைகளின் முடிவோ சோக முடிவாகியும் விடுகின்றது !

இந்த மோசமான நிலைமைக்குப் பரிகாரம் கண்டாக வேண்டுமென்று போயக் முடிவு செய்தார். குழந்தைகளின் எதிர்கால வாழ்வுக்கு உண்மையில் தேவையான அளவு படிப்பு அவர்களுக்குப் போதுமென்று அவர் தீர்மானித் தார். மேலும், குழந்தைகளுக்கு இயற்கையாயிருக்கும் மேதை, திறமை, விருப்பம்—இவைகளின் அடிப்படையில் அவர்களுடைய கல்வியைத் தனிப்படுத்தி – தரப்படுத்தி அவர்களை நிபுணர்களாக்கும் ரீதியில் கல்வித் திட்டம் இருக்கவேண்டும் என்று அவர் முடிவு செய்தார். தற்காலம் பின்பற்றப்படும் முறைக்கு முற்றிலும் மாறானதொரு முறையை அவர் பின்பற்றத் தொடங்கினார். அவர் தனது பள்ளிக்கூடத்தில் சொல்லித்தரப்படுவதற்காக, பாடங்களை

யெல்லாம் தொகுதிப்படுத்தினர்; ஒவ்வொரு தொகுதிக்கும் ஒரு வர்ணத்தை நிர்ணயப்படுத்தினர் ; இப்பள்ளிக்கூடத்தில் ஒவ்வொரு பாடமும் சில பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன ! மொத்தத்தில் 400 பாகங்களிருக்கின்றன ; மனப் பாடம்—உழைப்புப் பாடமென்ற ரீதியிலும், மெட்ரிகுலேஷன் பரிட்சை வரையிலும் இப்பாடங்கள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு குழந்தைக்கும் இந்த விவரங்களடங்கிய புத்தகமொன்று கொடுக்கப்படுகிறது. அந்த விவரணத்தில் அடுத்த இரண்டு அல்லது மூன்று வருஷங்களில் அவர்கள் படித்துத் தேறவேண்டிய பாடங்களும், இஷ்ட பூர்வமாக அவர்கள் படித்துக்கொள்ளப் பிரியப்படும் பாடங்களும் அடங்கியிருக்கின்றன. மாதத்திற்கு இரு முறை அவர்களுடைய படிப்பைச் சோதிக்க 'பரிட்சை' நடைபெறுகிறது. இவ்விதப் பரிட்சைகளில் தேறும் மாணவர்களுக்கு செர்டிபிகேட்டுகள் வழங்கப்படுகின்றன. இங்கு அளிக்கப்படும் செர்டிபிகேட்டுகளை ஹாலந்து சர்க்கார் இப்போதுதான் அங்கீகரிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். இங்கு அளிக்கப்படும் செர்டிபிகேட்டுகளைக் கொண்டு குழந்தைகள் வேறு உயர்தரப் பள்ளிக்கூடங்களில் ஆரம்பத்தில் சேர முடியாதிருந்தன. ஆயினும், அந்த நிலைமையும் இன்று மாறத் தொடங்கிவிட்டது. மிகச் சிறந்த கல்வி நிபுணர்கள் இந்தப் பள்ளிக்கூடத்தின் பரீட்சைக்கு மதிப்புக்கொடுக்கத் தொடங்கிவிட்டார்கள். இதர பள்ளிக்கூடங்களும் இந்தப் பள்ளிக்கூடத்தையும்—இதன் தேர்வு முறையையும், இதன் தரத்தையும் மதிக்கத் தொடங்கியிருக்கின்றன !

ஒரு குறிப்பிட்ட பாடம் சம்பந்தமான பரிட்சையை எழுதத் தயார் செய்துகொள்ளுவதற்காக, குழந்தை வேலை அறைக்குப்போகவேண்டும். அந்தக் குறிப்பிட்ட பாடத்திற்கான பரிட்சைக்கு எவ்வாறெல்லாம் தயார் செய்துகொள்ள

வேண்டுமென்ற குறிப்புகக்ளடங்கிய அட்டைகள் நிறைந்த ஒருபெட்டி அவ்வறையில் வைக்கப்பட்டிருக்கும். பரிட்சை சம்பந்தமான எல்லா நடவடிக்கைகளைப் பற்றியதும், எழுத்து வேலைகளைப் பற்றியதும், படிப்பது பற்றியதும், மனப் பாடம் செய்வது பற்றியதுமே அக் குறிப்புகளாகும்.

குழந்தைக்கு ஒரு காகிதம் கொடுக்கப்படுகிறது. பரிட்சைத் தேதி நெருங்குவதற்குள் தான் செய்யவேண்டிய பாக்கி வேலைகளைப் பிரித்து எழுதிக்கொள்ள அக்காகிதம் குழந்தைக்குப் பயன்படுகிறது. பிறகு அக்குழந்தை தன் வேலையில் ஈடுபடுகிறது. தேவையான புத்தகங்களின் கருவிகளின் விவரங்கள் அந்தக்குறிப்புக்களடங்கிய அட்டை களில் இருக்கின்றன; மேலும் எந்தெந்த விஷயங்களில் குழந்தை ஆசிரியரின் உதவியை நாடலாம் என்பதற்கும் அவைகளில் விவரம் தரப்பட்டிருக்கிறது. எனவே, தாங்க ளாகவே எல்லாக்காலங்களிலும் வேலைசெய்வதற்குக் குழந் தைகளுக்கு வசதி ஏற்படுகிறது. வேலைக்குறிப்பு அட்டைகள் பலவிதமாக இருக்கின்றன. இதனுல் குழந்தைகளுக்கு வேலை செய்வதில் எவ்வித அலுப்பும் சலிப்பும் ஏற்படுவ தில்லை.

பரிட்சைக்குத் தங்களைத் தயார் செய்துகொள்ளும் குழந்தைகள் தங்களுக்கு எப்போது ஓய்வு இருக்கிறதோ அப்போது தயார் செய்து கொள்ளுகிருர்கள்.

காலை 9 மணியிலிருந்து 11 மணி வரை இதற்காக ஒதுக் கப்படுகிறது. மாலையில் வேறு பாடங்கள் இல்லையாளுல், அந்நேரமும் இதற்காக ஒதுக்கப்படுகிறது. பெரிய குழந் தைகள் இந்த வேலைகளில் பெரும்பகுதிகளைத் தங்கள் வீடு களிலே செய்துவிடுகிருர்கள். இவைகளையும் தங்கள் விருப் பப்படியே அவர்கள் செய்து கொள்ளுகிருர்கள். ஏனெனில், அவர்களுக்கு வீடுகளில் செய்வதற்கென எவ்விதமான

வீட்டு வேலைகளும் அளிக்கப்படுவதில்லையாகையால், அவர்கள் தங்கள் பரிட்சைக்கான வேலைகளை, வீட்டு வேலைகள் என எவரும் கருதக்கூடாது.

பாடங்கள் தொகுதிகளாகவும், சிறியனவாகவும் இருக்கின்றன. 11 மணிக்குப் பிறகு திறந்தவெளியில் உடற்பயிற்சியும், நீர்வீழ்ச்சி ஸ்நானமும் முதலில் ஆரம்பமாகின்றன. அதற்குப் பிறகுதான் பாடங்கள் ஆரம்பிக்கப்படுகின்றன. சாதாரணமாக, பிற்பகலில்தான் இரண்டு மணி நேரம், ஒரே பாடத்திற்குத் தொடர்ச்சியாக அளிக்கப்படுகின்றது. அதுவும் "வேலைப் பாடங்களு" க்குத் தான். குறிப்பிட்ட ஒரே பட்டம் பெறுவதற்காகப் படிக்கும் குழந்தைகள் (15 அல்லது 20 பேர்) கவனமாகப் பல பரீட்சைகளுக்குத் தயார் செய்து கொள்ளப் படிக்கின்றனர். அதற்கென ஒதுக்கப்பட்ட அறையிலிருந்து கொண்டும், அதில் விசேஷத் திறமை பெற்றிருக்கும் ஆசிரியரின் உதவியைக் கொண்டும் அவர்கள் படிக்கிறார்கள்.

அந்த ஆசிரியர் சிறு சிறு கோஷ்டிகளாக மாணவர்களைப் பிரித்து ஒவ்வொரு கோஷ்டிக்குமாகப் போதனைக் கால நேரத்தைப் பகிர்ந்து கொடுக்கிறார். மேலும் எல்லாக் குழந்தைகளும் தங்கள் படிப்பைச் செவ்வனே படிப்பதற்கு உதவி செய்யும் ரீதியில் அவர் அவர்களுக்கு விவரமாகப் போதிக்கிறார். ஒரே பாடத்திற்காக மட்டும் முழுக்க முழுக்க அவர் தொடர்ச்சியாகப் பிரசங்கங்கள் செய்வதில்லை. ஆயினும், சில பாடங்களுக்கு விதிவிலக்குண்டு. உதாரணமாக சரித்திரப் பாடத்திற்குத் தொடர்ச்சியான பிரசங்கங்கள் குழந்தைகளுக்குத் தேவைப்படுகின்றன. குழந்தைகளின் தீவிர ஒத்துழைப்பைப் பெறுவதற்காக, சில சமயங்களில் ஒவ்வொரு குழந்தையும் ஏதாவது ஒரு பாடத்தைப் பற்றிப் பிரசங்கம் செய்யுமாறும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

1930—ல், போயக்கின் பள்ளிக்கூட முறைபற்றி விவாதிக்கக் கல்வி நிபுணர்களின் மகாநாடு ஒன்று நடைபெற்றது. அது 12 நாட்களுக்கு நீடித்தது. அந்த மகாநாட்டின் விளைவாகத் திட்டவட்டமான பாடத் திட்டத்தை போயக் தரப்படுத்தினர்.

10-லிருந்து 15 எண்ணிக்கை வரையில் உள்ள பாடங்கள் எல்லாம் உடலுழைப்பால் செய்யும் வேலைகளைப் பற்றியதேயாகும்.

60-வது நம்பரில் கண்டுள்ள பொதுச் சரித்திரம் என்பதில், சரித்திரம் காலங்களாகப் பிரிக்கப்பட்டு போதிக்கப் படுகின்றது.

தாய் நாட்டின் சரித்திரம் என்பது (61-வது நம்பர்) இடங்களாகப் பிரிக்கப்பட்டுப் போதிக்கப்படுகிறது.

பாடங்களையும், பயிற்சிகளையும் கோஷ்டிகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதைக் கவனியுங்கள். ஒவ்வொரு விஷயத்திற்கும் இரண்டு வரிசைகளுள்ள ஒரு நம்பர் கொடுக்கப்பட்டிருக்கிறது; ஆகையால் 24-வது விஷயம், 2-வது தொகுதியில் வருகிறது; இதே மாதிரி 41-வது விஷயம் 4-வது தொகுதியில் வருகிறது; ஒவ்வொரு விஷயமும் 26 பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

குழந்தையின் மன-சரீர வளர்ச்சிகளை யொட்டியே இந்தத் தொகுதி நிர்ணயமும் அமைந்திருப்பதைக் கவனிக்க வேண்டும்; சிறிய குழந்தைகள் பெரும்பாலும் எதையும் "செய்"கின்ற மனப்போக்கிலிருப்பதால், அவர்கள் அவ்வேலைகளிலேயே அதிகமாக ஈடுபடுத்தப்படுகிறார்கள். (1-வது தொகுதி) பிறகுதான் அவர்கள் மொழியை உபயோகப்படுத்திக்கொள்ள உற்சாகப்படுத்தப்படுகிறார்கள் (2-வது தொகுதி). வயது ஆக ஆக அவர்கள் தங்களைச் சுற்றிப் பார்க்க ஆரம்பிக்கிறார்கள்.

# வேலை-பாடத்திட்டத்தின் தரவாரியான ஏற்பாடு :

| விஷயங்களின் தொகுதிகள் : | | விஷயங்கள் : | | |
|---|---|---|---|---|
| நம்பர் | பெயரும் வர்ணமும் | நம்பர் | பெயர் | பகுதிகளின் நம்பர் |
| ○ | பொது "மர நிறம்" | ○ 1 | தொழிற்சாலையின் ஒழுங்கு | 3 |
| 1. | வேலைப்பாடங்கள் (சொல்வதும்-செய்வதும்) | 10° | உடல் வளர்ச்சி | 20 |
| | | 11° | மிருகங்களும்-தாவரங்களும் | 6 |
| | "பழுப்பு நிறம்" | 12° | வீடமைப்பு | 12 |
| | | 13° | உடை | 12 |
| | | 14° | உணவு | 4 |
| | | 15° | மிகுதியானவை-கைவேலையும், பல செயல் திறமைகளும் | 10 |
| | | 16 | எழுதுதலும்-டைப் அடித்தலும் | 8 |
| | | 17 | படித்தலும்declamatıas | 14 |
| | | 18 | சங்கீதம் | 12 |
| | | 19 | கண்ணுக்குத் தெரியும் கலைகள் | 10 |
| 2. | மொழியும், மொழிகளும் "நீல நிறம்" | 21 | கிரேக்க மொழி | 10 |
| | | 22 | லத்தீன் ,, | 10 |
| | | 23 | டச்சு ,, | 30 |
| | | 24 | ஆங்கிலம் ,, | 10 |
| | | 25 | ஜெர்மன் ,, | 10 |
| | | 26 | பிரெஞ்சு ,, | 10 |
| | | 27 | எல்லா நாட்டினரும் வழங்கக்கூடிய செயற்கைப் பொது பாஷை | 6 |
| 3. | பூமியும், அதன் உயிர் அங்கங்களும் | 30 | பூகோளம் | 15 |
| | | 31 | பூமியின் மேலோட்டம் பற்றிய நூல் | 3 |
| | | 32 | தாவர சாஸ்திரம் | 15 |

| நம்பர் | பெயரும்.வர்ணமும் | நம்பர் | பெயர் | பகுதிகளின் நம்பர் |
|---|---|---|---|---|
| | | | மிருக நூல் | 11 |
| | | 33 | மனித உடல் கூறு | |
| | | 34/36 | நூலும் ஆரோக்கிய சாஸ்திரமும் | 5 |
| 4. | கணிதம் | 41 | எண் கணிம் | 30 |
| | " மஞ்சள் நிறம் " | 42 | பீஜ கணிதம் | 10 |
| | | 43 | சமதல க்ஷேத்திர கணிதம் | 10 |
| | | 44 | திடப்பொருள்களின் க்ஷேத்திர கணிதம் | 5 |
| | | 45 | கோண-முக்கோண கணிதம் | 5 |
| | | 46 | கணக்குவைக்கும் முறையும்-வர்த்தகக் கணிதமும் | 5 |
| | | 47 | விவரண க்ஷேத்திர கணிதம் | 3 |
| | | 48 | பாகக்ஷேத்திரகணிதம் | 2 |
| | | 49 | உயர் கணிதம் | 2 |
| 5. | ஜடவஸ்துஉலகம் " ஆரஞ்சு நிறம்" | 51 | பிரபஞ்ச-வான சாஸ்திரங்கள் | 10 |
| | | 52 | பௌதிகம் | 15 |
| | | 53 | ரஸாயனம் | 7 |
| | | 54 | தொழில்-விஞ்ஞானக் கருவி நூல் | 3 |
| | | 56 | வர்த்தக நுணுக்கங்கள் | 5 |
| 6. | மனிதனும், சமூகமும் | 60 | சரித்திரம்(பொது) | 14 |
| | " சிவப்பு நிறம் " | 61 | சரித்திரம் (தாய்நாடு) | 10 |
| | | 64 | சமூக சாஸ்திரம் | 3 |
| | | 65 | பொருளாதாரம் | 6 |
| 7. | ஆன்மீக உலகம் | 66 | ராஜாங்க அமைப்பு | 3 |
| | "வெள்ளை நிறம்" | 73 | மத நூல்கள் | 6 |
| | | | மொத்த பாகங்கள் | 400 |

பூமியின் மீதும், தாவரங்கள்-மிருகங்கள் மீதும் அவர்களுக்கு அக்கரை ஏற்பட ஆரம்பிக்கிறது (3-வது தொகுதி). மேலும், அவர்களுக்குத் தங்கள் உடலைப் பற்றியும், ஆரோக்கியம் பற்றியும் நினைக்க ஆரம்பிக்கிறார்கள். இதற்குப் பிறகு, அவர்களுக்குக் கணித ஞானம் அவசியப்படுகிறது. (4-வது தொகுதி); ஜட வஸ்து உலகத்தை அறிய (5-வது தொகுதி) இந்த ஞானம் அவர்களுக்குத் தேவையாயிருக்கிறது. அப்போதுதான், மனிதனைப் பற்றியும், மனித சமூகம் பற்றியும் அவர்களுக்கு அக்கரை ஏற்படுகிறது. (6-வது தொகுதி) வீரர்களின் கதைகள், மாபெரும் புருஷர்களின் வரலாறுகள்,அதிசய அல்லது அசாதாரணமான சம்பவங்கள், பண்டையிலிருந்த நிலைமைகள்-இவைகளைப் பற்றியெல்லாம் குழந்தைகள், தங்களின் சிறுபிராயத்திலேயே தெரிந்து கொள்ள ஆசைப்படும் என்பது உண்மைதான். ஆயினும், "ஆழ்ந்த சரித்திரப் படிப்புகள், சரித்திரப் போக்குகள், சிறப்பாக அரசியல் சரித்திரம் முதலியவைகளில் குழந்தைகளுக்குப் பதினைந்துவயதுக்குள் உண்மையான அக்கரை ஏற்பட்டு விடுவதாகச் சொல்ல முடியாது. அவ்வயதுக்குள் அவர்களுக்கு, அவைகளைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்ளக்கூடிய அனுபவ ஞானமும் மனதால் புரிந்து கொள்ளக்கூடிய போதிய தெளிவான புத்தியும் ஏற்பட்டு விடுவதில்லை" என்கிறார் போயக்.

விஷயங்களின் ஒவ்வொரு தொகுதிக்கும் நிறமளிப்பதில், வானவில்லின் ஏழு நிறங்களில் ஆறு நிறங்கள் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கும் விஷயங்களுக்குப் பொறுத்தமாகச் சில நிறங்களிருக்கின்றன. வேதாந்தம் போன்ற ஆன்மீக விஷயங்களின் தூய்மைத் தன்மையைத் தூயநிறமான வெண்மை நிறம் பிரதிபலிக்கிறது!

சில சமயங்களில் 10-வது நம்பர் வரை தொகுதிகளை அதிகப்படுத்த வேண்டியிருக்கிறது. அப்போது, 8-வது தொகுதிக்குக் கருப்பு நிறமும், 9-வது தொகுதிக்கு வெள்ளி நிறமும், 10-வது தொகுதிக்குத் தங்க நிறமும் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன.

இப்பள்ளிக்கூடத்தில் 5 வித அத்தாட்சிப் பத்திரங்கள் வழங்கப்படுகின்றன. அவை பின்வருமாறு—

1. பழுப்பு நிற அத்தாட்சிப் பத்திரம்:
   7 அல்லது 8 வயதில் மாணவர்களுக்கு வழங்கப் படுகிறது.

2. நீல நிற அத்தாட்சிப் பத்திரம்:
   9 அல்லது 10 வயதில் மாணவர்களுக்கு வழங்கப் படுகிறது.

3. பச்சை நிற அத்தாட்சிப் பத்திரம்:
   12 வயதில் மாணவர்களுக்கு வழங்கப்படுகிறது.

4. மஞ்சள் நிற அத்தாட்சிப் பத்திரம்:
   16 வயதில் மாணவர்களுக்கு வழங்கப்படுகிறது. (இதற்கு "தன்னியல்புள்ள உயர் கல்வி"யின் முதல் அத்தாட்சிப்பத்திரம் என்ற பெயருமுண்டு.)

5. ஆரஞ்சு நிற அத்தாட்சிப் பத்திரம்:
   19 வயதில் மாணவர்களுக்கு வழங்கப்படுகிறது. (இதற்கு, "தன்னியல்புள்ள உயர் கல்வி"யின் இரண்டாவது அத்தாட்சிப் பத்திரம் என்ற பெயருமுண்டு.)

இன்னுமொரு முக்கியமான விஷயம் பின் வருமாறு:—

எல்லாத் தொழிலாளிகளும் எழுதும் பரீட்சைகளுக்கு வரிப் படங்கள் தயாரிக்கப்படுகின்றன. இம்மாதிரி வரிப் படங்களை வரைவதற்கு, எல்லாப் பரீட்சைகளையும் சம

மாக மதிப்பிடுவதில்லே; குறைந்த பக்ஷ வேலேயை இழுக்கும் சில பரீட்சைகள் பாதியாகவும், அதிக பக்ஷ வேலேயை இழுக்கும் சில பரீட்சைகள் ஒன்றரையாகவும் மதிப்பிடப்படுகின்றன. இந்த மதிப்பு அடிப்படையில் ஒரு குழந்தைக்கு "வேலேக் கோடும் போடப்படுவதானல் அதிபுத்திசாலியான ஒரு குழந்தையின் "வேலேக் கோடும் செங்குத்தாகவும், அறிவு—திறமையில் குறைவுள்ள ஒரு குழந்தையின் "வேலேக் கோடும் தட்டையாகவும் இருக்க வேண்டியிருக்கும். இதனுல், குறைந்த அறிவும்—திறமையுமுள்ள குழந்தைக்கு உற்சாகமின்மையும், அதிபுத்திசாலியான குழந்தையின் சக்திக்குப் பங்கமும் ஏற்படும். ஆகையால், இந்தக் குறைபாட்டைப் போக்க, ஒரு பெருக்கல் எண்ணேக் கொண்டு சாதாரணமான பரீட்சைகளின் எண்ணிக்கையைப் பெருக்குவதெனப் போயக் முடிவு செய்தார். இந்தப் பெருக்கல் எண்ணே இப்பள்ளிக்கூடத்தின் பூரா நேர ஆசிரியர்களே தீர்மானிக்க வேண்டும். ஒழுங்குபடுத்தப்படாத வளேவுக் கோட்டின் சாய்வு, பெருக்கலுக்கு எந்த எண்ணே எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதற்கு ஒரு வழிகாட்டியாயிருக்கும் என்பதுதான் உண்மையாகும். இந்தப் பெருக்கல் எண்ணே, வருஷத்திற்கு ஒரு தடவையோ அல்லது இரண்டு தடவைகளோ மாற்றுகிருர்கள் என்பதையும் இங்கே சொல்லவேண்டும். ஏனெனில், சில நிலேமைகளில் அது ஒன்று அதிகரிக்கும் போக்கையோ அல்லது குறையும் போக்கையோ கொண்டிருக்கும்.

வேலே நம்பர்கள் இவ்வாறு திருத்தியமைக்கப்பட்ட பின்பு, ஒவ்வொரு "தொழிலாளி"க்கும் அவனுடைய வரிப்படம் காண்பிக்கப்படுகிறது. அதில், சரிப்படுத்தப்பட்டதும் சரிப்படுத்தப்படாததுமான வளேவுக்கோடும், "மாதத்திற்கு இரண்டு சாதாரணப் பரீட்சைகள்" என்ற அடிப்படையில்

கணக்கிடப்பட்ட சகஜமான கோடும் வரையப்பட்டிருக்கும். இதனால், தங்களுடைய அறிவு-திறமையை குழந்தைகளே நிர்ணயித்துக்கொள்ள முடிகின்றது; அவர்களுடைய அறிவு-திறமையை ஆசிரியர்களும் அளந்தறிய முடிகிறது; பெற்றோர்களும் தங்களுடைய குழந்தைகளால் எவ்வளவு தூரம் வேலை செய்ய முடிகின்றது என்பதையும் தெரிந்து கொள்ள முடிகின்றது. "ஒவ்வொருவனிடமிருந்தும் எதிர் பார்க்கப்படும் சகஜமான உழைப்பில் காணப்படும் தவிர்க்க முடியாத சமத்வமின்மையை நாம் அங்கீகரிக்க வேண்டும். இதை நான் ஒரு முக்கியமான தத்துவமாகக் கருதுகிறேன். இந்தத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட நடைமுறையைப் பொதுவான மனித சமுதாயம் முழுவதிற்குமாக விஸ்தரிக்க வேண்டிய நாள் என்றாவது வரும். ஆனாலும், இப்போதைய போட்டி நிறைந்த முறைக்குப் பதிலாக மனிதத் தன்மையுள்ள முறை ஒன்று என்று ஏற்படுகிறதோ அன்று தான் இந்தத் தத்துவம் சாத்தியமாகும்" என்கிறார் போயக்.

# 4. பிற நாடுகளில் கல்வித் திட்டங்கள்

முந்தைய மூன்று அத்தியாயங்களில், மூன்று முக்கிய மான கல்விப் போக்குகளைப் பற்றியும், பிறநாடுகளின் ஆரம்பக் கல்வித்துறை அநுபவங்களைப் பற்றியும், ஹாலந்து நாட்டில் பில்தோவன் என்ற இடத்தில் இயங்கி வரும் உலகப் புகழ்பெற்ற கீஸ் போயக்கின் லட்சியப் பள்ளிக் கூடம் பற்றியும் விவரிக்கப்பட்டுள்ள விஷயங்களை வாசகர் கள் கவனமாகப் படித்திருப்பார்கள்.

இனி வரும் அத்தியாயங்களில், வெளி நாடுகள் பல வற்றில் செயல்படும் ஆரம்பக் கல்வித் திட்டங்களை அப்படியே கொடுத்திருக்கிறேன்.

அரசியல்-பொருளாதார-சமூக ரீதியில் வெவ்வேறு சித்தாந்தங்களின் அடிப்படையில் இயங்கி வருவதாலேயே இந்த நாடுகளின் ஆரம்பக் கல்வித் திட்டங்களைப் பொறுக்கி யெடுத்திருக்கிறோம்.

## (அ) பிரிட்டன்

முதலில் பிரிட்டனில் அமுல் நடத்தப்படும் ஆரம்பக் கல்வித் திட்டத்தைப் பற்றிச் சொல்லுகிறேன்.

1. 5வயதிலிருந்து 15 வயது வரையில் கல்வி கட்டாய மாக்கப்பட்டிருக்கிறது.

2. 7 வயதிலிருந்து 11 வயது வரை ஆரம்பக் கல்வி போதிக்கப் படுகிறது.

3. வாரத்திற்கு 5 நாட்களே பள்ளிக்கூட வேலை நாட்களாகும்.

4. தினம் பள்ளிக்கூடங்கள் $5\frac{1}{2}$ மணி நேரம் வேலை செய்கின்றன.

5. குழந்தையின் உள்ளத்தையும், திறமைகளையும் வளர்ப்பதே ஆரம்பக் கல்வியின் அடிப்படை லட்சியமாகும்; ஆனால் குழந்தையை ஒரு குறிப்பிட்ட திறமை வழியில் தயார் செய்யும் போக்கால் குழந்தையின் குணச் சம நிலை பாதிக்கப்படும் என்று கருதப்படுகிறது.

6. குழந்தைக்கும் ஆசிரியருக்கும் நெருங்கிய தொடர்பு வற்புறுத்தப்படுகிறது.

7. இயற்கையாகப் பழகி விஷயங்களைக் கிரகித்துக் கொள்ளும் வாய்ப்புகளை ஏராளமாகப் பள்ளிக்கூடத்தில் சிருஷ்டிப்பதே முக்கியமானது என்று எண்ணப்படுகிறது.

8. பள்ளிக் கூடத்திற்குள் தொழிற் பயிற்சி அளிக்கப்படுகிறது. இதற்கான சாதனங்கள் பள்ளிக் கூடங்களில் ஏராளமாக இருக்கின்றன. குழந்தைகள் தாங்களாகவே அந்தச் சாதனங்களைப் பார்த்து அவைகளை எடுத்துக் கையாளவும் உற்சாகம் அளிக்கப்படுகிறது.

9. ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் இரு தொகுதி முறை வேலை நேரம் இல்லை.

10. பாடங்களும் அவை போதிக்கப்படும் காலப் பகுதி நேரமும்:—

| பாட விவரம் | வாரத்தில் எவ்வளவு நிமிஷங்கள். |
|---|---|
| மத போதனை | 150 நிமி. |
| மொழி (எழுதுதல்) | 180 ,, |
| ,, (படித்தல்) | 170 ,, |
| ,, (பேசும் பயிற்சி, ஒப்பிக்கும் பயிற்சி) | 50 ,, |
| ,, (வார்த்தை சேர்த்தல்) | 100 ,, |
| ,, (நாடகம்—கதை) | 80 ,, |
| சரித்திரம் | 90 ,, |
| பூகோளம் | 90 ,, |

| | |
|---|---|
| கணிதம் | 150 நிமி. |
| இயற்கை அறிவு | 70 ,, |
| சித்திரம் | 80 ,, |
| இசை | 70 ,, |
| உடற் பயிற்சி | 80 ,, |
| விளையாட்டுகள் | 40 ,, |
| நெசவு, புத்தக பைண்டிங் போன்றவைகளில் கைத்தொழில் பயிற்சி | 120 ,, |
| கையெழுத்துப் பயிற்சி | 30 ,, |
| ஓய்வு நேரம் | 100 ,, |
| மொத்தம் | 1650 ,, |

11. ஒரு சமுதாயம் மாதிரியே பள்ளிக்கூடம் இருக்கிறது.

12. பெற்றோர்களும் — ஆசிரியர்களும் கொண்ட சங்கங்கள் இருக்கின்றன.

13. குழந்தைகளுக்குக் கல்வியளிப்பதில் நாடெங்கும் ஒரே மாதிரியான முறை பின்பற்றப்படுகிறது.

14. ஆரம்பப் பள்ளிக்கூடத்தின் கீழ் வகுப்புகளில் படிக்கும் குழந்தைகளுக்குப் போதிக்கப்படும் ஒவ்வொரு பாடத்தின் நேரமும் குறைவாகவே இருக்கிறது. ஒவ்வொரு பாடமும் அதிகபட்சமாக முக்கால் மணி நேரமும் குறைந்தபட்சமாக அரை மணி நேரமும் போதிக்கப்படுகிறது. குழந்தையின் 'இளம் மூளை'க்கு அதிக நேர வேலையைக் கொடுத்தால் குழந்தை சோர்ந்துவிடும் என்று கருதப்படுகிறது.

15. குழந்தைகள், தாங்கள் கற்றுக்கொள்ளும் தொழிற் பயிற்சியால் பிற்காலத்தில் பயனடைவார்கள் என்பதற்கு நிச்சயமில்லாவிட்டாலும், அவர்கள் பள்ளிக்

# ஆரம்பக் கல்வி அமைப்பு : (பிரிட்டன்)

வயது

- 16–18: (2) (இஷ்டபூர்வமானது); (3); (4)
- 12–16: செகண்டரி கிராமர் ஸ்கூல் (படிப்பு மட்டும்) | (இஷ்டபூர்வமானது) செகண்டரி (தொழிற் பாடம்) | செகண்டரி மாடர்ன்
- 7–11: 'ஜூனியர்' (ஆரம்பப்) பள்ளிக்கூடம் 7-11 (இங்கேயும் இருபால் மாணவர்களும் கலந்தே படிக்கிறார்கள்)
- 5–7: இளஞ் சிறுவர் பள்ளிக்கூடம் (இங்கே இருபால் குழந்தைகளும் கலந்தே படிக்கிறார்கள்) 5-7 (கட்டாயமானது)
- 2–4: நர்ஸரி பள்ளிக்கூடம் (இஷ்டபூர்வமானது) 2—5 (கொஞ்சம் பேர்களைக் கொண்டது; நகரத்தில் மட்டும் உள்ளது)

இடப்பக்கம்: (1) (கட்டாயக் கல்வி முறை)

வலப்பக்கம்: (கட்டாய) ஆரம்பக் கல்வி

குறிப்பு :—.........இந்தப் புள்ளிக் கோட்டுக்குள் இருப்பதுதான் ஆரம்பக் கல்வியின் அமைப்பாகும்.

5 வயதிலிருந்து 15 வயது வரை கல்வி கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது என்பதைக் குறிக்கக் கீழிருந்து மேல் வரை (5-16).........இந்தப் புள்ளிக்கோடு காட்டுகிறது.

கூடத்தில் பெறும் அந்தப் பயிற்சியானது அவர்களுடைய வீடுகளுக்காவது பயன்படும் என்று கருதப்படுகிறது.

16. ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் 11-வது வயதுவரை ஆண்பெண் குழந்தைகள் கலந்தே படிக்கிறார்கள். ஒரு கொள்கை அடிப்படையில் இல்லாது, வசதிகாரணமாகவே ஆண்—பெண் குழந்தைகள் இவ்வாறு கலந்து படிக்கிறார்கள்.

### (ஆ) சோவியத் ரஷ்யா

1. ஆரம்பக் கல்வி கட்டாயமாகவும், நாடு பூராவிலும் இலவசமாகவும் அளிக்கப்படுகிறது.

2. ஏழு வயதிலிருந்து பதினொரு வயது முடிய ஆரம்பக் கல்வி அளிக்கப்படுகிறது. ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் நான்கு வகுப்புகளிருக்கின்றன.

3. வாரத்திற்கு 6 நாட்களுக்குப் பள்ளிக்கூடம் வேலை செய்கிறது.

4. தினம் நான்கு பாடங்கள் போதிக்கப்படுகின்றன. ஒவ்வொரு பாடத்தின் போதனை நேரம் 45 நிமிஷங்கள். ஒவ்வொரு பாடமும் முடிந்தவுடன் 10 நிமிஷங்களுக்கு ஓய்வு வேளையுண்டு.

5. ரஷ்ய மொழி, ரஷ்ய மொழி தாய்மொழி இல்லாத மாகாணங்களில் அந்தத் தாய் மொழியுடன் கூட ரஷ்ய மொழி, கணிதம், இயற்கை நூல், சரித்திரம், உடற்பயிற்சி, கலைப் பயிற்சி, இசைப் பாடம், சரித்திரமும்—பூகோளமும் (இவை நான்காம் வகுப்புக்கு மட்டுமேயுண்டு) போதிக்கப்படும் பாடங்கள்.

6. பள்ளிக்கூடம் இல்லாத வேளைகளில் குழந்தைகள் வெளியே பொழுதைக் கழிக்கும் விதத்தைப்பற்றித் தீவிரமான சிரத்தை காண்பிக்கப்படுகிறது. குழந்தைகளிட

மிருந்து சமுதாயம் உழைப்பை எதிர்பார்க்கும் ரீதியிலேயே இது அமைந்திருக்கிறது. குழந்தைகளின் செயல் திறனுக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிக்கப்படுகின்றன. குழந்தைகள் வெளியே சோம்பேறிகளாகவோ ஆளுவார், அடக்கு வாரின்றியோ சுற்றித் திரிய முடியாது. குழந்தைகள் தங்களுடைய ஓய்வு நேரப் பொழுதை அவர்கள் பயன் பெறும் போக்கிலேயே கழிக்க வேண்டுமென்று சர்க்கார் தீவிரமான வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தந்திருக்கிறார்கள். அவர்கள் தங்கள் ஓய்வு நேரத்தை அறிவு பெறும் வழியிலும், சமூக ஞான வளர்ச்சியின் அடிப்படையிலும் கழிக்க வேண்டுமென்பதே சர்க்காரின் திட்டமாகும்.

7. ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் பொழுது போக்குவதற்கான வசதிகளுண்டு. இந்தக் காரியங்களுக்காக சங்கங்களும், பள்ளிக்கூடத் தொழில் நிலையங்களுமுண்டு. இந்தத் தொழில் நிலையங்களில் குழந்தைகள் தங்களுடைய ஓய்வு நேரங்களில் வேலை பழகிக்கொள்ள வேண்டும். இது நிலைத்துவிட்ட ஒரு முக்கிய அம்சமாகும்.

8. பள்ளிக்கூடத்திற்கு வெளியில் குழந்தைகள் தங்கள் ஓய்வு நேரத்தைக் கழிப்பதற்கான, கல்வி ஞான முன்னேற்ற அடிப்படையில் அமைந்த பல ஸ்தாபனங்களிருக்கின்றன. தொழில் நிலையங்கள், கலை மாளிகைகள், புத்தக சாலைகள், சினிமாக்கள், நாடக அரங்கங்கள்— இவைகள் எல்லாம் குழந்தைகளுக்கு என்று தனியாக இருக்கின்றன.

9. குழந்தையின் குணச் சிறப்புக்களுக்கு வீட்டிலே தான் விதை விதைக்கப்படுகின்றது. வீட்டினுடைய தீவிர ஆதரவிலும், ஒத்துழைப்பிலுமே பள்ளிக்கூடத்தின் வெற்றி யிருக்கிறது என்பதுதான் சோவியத் சர்க்காரின் ஆரம்பக் கல்வியின் ஆதார நம்பிக்கையாகும்.

10. பள்ளிக்கூடத்தின் நடவடிக்கைகளை இணைக்கும் ரீதியில் வெளியில் இன்னும் பலவித ஸ்தாபனங்கள் செயல் படுகின்றன. கிராமப் பள்ளிக்கூடமா யிருந்தால் வெளி யிணைப்பு ஸ்தாபனம் கூட்டுப் பண்ணையாகவோ ராஜாங்கப் பண்ணையாகவோ, யந்திர உற்பத்தி அல்லது 'டிராக்டர்' நிலையமாகவோ இருக்கும். நகரப் பள்ளிக் கூடமா யிருந்தால், தொழிற் சாலையாகவோ, தொழிற் சங்க மாகவோ இருக்கும். மேலும் கலைக் கூடங்களும், விஞ் ஞான ஆராய்ச்சிக் கழகங்களும் இவ்வித ஸ்தாபனங் களாகவும் இருக்கும்.

11. எல்லாப் பள்ளிக்கூடங்களையும் சர்க்கார் நடத்து கிறது.

12. உடற்பயிற்சிக்கு வெகு முக்கியத்துவம் அளிக்கப் பட்டிருக்கிறது.

13. மதச் சார்புக்கோ அல்லது செல்வாக்குக்கோ இடமில்லை.

14. ஒரே சீரான பொதுத் தன்மையுள்ளதும், கீழிருந்து மேல் வரை சங்கிலித் தொடர்போல அமைந்ததும், ஒன்றோடொன்று இணைந்ததுமா யிருக்கிறது சோவியத் கல்வி முறை அமைப்பு.

15. குழந்தைகளுக்குக் கல்வியளிப்பதில் 'முதலாளித்வ' நாடுகளில் பின்பற்றப்படும் 'மாண்டி ஸோரி', 'பிரோபல்' முறைகள் எல்லாம் குறைபாடுகள் நிறைந்தவை என்று இங்கே கருதப்படுகிறது. குழந்தையின் வயதுக்குத் தகுந்தபடி வளரும் குணத்தையும், அக்கரையையும், சுறுசுறுப்பையும்; உற்சாகத்தையுமே கருத்தில்கொண்டு சோவியத் குழந்தை—சிறுவர் கல்வி முறை வகுக்கப் பட்டிருக்கிறது.

# ஆரம்பக் கல்வியின் அமைப்பு: [ரஷ்யா]

| வயது | 1 | 2 | | 3 | | வயது |
|---|---|---|---|---|---|---|
| 17 | ↓ | 17 | | [கட்டாய மானது] 10 ஆண்டுப் படிப்பு | செகண்டரி (உயர் படிப்பு) (3 ஆண்டுகள்) | 17 |
| 16 | ↓ | 16 | | | | 16 |
| 15 | ↓ | 15 | | | | 15 |
| 14 | ↓ | [கட்டாய மானது] ஏழாண்டு பள்ளிக்கூடம் | செகண்டரி (ஆரம்பம்) (3 ஆண்டுகள்) | | செகண்டரி (ஆரம்பம்) (3 ஆண்டுகள்) | 14 |
| 13 | ↓ | 13 | | | | 13 |
| 12 | ↓ | 12 | | | | 12 |
| 11 | ↓ | 11 | எலிமெண்டரி (4 ஆண்டுகள்) | | எலிமெண்டரி (4 ஆண்டுகள்) | 11 |
| 10 | எலிமெண்டரி (4 ஆண்டுகள்) (கட்டாய மானது) | 10 | | | | 10 |
| 9 | | 9 | | | | 9 |
| 8 | | 8 | | | | 8 |
| 7 | | 7 | | | | 7 |
| | 3-7 | கிண்டர் கார்டன | (இஷ்டப்பூர்வமானது) | | | |

3 வயதுக்குக்கீழ் :—'சில்டிரன்ஸ் ஹோம்கள்'

1. ...இந்தப் புள்ளிக் கோடுகளுக்குள் இருக்கும் கட்டங்கள் ஆரம்பக் கல்வி அமைப்பை விளக்குகின்றன.
2. முதல் பிரிவு :— ஆரம்பப் பள்ளிக்கூட அமைப்பு மட்டும்.
3. நாட்டின் சில பகுதிகளில் 11 ஆண்டுப் பள்ளிக்கூட முறையும் இருக்கிறது.
4. இரண்டாவது பிரிவு :— ஏழாண்டுப் பள்ளிக்கூடத்தில் ஆரம்பக் கல்விக் கட்டம் முதல் நான்கு ஆண்டுகள்.
5. மூன்ருவது பிரிவு :— 10 ஆண்டுப் பள்ளிக்கூடத்தில் ஆரம்பக் கல்விக் கட்டம் முதல் நான்கு ஆண்டுகள்.
6. சங்கிலித் தொடர்போல 2, 3 பிரிவுகளில் ஆரம்பக் கல்வியும் இணைக்கப் பட்டிருக்கிறது. மூன்று பிரிவுகளிலும் ஆரம்பக் கல்வி நிலையில் பாடத் திட்டம் ஒரே மாதிரியானதுதான்.

16. "எந்த விதமான இன, தேச, சொத்து, சமூக அல்லது இதர கட்டுப்பாடுகளோ அல்லது தடைகளோ சோவியத் கல்வி முறையில் இருக்காது" என்று சோவியத் ரஷ்யாவின் அரசியல் திட்டம் கூறுகிறது.

17. கிராமப் பள்ளிக்கூடத்தில் பாடங்கள் எல்லாம் விவசாயச் சார்புடன் சொல்லித்தரப்படுகின்றன.

## பாடங்களும், அவை போதிக்கப்படும் நேர அட்டவணையும்

| பாட விவரம் | வகுப்புகள் | | | |
|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 |
| | மணிகள் (1 வருஷத்திற்கு) | | | |
| * ரஷ்யமொழி (எழுதுவதும் படிப்பதும்) ... | 456 | 456 | 489 | 262 |
| கணிதம் ... ... ... | 229 | 229 | 196 | 229 |
| பொது விஞ்ஞானம் ... ... | — | — | — | 97 |
| சரித்திரம் ... ... ... | — | — | — | 81 |
| பூகோளம் ... ... | — | — | — | 81 |
| உடற்பயிற்சி ... ... ... | 33 | 33 | 66 | 66 |
| சித்திரம் ... ... ... | 33 | 33 | 33 | 33 |
| இசைப்பாடம் ... ... ... | 33 | 33 | 33 | 33 |
| மொத்தம் ... | 784 | 784 | 817 | 882 |

* ரஷ்யமொழி தாய்மொழியாகப் பேசப்படாத பிரதேசங்களில் அந்தந்தப் பிரதேச மொழிகளுடன் ரஷ்யமொழியும் பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

### (இ) பிரான்ஸ்

ஆரம்பக் கல்வி என்ற அடித் தளத்திலிருந்து உயர் கல்வி என்ற மேல் தளம் வரை இங்கே கல்வி முறையில் இரண்டு விதங்கள் பின்வருமாறு உள்ளன :—

1. ‘சர்ச்’சின் அதாவது மதத்தின் சார்போ அல்லது செல்வாக்கோ இல்லாமல், சர்க்காரின் நேரடியான மத்திய ஆதிக்கத்தின் கீழ் அமுலாகும் கல்வி முறை ஒரு விதம்.

2. ‘சர்ச்’சின் நேரடியான மத்திய ஆதிக்கத்தின் கீழ் சர்க்காரின் சார்போ அல்லது செல்வாக்கோ இல்லாமல் இயங்கும் கல்வி முறை மற்ருெரு விதமாகும்.

எல்லோருக்கும் இலவசமாகப் பிரைமரி கல்வியளிக்க வேண்டுமென்ற சட்டம் 1936-ல் அமுலுக்கு வந்த பின்பு ‘சர்ச்’சுகளால் நடத்தப்படும் கல்வி ஸ்தாபனங்களின் செல்வாக்கு மங்க ஆரம்பித்து விட்டது. இப்போது பிரான்ஸின் தேசீயக் கல்வித் திட்டப்படி நடைபெறும் மதச் சார்பற்ற ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் கட்டாயப் படிப்பிற்குரிய வயதடைந்தவர்களில் ஐந்தில் நான்கு பங்கினர் சேர்ந்து படிக்கிருர்கள். சர்க்காரின் நேரடி மேற்பார்வையின் கீழ் ஸ்தல ஸ்தாபனங்களால் நடத்தப்படும் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் கூட வியாழக் கிழமைகளில் மதபோதனை அளிக்கப்படுகிறது. பிரான்ஸில் ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் அநேகமாக ஸ்தல ஸ்தாபனங்களால் தான் நடத்தப்படுகின்றன. கல்வித் திட்டத்தின் நடைமுறையிலோ அல்லது கொள்கை அடிப் படையிலோ எவ்வித மாறுதலேயும் கல்வி மந்திரி தான் புகுத்த முடியும். ஆரம்பக் கல்விக்குச் செல வாகும் மொத்தத் தொகையில் 30 சத விகிதத் துக்கும் மேலாக ஸ்தல ஸ்தாபனங்களே செலவிடுகின்றன. ஆயினும், எல்லாப் பிரிவுகளேயும் சேர்ந்த ஆசிரியர் களுக்கும் சர்க்காரே சம்பளம் கொடுக்கிருர்கள்.

‘சர்ச்’சுகளால் நடத்தப்படும் ஆரம்பப் பள்ளிக்கூடங் களில் சட்டப்படி சம்பளம் கிடையாதென்ருலும், அந்த மதப் பிரிவைச் சேர்ந்த பெற்ருேர்கள் அந்தப் பள்ளிக் கூடங்களின் நிர்வாகச் செலவுகளுக்காகத் தாங்களாகவே

நன்கொடையளிக்கிருர்கள். குழந்தைகளின் குணம் திறமைகளை மையமாகக் கொண்ட கல்வி முறை பிரான்ஸில் அமுல் செய்யப்படுகிறது. பள்ளிக்கூடத்தில் பாடத்தின் மூலம் போதிப்பதற்கே முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. தங்களைச் சுற்றிநடைபெறும் அன்ருட வாழ்க்கை சம்பந்தமான வேலைகளைக் குழந்தைகள் நன்கு கவனிப்பதற்குச் சந்தர்ப்பங்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. புத்தகப் படிப்போடு தொழில்—விஞ்ஞானச் செயல்முறைப் படிப்பை செகண்டரி கட்டத்தில் தான் சர்க்கார் இணைத்திருக்கிருர்கள்.

ஆரம்பக் கல்வியின் நடைமுறை அம்சங்கள் :

1. 6 வயதிலிருந்து 14 வயது வரைக் கல்வி கட்டாயமாகவும், நாடு பூராவிலும் இலவசமாகவும் அளிக்கப்படுகின்றது.

2. மாணவர்களுக்கு அவசியமான பாடப் புத்தகங்கள் நோட்டுகள், பென்சில் பேனுக்கள் எல்லாம் இலவசமாக சர்க்காரால் வழங்கப்படுகின்றன.

3. நிர்வாக ரீதியில், 6 வயது வரம்புக்குட்பட்ட (அதாவது 3—6) குழந்தைகளுக்கு என்று நடத்தப்படும் ‘கிண்டர் கார்டன்’களை ஆரம்பக் கல்வியுடன் இணைத்திருக்கிருர்கள்.

4. கிராமப் பள்ளிக்கூடத்திற்கும் நகரப் பள்ளிக்கூடத்திற்கும் பாட போதனை விவரணத்திலோ அல்லது போதிக்கப்படும் முறைகளிலோ அதிக வித்தியாசமில்லை. கிராமப் பள்ளிக்கூட ஆசிரியர்கள் நகரப் பள்ளிக்கூடங்களுக்கும் நகர பள்ளிக்கூட ஆசிரியர்கள் கிராமப் பள்ளிக்கூடங்களுக்கும் மாற்றப்படுவதுண்டு. அந்தந்தக் கிராமப் பிரதேசங்களில் நடைபெறும் ஜீவனத் தொழில்களிலும், விவசாயத்திலும் குழந்தைகளுக்கு ஞானம் ஏற்

பட வேண்டுமென்பதற்காக அவைகள் சம்பந்தமான பாடங்கள் போதிக்கப்படுகின்றன.

5. ஒரு வாரத்தில் 5 நாட்களுக்குப் பள்ளிக்கூடம் நடைபெறுகிறது.

ஒரு நாளைக்கு 6 மணி நேரத்திற்குப் பள்ளிக்கூடம் வேலை செய்கிறது.

6. காலையில் 30 நிமிடங்கள் இடை வேளை ஓய்வும், பிற்பகலில் சாப்பாட்டிற்காக 2 மணிநேர ஓய்வும், மாலையில் 15 நிமிஷங்கள் இடைவேளை ஓய்வும் இருக்கின்றன.

7. வருடத்தில் சுமார் 4 மாதங்கள் பள்ளிக்கூடத்திற்கு ரஜா தரப்படுகின்றது.

8. போதிக்கப்படும் பாடங்கள் :—

(1) பிரெஞ்சு மொழி :— இலக்கணம், எழுதுதல், படித்தல், ஒப்பித்தல்.

(2) செயல் முறைக் கணிதம்.

(3) பிரான்ஸ் நாட்டின் சரித்திரம்.

(4) பிரான்ஸ் நாட்டின் பூகோளம்.

(5) உலக சரித்திரத்தின் சுருக்கப் பாடம்.

(6) உலக பூகோளத்தின் சுருக்கப் பாடம்.

(7) பௌதிகம்.

(8) ரஸாயனம்.

(9) இயற்கை விஞ்ஞானம் (குறிப்பாகப் பிராணி வாழ்க்கை நூல், தாவர நூல் மட்டும்.)

(10) தையல் வேலை (பெண் குழந்தைகளுக்கு மட்டும்)

(11) சித்திரம்.

(12) இசைப் பாடம்.

(13) ஒழுக்க நூலும், சமூக அறிவு நூலும்.



# ஆரம்பக் கல்வியின் அமைப்பு : (பிரான்ஸ்)




குறிப்பு : ........இந்தப் புள்ளிக் கோடுகளுக்குள்ளிட்ட கட்டமே ஆரம்பக் கல்வியின் சரியான நிலையாகும்

→ : இந்த அம்புக்குறி போட்டிருக்கும் இடத்தில் 14 வயதில் சில குழந்தைகள் பள்ளிக்கூடத்தினின்று நின்று விடுவதுண்டு.

+ : 'கிண்டர் கார்டன்'கள் நிர்வாக ரீதியில்தான் ஆரம்பக் கல்வி இலாகாவுடன் சேர்க்கப்பட்டிருக்கிறதே யொழிய இங்கே அந்தப் பாடத் திட்டம் எதுவும் கிடையாது.

(14) உடற் பயிற்சி.

9. 7, 8 பாடங்களின் விஷயங்கள் எவ்விதம் தொழில் அபிவிருத்திக்குப் பயன்படுகின்றன என்பதும்கூட ஆரம்ப கட்டத்திலேயே குழந்தைகளுக்கு மிக நுணுக்கமாகவும், சாமர்த்தியமாகவும் சொல்லித் தரப்படுகின்றது.

10. பெண் குழந்தைகளுக்கு வீட்டு வேலைகளைப் பற்றிய பாடங்களும் சொல்லித் தரப்படுகின்றன.

11. கிராமப் பள்ளிக்கூடங்களில்தான் இருபால் குழந்தைகளும் கலந்து படிக்கிறார்கள்.

12 எந்தக் குறிப்பிட்ட ஒரு கைத்தொழில் பற்றியும் செயல்முறைப் போதனையோ அல்லது பயிற்சியோ பள்ளிக் கூடத்திற்குள் அளிக்கப்படுவதில்லை. ஆயினும், குழந்தை களுக்குத் தங்களுடைய சிறு பிராயம் முதற்கொண்டே சரீர உழைப்புக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென் பதற்காகச் சில பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. ஆனால் இவைகளில் கண்டிப்பொன்றுமில்லை.

## (ஈ) அமெரிக்கா

1. 6 வயதிலிருந்து 14 வயது வரையிலும், சில இடங் களில் 12 வயது வரையிலுமாக ஆரம்பக் கல்வி அளிக்கப் படுகின்றன.

2. சில மகாணங்களில் தினம் 5 மணி நேரமும், இன்னும் சில மாகாணங்களில் தினம் 6 மணி நேரமும், வருஷத்திற்குப் பல இடங்களில் பல விதங்களாக 8, 9, 10 மாதங்கள் வரையிலும் ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் நடை பெறுகின்றன.

3. ஆரம்பக் கல்வி முறை சில இடங்களில் கட்டாய மாயும் இன்னும் சில இடங்களில் இஷ்ட பூர்வமாகவும் இருக்கின்றது.

4. குழந்தைகளின் தனிச் சிறப்பியல்புகளை விருத்தி செய்யும் போக்கிலும், அவர்களுக்கு சமுதாய உணர்ச்சி ஊட்டப்படும் போக்கிலும் ஆரம்பக் கல்வி அமைந்திருக்கிறது.

5. ஆரம்பக் கல்வி ஸ்தாபன முறை பல நிலைமைகளைப் பொறுத்திருக்கிறது. கிராமங்களில் பெரும்பான்மையான பள்ளிக்கூடங்கள் ஒரே ஆசிரியரைக் கொண்டதாகவும் ஒரு அறையில் நடப்பதாகவும் இருக்கின்றன.

6. ஒரு ஆசிரியருக்கு அதிக பட்சமாக 25 லிருந்து 30 பையன்கள் வரை இருக்கிறார்கள்.

7. பள்ளிக்கூடத்தின் நிர்வாகத்தில் பெற்றோர்களின் மேற்பார்வை கண்டிப்பாக அமுல் நடக்கிறது.

8. பள்ளிக்கூடத்தில் போதிக்கப்படும் விஷயங்கள்:-

1. ஆரோக்கிய சாஸ்திரம்.
2. அமெரிக்க—உலகச் சரித்திரம்.
3. கணிதம்.
4. பூகோளம்.
5. ஆரம்ப விஞ்ஞானம்.
6. உடற் பயிற்சி.
7. இசைப் பயிற்சி.
8. கலைப் பயிற்சி.
9. தொழிற் பயிற்சி.
10. மொழி.

9. பள்ளிக்கூடங்களில் போதிக்கப்படும் பாடத் திட்டங்களில் ஒற்றுமை அம்சங்களிருந்தாலும், அவை யாவும் ஒன்றுபோல இருப்பதில்லை.

10. ஸ்தல நிலைமைகளை அனுசரித்துத்தான் பாடப் புத்தகங்களும், பாடத் திட்டங்களுமிருக்கின்றன. இதற்கு ஊக்கம் அளிக்கும் வகையில் உதவி செய்யும் வகையில்

சிறந்த கல்வி நிபுணர்களையும், ஆராய்ச்சிக் கழகங்களையும், பாடத் திட்டத் தயாரிப்பு—போதனை முறைகளைப் பற்றிய பல நூல்களைக் கொண்ட புத்தக சாலைகளையும் அமெரிக்கக் கல்வி இலாகா கொண்டிருக்கிறது.

11. பெரிய நகரங்களில், ஆசிரியர்களும், பள்ளிக்கூட மேற்பார்வை நிர்வாகிகளும், பெற்றோர்களும் கலந்தே பாடத் திட்டங்களைத் தயாரிக்கிறார்கள். இந்த முறையில் கால தாமதம் ஏற்படுகிறது. ஆயினும் இதில் ஜனநாயகத் தன்மைக்கே முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது.

12. பள்ளிக்கூடத்தில் நடைமுறைகளில் பல அம்சங்களிருக்கின்றன. குழந்தையின் அறிவு வளர்ச்சி — திறமை வளர்ச்சிக்கு உதவி செய்ய எல்லா வசதி களையும் அதாவது தொழிற் சாலைகள், விவசாயப் பண்ணைகள், வைத்திய சாலைகள், நூல் நிலையங்கள், பூங்கா வனங்கள், விளையாட்டு மைதானங்கள்—இவைகளனைத் தையும் பயன் படுத்திக்கொள்ளும் போக்கிலேயே நடை முறைகள் வகுக்கப்படுகின்றன.

13. வீட்டு வேலை—சமூகப் பணி முதலியவைகளில் குழந்தைக்கு எதில் மனது பாய்கிறதோ அதில்—ஆனால் அதுவும் முடிவில் சமுதாய உணர்ச்சியை வளர்ப்பதாக இருந்தாக வேண்டும்! குழந்தைகளுக்கு நல்ல பயிற்சி பள்ளிக்கூடத்தில் அளிக்கப்படுகிறது.

14. பாட போதனையாலும் சரி—தொழிற் பயிற்சி யாலும் சரி—சமுதாய உணர்ச்சியை விருத்தி செய்யும் போதனையாலும் சரி எல்லாம் அமெரிக்காவில் குழந்தை களுக்குப் பள்ளிக்கூடத்தில் தான் அளிக்கப்படுகின்றன.

15. ஆரம்பக் கல்வி முறையில் மூன்று முக்கியமான விதங்களிருக்கின்றன. (1) 8—4 திட்டம் (2) 6—3—3 திட்டம் (3) 6—6 திட்டம் என்பதே மூன்று விதங்கள்.

முதல் திட்டப்படி 'நர்ஸரி'ப் பள்ளிக்கூடத்திலும் 'கிண்டர் கார்டன்' பள்ளிக்கூடத்திலும் கழித்த பின்பு குழந்தைகள் 8 ஆண்டுகள் ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் படிக்கவேண்டும். இம்முறைப் பள்ளிக்கூடங்கள் ஏராள மாக இருக்கின்றன.

இரண்டாவது திட்டப்படி 'நர்ஸரி, கிண்டர் கார்டன்' கட்டங்களைத் தாண்டிய பின் குழந்தைகள் ஆறு ஆண்டு கள் ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் படிக்கவேண்டும்.

மூன்ருவது திட்டப்படி 6 ஆண்டுகள் ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் குழந்தைகள் படிக்கவேண்டும்.

16. சுதந்திரம்—சுயாட்சியில் ஆழ்ந்த நம்பிக்கை ஏற்பட வேண்டும் என்ற அடிப்படையில் அமெரிக்கக் கல்வி முறை கூட்டுப் பொறுப்புணர்ச்சியுடன் வகுக்கப் பட்டிருக்கிறது.

17. கல்வி—மத விஷயங்களில் அமெரிக்காவில் பூரண சுதந்திரம் நிலவுகிறது.

18. குழந்தைகளின் சமூக அல்லது பொருளாதார அந்தஸ்துகளைக் கருத்தில் கொள்ளாமல் ஒவ்வொரு குழந் தைக்கும் கல்வி அளிக்கப்பட வேண்டும். இது குழந்தையின் மாற்றக் கூடாத சுதந்திர உரிமை என்பதை அமெரிக்க சர்க்கார் அங்கீகரித்து அதன்படி கல்வி அளிக்கிருர்கள்.

19. கல்வித் திட்டம் வகுப்பதும் அதை அமுல் நடத்து வதும் முற்றிலும் மாகாணங்களின் பொறுப்பாகும். ஆயினும், மத்திய சர்க்கார், கல்வி ஸ்தாபனங்களுக்கு நிலம்—பணம் அளிப்பது மூலமாகக் கல்வி வளர்ச்சிக்கு ஊக்கம் அளிக்கிருர்கள்.

20 ஆரம்பக் கல்வியின் விஸ்தரிப்புகளாகவே 'நர்ஸரி' வகுப்புகளும் 'கிண்டர் கார்டன்' வகுப்புகளுமிருக் கின்றன.

# ஆரம்பக் கல்வியின் அமைப்பு: (அமெரிக்கா)

| வயது | 1 | 2 | 3 | வயது |
|---|---|---|---|---|
| 17 | ஹைஸ்கூல் (4 வருஷங்கள்) | ஸீனியர் ஹைஸ்கூல் 3 (வருஷங்கள் (தனியானது) | பிரிக்கப்படாத ஹைஸ்கூல் (6 வருஷங்கள) | 17 |
| 16 | | | | 16 |
| 15 | | | | 15 |
| 14 | | ஜூனியர் ஹைஸ்கூல் (3 வருஷங்கள்) (தனியானது) | | 14 |
| | | | | 13 |
| 13 | (எலிமெண்டரி) { 10 வருஷங்க: } 8 | | | 12 |
| 12 | 7 | | | |
| 11 | 6 | (எலிமெண்டரி) (8 வருஷங்கள்) 6 | (எலிமெண்டரி) (8 வருஷங்கள்) 6 | 11 |
| 10 | 5 | 5 | 5 | 10 |
| 9 | 4 | 4 | 4 | 9 |
| 8 | 3 | 3 | 3 | 8 |
| 7 | 2 | 2 | 2 | 7 |
| 6 | 1 | 1 | 1 | 6 |
| 4·5 | 'கிண்டர் கார்டன்' | 'கிண்டர் கார்டன்' | 'கிண்டர் கார்டன்' | 4·5 |
| 3·4 | 'நர்ஸரி ஸ்கூல்' | 'நர்ஸரி ஸ்கூல் | நர்ஸரி ஸ்கூல் | 3·4 |
| | 6 - 6 | 6—3—3 | 8—4 | |

...... குறிப்பு: இந்தப் புள்ளிக் கோடுகளுக்குக் கீழே இருக்கும் மூன்று கட்டங்களே மூன்று விதமான முக்கிய ஆரம்பக் கல்வி அமைப்புகளாகும்.

தவிரவும் 7—5. 6—2—4, 6—4—4 என்ற வேறு முறைகளும் உள்ளன.

அடியிலிருந்து மேல் வரை எல்லாவற்றையும் தன்னுள் இணைத்துக்கொள்ளும்முறையின் ஒரு கட்டமே (3-4, 4-5 வயதிலிருந்து) ஆரம்பக் கல்வியின் அமைப்பாகும்

(1) 'கிண்டர் கார்டன்' களும்நர்ஸரிகளும் ஆரம்பக் கல்வியின் விஸ்தரிப்புகளாகவே இயங்குகின்றன.

(2) இது அமெரிக்க பெடரல் செக்யூரிடி ஏஜன்ஸியின் கல்விப் பிரிவினர் வெளியிட்டுள்ள புத்தகத்தில் போடப்பட்டிருக்கும் கல்வி அமைப்பைப்பார்த்துப் போடப்பட்டுள்ளது.

21. அமெரிக்காவில் பெற்ருேர்கள் தங்கள் குழந்தைகளைத் தனிநபர் அல்லது ஸ்தாபனங்கள் நடத்தும் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்ப உரிமை பெற்றிருக்கிருர்கள். ஆனுல் இம்மாதிரிப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை 12 சதவீதத்துக்கு மேலிருக்காது. இம்மாதிரிப் பள்ளிக்கூடங்களுக்குத் தங்கள் குழந்தைகளை அனுப்பும் பெற்ருேர்களுக்கு வரிச் சலுகை எதுவும் கிடையாது என்பதை நாம் கவனிக்க வேண்டும். ஏனெனில், மக்கள் கொடுக்கும் வரிப் பணத்திலிருந்துதான் சர்க்கார் பள்ளிக்கூடங்களுக்குப் பணம் செலவழிக்கிருர்கள். தங்கள் குழந்தைகள் சர்க்கார் நடத்தும் பள்ளிக்கூடங்களில் படிக்கவில்லை என்ற காரணத்தைக் காட்டி அந்த அளவுக்குப் பெற்ருேர்கள் வரிவிலக்குச் சலுகையைப் பெறமுடியாது.

## (உ) செக்கோஸ்லோவோகியா

(1) 6 வயது பிறந்த உடனேயே ஒரு குழந்தை 'தேசீயப்' பள்ளிக்கூடத்தில் சேர்ந்துவிட வேண்டும். 6 வயதிலிருந்து 15 வயது வரைக் கல்வி கட்டாயமாகவும், ராஜ்யம் பூராவிலும், இலவசமாகவும் தரப்படுகிறது. இதன் காரணமாக நகரப் பள்ளிக்கூடங்களில் கல்வி கற்றுக் கொள்ளும் ஆர்வம் பொங்கி யெழுந்திருக்கிறது. இந்த ஆர்வத்திற்கீடாக எல்லோருக்கும் (பள்ளி செல்லும் வயதடைந்த) கல்வியளிக்கப் போதிய கட்டிட வசதியும், ஆசிரியர்களும் இல்லாத நெருக்கடியை சர்க்கார் சமாளிக்க வேண்டியிருக்கிறது. இதைச் சமாளிக்கப் பள்ளிக்கூடங்களில் இரு தொகுதிகளாக வேலை செய்யும் முறையைப் புகுத்தியிருக்கிருர்கள். ஆனுல், கிராமங்களில் இந்த ஆர்வம் அவ்வளவு அதிகமாக ஏற்பட்டு விடவில்லை. இதனுல், கிராமங்களில் ஒரே ஆசிரியரைக் கொண்ட ஒரு

வகுப்புப் பள்ளிக்கூடங்களும், இரண்டு வகுப்புகளும் ஒன்ருக இணைக்கப்பட்ட பள்ளிக்கூடங்களும் ஆரம்பிக்கப் பட்டிருக்கின்றன.

(2) ஆசிரியர் பற்ருக்குறையை அகற்றுவதற்காக நான்கு மாதங்கள் அல்லது 6 மாதங்களுக்கு நீடிக்கும் போதனுமுறைப் பயிற்சி வகுப்புகள் விரிவாக ஆரம்பிக்கப் பட்டுள்ளன.

(3) "முதலாளித்துவ முறையின் கீழ் கொடுக்கப் படும் மேலெழுந்தவாரியான கல்வியைப் போலில்லாது முக்கிய விஷயங்களில் அடிப்படையானதும், உலகாயத வாழ்க்கைக்கு இன்றியமையாததுமான கல்வியையே எங்கள் நாட்டுக் குழந்தைகள் கற்கவேண்டும். இதுவே எங்கள் கல்வியின் நோக்கம்" என்று சர்க்கார் கூறுகிருர்கள். ஆரம்பக் கல்வி 6-வயதிலிருந்து 11—வயதுவரை (ஐந்து ஆண்டுகள்) கொடுக்கப்படுகிறது. தாய்மொழியில் எழுது வதிலும், படிப்பதிலும் குழந்தைகள் பூரணமான தேர்ச்சியைப் பெறுகின்றரீதியில் இந்த நாட்டின் ஆரம்பக் கல்வித் திட்டம் அமைந்திருக்கிறது. முதல் மூன்று ஆண்டு களுக்கு ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் போதிக்கப்படும் பாடங்கள் வருமாறு.

1. தாய்மொழி (செக் அல்லது ஸ்லோவக்) எழுதுதல், படித்தல், ஒப்பித்தல் (இவை மட்டும்)

2. கணிதம் (ஆரம்பம்).

அடுத்த இரண்டு ஆண்டுகளில் முதல் மூன்று ஆண்டு களில் போதிக்கப்படும் பாடங்களோடு போதிக்கப்படும் இதர பாடங்கள் வருமாறு :

1. தாய்மொழி எழுதுதல் ; படித்தல் ; ஒப்பித்தல் ; மொழித் தேர்ச்சிக்காகப் பெரிய பாடங்கள்.

2. கணிதம் (உயர்)

3. சரித்திரம்.
4. பூகோளம்.
5. இயற்கை விஞ்ஞானம்
6. உற்பத்தி—வினியோக முறைகள்.
7. தொழில் விஞ்ஞானத்தின் மூலதத்துவங்கள்.
8. இசைப் பாடம்.
9. கைத்தொழில் பயிற்சி.
10. குடும்பக்கலை (பெண் குழந்தைகளுக்கு மட்டும்.)

(4) நகரப் பள்ளிக்கூடம் தொழிற்சாலைப் பிரதேசப் பள்ளிக்கூடம், கிராமப் பள்ளிக்கூடம் இவைகளுக்கிடையே கொள்கையளவில் அதிக வேற்றுமைகளில்லை. ஆயினும், அந்தந்தப் பிராந்திய வாழ்வைச் சாயலாகக் கொள்ளும் வித்தியாசங்கள் இல்லையென்று சொல்ல முடியாது. அந்தந்தப் பகுதியில் அல்லது பிராந்தியத்தில் இருக்கும் ஆசிரியர்கள், அங்கு வாழும் மக்களுக்கு, அவர்களுடைய அன்றாட வேலைகளைத் திறம்பட நடத்துவதற்கு உதவி செய்கிறார்கள்.

(5) "நிஜமான உலக வாழ்க்கையோடு இணைக்கப் பட்டிருப்பதே எங்கள் கல்வி முறையின் முக்கியமான அம்சம்" என்கிறார் ஹில்டாலாஸ் என்ற பிரபல செக் நாட்டுக் கல்வி நிபுணர். ஆரம்பப் பள்ளியில் முதல் மூன்று ஆண்டுகளில் குழந்தைகள் பேச, எழுத, படிக்க நன்றாகத் தெரிந்து கொள்ளவேண்டும் என்பதற்கே முக்கியத்வம் அளிக்கப் படுகிறது. உள்ளத்தின் எழுச்சியானது மொழிச்சாதனமின்றி உருப்பெற முடியாது என்ற அடிப்படையில்தான் குழந்தைகளுக்கு முதலில் மொழித் தேர்ச்சியில் அதிக அக்கரை ஊட்டப்படுகிறது. "தனக்குத் தோன்றும் எண்ணங்களை வார்த்தைகள் மூலம் வெளியிடுவதற்கு முதலில் கற்றுக்கொண்டாலொழிய, எந்தக் குழந்தையும் எந்த விஷயத்தைப் பற்றியும் சிந்தனை செய்ய முடியாது"

என்கிறார் ஹில்டாலாஸ். இதே காரணத்தினால்தான் முதல் மூன்று ஆண்டுகளில் விஞ்ஞானம், பூகோளம், சரித்திரம், சமூக அறிவு சம்பந்தமான பாடங்கள் குழந்தைகளுக்குத் தனியாகப் போதிக்கப்படுவதில்லை. இவைகள் தாய்மொழிப் போதனையுடனேயே இணைக்கப்பட்ட பாடங்களாகப் போதிக்கப்படுகின்றன.

(6) தங்கள் தாய்நாட்டின் மலைவளங்களைப் பற்றியும், நதிகளைப் பற்றியும், பண்ணைகளில் எவ்வித மிருகங்கள் வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொள்ளப்படுகின்றன என்பது பற்றியும், தானியங்களின் அறுவடை பற்றியும் குழந்தைகள் எழுதுகின்றன; படிக்கின்றன. அவர்களுடைய பாடப் புத்தகங்களிலே, கடைகள், காடுகள், சுரங்கங்கள், தொழிற்சாலைகளைப் பற்றிய விவரங்களையும் அங்கெல்லாம் வேலை செய்பவர்களைப் பற்றிய விவரங்களையும் அழகிய பல வர்ணப்படங்கள் மூலம் விளக்கும் பாடங்களே நிறைந்திருக்கின்றன. ஒவ்வொரு வாரத்திலும் ஒருமுறையாவது குழந்தைகள் பள்ளிக்கூடங்களுக்கு வெளியே அழைத்துச் செல்லப்படுகிறார்கள். பழ விற்பனைச் சாலைக்கோ அல்லது கல்லுடைக்கும் இடத்திற்கோ அல்லது உருளைக்கிழங்கு பயிராகும் தோட்டத்திற்கோ குழந்தைகள் அழைத்துச் செல்லப்படுகிறார்கள். சில சமயங்களில் உணவுப் பொருள்கள், எப்படி ஏற்றுமதி செய்யப்படுகின்றன என்பதைக் குழந்தைகள் கவனிக்க வேண்டும் என்பதற்காக, ரயில்வே நிலையங்களுக்கும் அவர்கள் அழைத்துச் செல்லப்படுகிறார்கள். "தாங்கள் காணும் பல்வேறு நிகழ்ச்சிகள் சம்பவங்கள் மூலம் குழந்தைகளின் அறிவு வளர்ச்சி பெறவேண்டும்" என்பதற்குத்தான் இங்கே முதலிடம் அளிக்கப்படுகிறது.

(7) காலையில் குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்கு வரும்போது "உங்கள் வீட்டில் உள்ள மரத்தினாலான

சாமான்களின் பெயர்கள் என்னென்ன? குளிர்க் காலத்திற்குப் பயன்படும் முறையில் உங்கள் தாயார்கள் எப்படி உருளைக்கிழங்கைச் சேகரித்து வைக்கிறார்கள்?'' இவை போன்ற கேள்விகளுக்குப் பதிலளிக்கத் தயாராயிருக்க வேண்டும்.

(8) சிறு பிராயத்திலிருந்தே குழந்தைகள் உழைப்பின் பெருமையை உணரவும், மக்களின் சுபீட்ச வாழ்வென்பது எல்லோருடைய உழைப்புச் சக்தியின் ஊற்றிலிருந்துதான் பொங்குகிறது என்பதை நன்றாக உணரவும் வாய்ப்புகளை சிருஷ்டித்திருப்பதுதான் செக் நாட்டின் கல்வி வளர்ச்சியென்பதை நாம் கவனிக்கவேண்டும்.

(9) ஆசிரியர்களும் நிறைந்த உற்சாகத்துடன் வேலை செய்கிறார்கள். அவர்களுக்குப் போதிய சம்பளம் தரப்படுகின்றது. குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்கான புதுப் புது முறைகளை ஆராய்ச்சி செய்வதில் அவர்கள் முனைகிறார்கள். ஒவ்வொரு குழந்தையும் தனித்தனியாகக் கவனித்துக் கொள்ளவும், அவர்களுடைய வீடுகளுக்குச் சென்று அவர்களுடைய வேலைகளைக் கவனித்துக் கொள்ளவும், பள்ளிக்கூடத்திற்கு வெளியில் உள்ள சூழ்நிலைகளைப் புரிந்து கொள்ளவும், ஆசிரியர்களுக்கு இப்போது நிறைய அவகாசமும், சந்தர்ப்பங்களும் கிடைக்கின்றன.

(10) ஒவ்வொரு பள்ளிக்கூடத்திற்கும் ஏன் ஒவ்வொரு வகுப்புக்கும் ஒவ்வொரு 'சர்க்கார்' இருக்கிறது! ஆசிரியர்களும், குழந்தைகளும் பெற்றோர்களும் இந்த 'சர்க்கார்' களில் கூட்டுப்பணி புரியச் சேர்ந்திருக்கிறார்கள்!

(11) பள்ளிக்கூடத்தையும், சமுதாயத்தையும் இணைக்கப் பலவித அம்சங்கள் உள்ளன. ஒவ்வொரு பிராந்திய அல்லது ஜில்லா தேசீயக் கமிட்டியிலும், கல்வி விஷயங்களைக் கவனிப்பதற்கென ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர் இருக்கிறார். ஒவ்வொரு பள்ளிக்கூடத்திற்கும்

அதன் அருகாமையில் உள்ள தொழிற்சாலையோ அல்லது சுரங்கமோ அல்லது விவசாயப் பண்ணையோ 'போஷக' ராகப் பணியாற்றுகிறது.

(12) எல்லாப் பெற்றோர்களும் ஆசிரியர்களும் அடிக்கடி பெரிய கூட்டங்களிலோ அல்லது விசேஷ மகா நாடுகளிலோ கூடி கல்விப் பிரச்னைகளைப்பற்றி விவாதிக்கிறார்கள்.

(13) ஒவ்வொரு குழந்தைக்கும் ஏதாவதொரு விஷயத்தில் விசேஷமான பற்றுதலும், திறமையும் இருக்கும் அல்லவா! இந்தப் பற்றுதலையும், திறமையையும் அறிவதில் மிகுந்த ஆராய்ச்சியையும் உழைப்பையும் செக்நாட்டுக் கல்வி நிபுணர்கள் பெற்றோர்களடங்கிய கல்விக் கமிட்டிகளும் 'கமிஷன்'களும் எடுத்துக் கொள்ளுகின்றன.

(14) வாரத்திற்கு 6 நாட்களே பள்ளிக்கூட வேலை நாட்களாகும்.

(15) தினம் பள்ளிக்கூடம் 5 மணி நேரம் வேலை செய்கிறது.

"6-வயதிலிருந்து 11-வயது வரையிலுள்ள கட்டந்தான் ஆரம்பக் கல்வியின் அதாவது பிரைமரி நிலையின் சரியான கட்டமாகும். 11-வயதிலிருந்து 15-வயது வரையில் உள்ள கட்டம், திருந்திய ஆரம்பக் கல்வியின் கட்டமென்றோ அல்லது செகண்டரி கட்டத்தின் முதலாவது வட்டமென்றோ அழைக்கப்படுகிறது. அதாவது, செகண்டரி கட்டத்தின் 'முதலாவது வட்ட'மென்று உணர்ச்சி பூர்வமாகவே சொல்லப்படுகிறது என்பதை நாம் கவனிக்க வேண்டும்

## (ஊ) துருக்கி

இன்று உலகம் வியக்கும் வலிமையுள்ள சிறு நாடான துருக்கியை உருவாக்கிய பெருமை காலஞ்சென்ற கமால் அத்தாதுர்க் என்பவருக்கே சாரும் என்பதை நாமறிவோம்.

அவர் ஒரு முறை பின் வருமாறு முழக்கம் செய்தார்.

"ஏ! துருக்கி வாலிபர்களே! துருக்கியின் சுதந்திரத்தையும், குடியரசையும் எந்நாளும் வீரத்துடன் காத்து நிற்பதே உங்களுடைய தலைசிறந்த கடமையாகும்." எனவே, கமால் பாக்ஷாவின் இந்தப் பொன்மொழிகளில் ததும்பி நிற்கும் தேசபக்தி யுணர்ச்சிதான் துருக்கி நாட்டின் கல்வி முறையின் ஆதர்ச லட்சியமாயிருக்கிறது.

துருக்கிக் கல்வி முறையின் அடிப்படை அம்சங்கள் பின்வருவன :

(1) அறியாமையை எதிர்த்தொழிக்க உறுதியான இடைவிடாத முயற்சி எடுத்துக் கொள்ளப்படவேண்டும் என்பதற்காக ஆரம்பப் பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கையையும், அவைகளின் தரத்தையும் சர்க்கார் பெருக்கியிருக்கிறார்கள். கல்வியை நவீன காலத்தின் விஞ்ஞான முறையில் திருத்தியமைத்திருக்கிறார்கள்.

(2) முன்னேறும் தலைமுறையில் வாழும் குழந்தைகள் தங்கள் தாய்நாட்டிற்குச் செய்ய வேண்டிய பொறுப்புகள் அனைத்தும் கல்வித் திட்டத்தில் நன்கு வரையறுத்துக்கூறப்பட்டிருக்கின்றன.

(3) தேசீய ஐக்கியத்தை வளர்ப்பதிலும், வேற்றுமை வெறுப்பூட்டும் கொள்கைகளை ஒழிப்பதிலும் குழந்தைப் பிராயத்திலிருந்து வளரும் ஒரு ஜீவ சக்தியைத் தோற்றுவிக்கும் ரீதியில் பாடத் திட்டம் இருக்கிறது.

(4) சிந்தனைச் சுதந்திரம் நன்கு காப்பாற்றப்பட வேண்டும்; மத சுதந்திரம் நன்கு மலர்ந்திட வாய்ப்பு இருக்கவேண்டும்; தீமையற்ற மதாசாரங்கள் செழித்தோங்க வேண்டும்; மத வெறிக்கோ அல்லது மூடப் பழக்க வழக்கங்களுக்கோ இடமில்லாமற் செய்யவேண்டும்;

இந்த இலட்சியங்களையே துருக்கியின் கல்வித் திட்டம் கொண்டிருக்கிறது.

(5) வாழ்க்கையின் வெற்றிக்கு முதற்படியான தொடக்க—உணர்ச்சியைக் குழந்தைகளுக்கு அளிக்கும் ரீதியில் கல்வி முறை அமைந்திருக்கிறது.

6) புதிய தலைமுறைக் குழந்தைகள் எவ்விதம் சிக்கனமாக வாழவேண்டும். எவ்விதம் கடினமாக உழைக்க வேண்டும். எவ்விதம் தேசத்தின் பொருளாதார சமூக முன்னேற்ற வேலைகளில் தீவீரமாக ஈடுபடவேண்டும் என்பதைப் போதிக்கும் ரீதியில் கல்விமுறை அமைந்திருக்கிறது.

(7) தன் குடும்ப—சமூகத்தின்பால் குழந்தைகள் அன்பு செலுத்த வேண்டுமென்றும், இன மத வேறுபாட்டுணர்ச்சியின்றி எல்லோரிடத்திலும் மரியாதையுடன் பழக வேண்டுமென்றும் சர்க்கார் எதிர்பார்க்கிறார்கள். இத்துறையில் அவர்களுக்கு உறுதியான நம்பிக்கை இருக்க வேண்டும். அது மேலும் மேலும் வளர்ந்தோங்க வேண்டும் என்ற போக்கில் குழந்தைகளுக்குக் கல்விப் பாடத் திட்டம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

(8) 'கலையழகில் ததும்பி நிலவும் கல்வி மதிப்புகளைக் குழந்தைகளுக்கு எடுத்துச் சொன்னால்தான், அவர்கள் பள்ளிக்கூடம் இல்லாத வேளையில் விரும்பத்தகாத விகாரக் கேளிக்கைகளிலிருந்து தூர விலகி நின்று, இயற்கையழகினை அனுபவிக்கும் இன்பத்தில் திளைத்திருப்பார்கள்' என்று சர்க்கார் நினைக்கிறார்கள். சர்க்காரின் இந்தக் கருத்தையொட்டி, குழந்தைகளுக்கான கலை—ஞான போதன முறையும், பயனுள்ள பொழுது போக்கும், பயிற்சி முறையும் கல்வித் திட்டத்தில் இடம் பெற்றிருக்கின்றன.

(9) சிறந்த ஆசிரியர்களேயும், திறமையான தொழி லாளிகளேயும் பெருக்கும் வகையில் நல்ல பயிற்சி குழந்தை களுக்குச் சிறுபிராயம் முதற்கொண்டே தரப்படுகிறது.

(10) மத போதனே என்பது ஆரம்பப் பள்ளிக்கூடப் பாடத் திட்டத்துடன் ஒரு பகுதியாகச் சேர்ந்திருக்கிறதே யொழிய, தனியாக அது போதிக்கப்படுவதில்லை.

(11) தேசீய ஆரம்பக் கல்வித் திட்டம், குழந்தையின் மனப்பண்பை யொட்டியே வகுக்கப்பட்டுள்ளது. குழந் தையின் செயல் திறனுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படு கிறது. இந்த அடிப்படையில்தான் பாடத் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. குழந்தைகளுக்குக் கல்வியளிப் பது சம்பந்தமாகத்தீவிரமான ஆராய்ச்சி நடத்தப்படுகிறது. மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை கல்வி 'காங்கிரஸ்' மகா நாடுகள் நடைபெறுகின்றன. இந்த மகாநாடுகளில் கல்வி நிபுணர்களும், ஆசிரியர்களும் தீவிரமாகக் கலந்துகொண்டு அப்போதைக்கப்போது கல்வித் துறையில் வேறுநாடுகளில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களேப் பற்றியும், தங்களுடைய நாட்டில் மாறிக்கொண்டு வரும் நவீன மனப் போக்கு களேப் பற்றியும் விவாதிக்கிருர்கள். இவ்வித ஆராய்ச்சி முடிவுகளால் ஆரம்பக் கல்வித் திட்டம் வளர்ச்சியடைந் திருக்கிறது.

(12) குழந்தையின் கல்வித் திட்டத்தில், தேசீய அடிப்படையில் மேனுட்டு முறைகளேப் பின்பற்றுவதே முக்கியமான அம்சமாயிருக்கிறது.

(13) துருக்கியக் கலாசாரத்தைப் போதிப்பதை முக்கிய லட்சியமாகக் கொண்ட ஒரு தேசீய ஸ்தாபனம் போன்றதுதான் இங்குள்ள ஆரம்பப் பள்ளிக்கூடம். போதிய ஆசிரியர்கள் இல்லாத நிலைமையைச் சமாளிக்க சர்க்கார், ஒரு குறுகிய கால ஆசிரியர் பயிற்சித் திட்டத்தை

அமுலுக்குக் கொண்டு வந்து நடத்துகிருர்கள். இந்த ஆசிரியர்களின் பயிற்சிக்காலம் 8 மாதங்களே யாகும். இந்தப் பயிற்சிக்கு விவசாயக் குடும்பங்களிலிருந்தே நபர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள். இம்மாதிரியான ஆசிரியர்கள் 400 பேர்கள் வசிப்பதும் 50 குழந்தைகள் (பள்ளிக்கூடம் செல்லும் வயதடைந்தவர்கள்) உள்ளதுமான கிராம ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் நியமிக்கப்படுகிருர்கள். விவசாயம், கட்டிடம் கட்டுவது, சரித்திரம், விஞ்ஞானம், பூகோளம், கணிதம், மொழி ஆகியவைகளில் இவர்களுக்குப் பயிற்சி கொடுக்கப்படுகிறது. கிராமத்தின்மீது இவர்களுக்குப் பிரியம் ஏற்படவும், குழந்தைகளுக்கு அன்புடன் போதிக்கும் உற்சாகம் ஏற்படவும், சர்க்கார் இப்படிப் பயிற்சி பெறும் ஆசிரியர்களுக்குச் சொந்த வீடுகளைக் கட்டிக் கொடுக்கிருர்கள். இந்த ஆசிரியர்களைக் கொண்ட கிராமப் பள்ளிக்கூடங்கள் குழந்தைகளுக்குப் பயனளிக்கும் சமூகக் கல்வியை நவீன அடிப்படையில் அளிக்கிறது.

(14) நகரங்களே அங்குள்ள ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்குப் பொறுப்பாக்கப்பட்டிருக்கின்றன.

(15) பள்ளிக்கூடம் தினம் 5 மணி நேரமே நடைபெறுகிறது. தொழிலாளர்களின் குழந்தைகள் பள்ளிக்கூடமில்லாத வேளையில் தங்களுடைய குடும்ப உதவிக்காக ஏதாவது தொழில் அல்லது வேலை செய்து பிழைப்பதற்கு உதவியாகத் தினம் ஒரு வேளையே பள்ளிக்கூடம் (காலை 8 மணியிலிருந்து பகல் 1 மணிவரை) நடைபெறுகிறது.

(16) ஆரம்பக் கல்வி 7 வயதிலிருந்து 12 வயது வரை அளிக்கப்படுகிறது. கல்வி நிர்வாகம், கொள்கை வகுத்தல் முதலிய ஏற்பாடுகளில் சர்க்காரின் மத்திய மேலாதிக்கம் நிலவுகிறது.

(17) சரீர உழைப்பை விருத்தி செய்துகொள்ள வசதி செய்வதும் பாடப் புத்தக மூலம் கல்வியறிவு அளிப்பதும் இவ்விரண்டுமே குழந்தைகளுக்குச் சம அளவில் தரப்படுகின்றன.

(18) ஒழுக்க போதனை, சரித்திரம், சமூக ஞானம் இவை கண்டிப்பான அம்சங்களாக இருக்கின்றன. வாரத்திற்கு $5\frac{1}{2}$ நாட்களே பள்ளிக்கூட வேலை நாட்களாகும்.

## (எ) ஸ்வீடன்

1. ஸ்வீடன் நாட்டின் கல்வி முறை ஒரே மாதிரியானதல்ல. எலிமெண்டரி பள்ளிக்கூடமும், செகண்டரி பள்ளிக்கூடமுமே கேந்திர ஸ்தானங்களை வகிக்கின்றன.

2. கல்வி ஆண்டு செப்டம்பர் முதல் தேதியன்று ஆரம்பமாகிறது. முதல் 'டெர்ம்' (காலம்) டிஸம்பர் மாத மத்தி வரை நீடிக்கிறது. இரண்டாவது 'டெர்ம்' ஜனவரி முதல் தேதி ஆரம்பமாகி, ஜூன் முதல் வாரம் வரை நீடிக்கிறது.

3. ஏழு வயதிலிருந்து 16 வயது வரையில் கல்வி கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது. சில இடங்களில் 6—2 திட்டமும், சில இடங்களில் 7—1 திட்டமும், சில நகரங்களில் 8 அல்லது 9 ஆண்டு கட்டாயப் படிப்புத் திட்டங்களும் அமுல் நடத்தப்படுகின்றன.

6—2 திட்டம்: — 6 வருஷங்கள் ஆரம்பப் பள்ளிக்கூடத்திலும் 2 வருஷம் தொடர்ச்சிப் பள்ளிக்கூடத்திலும் (கன்டினுவேஷன் ஸ்கூல்) படித்துவிட்டுக் குழந்தைகள் மேல் படிப்புக்குச் செல்ல வேண்டும்.

7—1 திட்டம் :— 7 வருஷங்கள் ஆரம்பப் பள்ளிக்கூடத்திலும், 1 வருஷம் தொடர்ச்சிப் பள்ளிக்கூடத்திலும் படித்துவிட்டுக் குழந்தைகள் மேல் படிப்புக்குச் செல்ல வேண்டும்.

# ஆரம்பக் கல்வியின் இன்றைய அமைப்பு : (ஸ்வீடன்)

வயது வரம்பு

21
20
19
18
...17
16
15
14
13
12
11
10
9
8
... 7

மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் 'ஜிம்னேஷியம்' 4 3 2 1

'மிடில் ஸ்கூல்' (4 ஆண்டுகள்) 4 3 2 1

6 5

நான்கு அல்லது ஐந்து ஆண்டுகள் 'பிரைமரி' 4 3 2 1

சர்வகலா சாலை பிரவேசப் பரீட்சை

3 2 1

மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் 'ஜிம்னேஷியம்' 4 3 2 1

3 2 1

மிடில் ஸ்கூல் (4 ஆண்டுகள்) 5 4

2 1

வயது வரம்பு

21
20
19
18
17
16
15
14
13
12
11
10
9
8
7

குறிப்பு :—

..............இந்தப் புள்ளிக் கோடுகளுக்குள்ளிட்ட கட்டமே ஆரம்பக் கல்வியின் சரியான கட்டத்தைக் குறிக்கிறது. 7 வயதிலிருந்து 16 வயது வரையில் கல்வி கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது என்பதைக் காட்ட 7-16 வரையில் புள்ளிக் கோடுகள் கீழிருந்து மேல் வரையிலும் போடப்பட்டிருக்கின்றன.

**'ஸ்விடிஷ் எஜுகேஷன்' என்ற தலைப்பில் இங்மார் டூரிங் என்ற மிகச் சிறந்த ஸ்விடிஷ் கல்வி நிபுணர் எழுதிய கட்டுரையில் போடப்பட்டிருக்கும் கல்வி அமைப்புப் படத்தை யொட்டி வரையப்பட்டுள்ளது.**

# ஆரம்பக் கல்வியின் உத்தேசிக்கப்பட்டுள்ள அமைப்பு




**குறிப்பு :** ..........இந்தப் புள்ளிக் கோடுகளுக்குள்ளிட்ட கட்டமே ஆரம்பக் கல்வியின் சரியான கட்டத்தைக் குறிக்கிறது: 7 வயதிலிருந்து 16 வயது வரையில் கல்வி கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது என்பதைக் காட்ட 7-16 வரையில் புள்ளிக் கோடுகள் கீழிருந்து மேல் வரையிலும் தரப்பட்டிருக்கின்றன.

“தி ஸ்வீடிஷ் ஸ்கூல் ரிபார்ம்—1950” என்ற தலைப்பில் ‘இங் மார் டூரிங்’ தொகுத்திருக்கும் புத்தகத்திலிருக்கும் கல்வி அமைப்புப் படத்தையொட்டிப் போடப்பட்டுள்ளது.

8—9 திட்டம்:—1947 ஆம் ஆண்டு முதல் சில நகரப் பள்ளிக்கூடங்களில் 7 வயதிலிருந்து 15 வயது வரையிலும், 7 வயதிலிருந்து பதினாறு வயது வரையிலும் கல்வி, ஆரம்பப் பள்ளிக்கூடத்திலிருந்து செகண்டரிப் பள்ளிக்கூடம் வரை கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது.

4. தினம் கீழ்வகுப்புகளில் 4 அல்லது 5 காலப் பகுதிகளாகவும் மேல் வகுப்புகளில் 6 அல்லது 7 காலப்பகுதி களாகவும் பாடங்கள் சொல்லித் தரப்படுகின்றன. ஒவ்வொரு காலப் பகுதியும் 45 நிமிஷங்கள் நீடிக்கின்றன.

5. 1946 ல் கல்வித் திட்டத்தைப் பூராவும் ஆராய்ந்து சிபார்சுகளைச் சமர்ப்பிக்க ஒரு 'ராயல் ஸ்கூல்' கமிஷன் அமைக்கப்பட்டது. இந்தக் கமிஷன், ஆரம்பக் கல்வி குறைந்த பட்சம் 9 ஆண்டுகளுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்று சிபார்சு செய்தது; இந்தக் காலம் முடிந்த பிறகு நேராக உத்தியோகமோ அல்லது தொழிலோ செய்ய விரும்பும் மாணவர்களுக்கு, கடைசி இரண்டு வருஷங்களுக்குத் தொழில் கல்வி அளிக்கவேண்டுமென்றும் சிபார்சு செய்தது.

6. ஸ்வீடன் தேசத்து ஆரம்பப் பள்ளிக்கூடங்களை யெல்லாம் ஸ்தல ஸ்தாபனங்களே நடத்துகின்றன.

7. ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் போதிக்கப்படும் முக்கிய பாடங்கள்:—

1. ஸ்வீடிஷ் மொழி.
2. சமய போதனை.
3. சரித்திரம்.
4. கணிதம்.
5. இயற்கை விஞ்ஞானம்.
6. பூகோளம்.
7. குடும்பக் கலை (பெண்களுக்கு மட்டும்).

8. கைத்தொழில்.

9. உடற்பயிற்சியும் விளையாட்டும்.

அநேக ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் ஆங்கில மொழியும் சொல்லித் தரப்படுகிறது.

8. ஆரம்பப் பள்ளிக்கூடத்தின் போதனு முறையில் அதிகமான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. தனக்கு விருப்பமான முறையில் குழந்தை உற்சாகத்துடன் கல்வி கற்கவேண்டுமென்பதற்குத்தான் அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. பொதுவாகக் குழந்தைகளுக்குத் தொழில் ஞானம் அளிப்பதற்கே முதலிடம் தரப்பட்டிருக்கிறது.

9 ஒவ்வொரு ஆரம்பப் பள்ளிக்கூடத்திற்கும், சினிமாப் படம் காட்டும் சாதனம், ரேடியோ, பிலிம்கள், நவீன உலகப் படங்கள், பல வர்ணப் படங்கள்—இவைகள் இருக்கின்றன. சிறந்த நாடகங்கள், பிரசங்கங்கள், அந்நிய மொழிப் பயிற்சிப் பாடங்களை எல்லாம் ஒவ்வொரு நாளும் 30 நிமிஷங்களுக்குப் பள்ளிக்கூடத்தில் ஒலிபரப்பி நிகழ்ச்சி மூலம் மாணவர்கள் கேட்கிருர்கள்.

10. பள்ளிக்கூடப் படிப்புக்குத் தேவையான எல்லாச் சாமான்களும் புத்தகங்களுட்பட—மாணவர்களுக்கு இலவசமாக அளிக்கப்படுகின்றன.

11. பகல் போஜனமும் பல சமயங்களில் இலவசமாக மாணவர்களுக்கு அளிக்கப்படுகின்றது.

12. ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் மேல் வகுப்புக்களை பூகோள அமைப்பு ரீதியில் மத்தியப்படுத்தும்போக்கு இப்போதெல்லாம் இந்நாட்டில் அதிகமாகத் தென்படுகிறது. அத்துடன், இதனுல் கிராமப் பகுதிகளில் வாழும் குழந்தைகளுக்குச் சிரமம் ஏற்படாதிருக்கும்படியான வசதிகளும் செய்து தரப்படுகின்றன.

இம்மாதிரி மத்தியப்படுத்தப்படும் ஆரம்பப் பள்ளி வகுப்புகளுக்குச் செல்லும் கிராமக் குழந்தைகளுக்கு இலவசமான பஸ் போக்குவரத்து வசதியைச் சர்க்கார் செய்து தருகிருர்கள். இம்மாதிரியான மத்தியப்படுத்தும் ஏற்பாட்டால் ஆரம்பக் கல்வியின் தரம் உயர்வாயிருக்கும் என்று கருதப்படுகிறது.

13. ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் படிக்கும் ஒரு குழந்தை 4-வது வகுப்பிலிருந்தோ அல்லது 6-வது வகுப்பிலிருந்தோ செகண்டரிப் பள்ளிக்கூடத்திற்கு நேராகப் போகலாம். ஆயினும் ஒவ்வொரு ஸ்வீடிஷ் குழந்தையும் ஆரம்பப் பள்ளிக்கூடத்தின் 4 வகுப்புக்களையாவது பூர்த்தி செய்யாமலிருப்பதில்லை.

14. ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களின் சங்கங்கள் குழந்தைகளுக்குப் போதிக்க வேண்டிய தொழிற் பயிற்சிப் படிப்பைப் பற்றி அதிகக் கவனம் செலுத்துகின்றன. இந்தச் சங்கங்களே இது சம்பந்தமான இதர நாடுகளின் அனுபவங்களைப் பற்றிய நீண்ட விமரிசனங்களை வெளியிடுகின்றன.

15. கட்டாயக் கல்வி முறையை அமுலுக்குக் கொண்டு வருவதில் ஒரு கஷ்டமும் சர்க்காருக்கு ஏற்படவில்லை. இந்தக் கல்வி விதியை மீறுகின்ற பெற்ருேர்களுக்கு அபராதம் விதிக்கப்படுகிறது. சிலர் விஷயத்தில் அவர்களுடைய குழந்தைகள் அந்தக் குடும்பங்களிலிருந்து பிரிக்கப்பட்டு வேறு வீடுகளில் வைக்கப்படுகிருர்கள்.

16. சில ஜில்லாக்களில் உள்ள பள்ளிக்கூடங்கள் $36\frac{1}{2}$ வாரங்களுக்கு வேலை செய்கின்றன. இதர பள்ளிக்கூடங்கள் எல்லாம் 39 வாரங்கள் வேலை செய்கின்றன. இது கிராம-நகரப் பள்ளிக்கூடங்கள் இரண்டுக்குமே பொருந்தும்.

17. ஸ்வீடிஷ் பார்லிமெண்டால் நியமிக்கப்பட்ட ராயல் ஸ்கூல் கமிஷன் கல்விப் பிரச்னைகளைப் பற்றி விரிவான விசாரணை செய்து பல உயரிய சிபாரிசுகளைச்செய்துள்ளது. அவைகளில் பலவற்றை அந்நாட்டு சர்க்கார் ஏற்கெனவே ஏற்றுக்கொண்டு அவைகளின்படி சில இடங்களில் பரீட்சார்த்தப் பள்ளிக்கூடங்களை நடத்தி வருகின்றார்கள். அக்கமிஷன் செய்துள்ள முக்கியமான சில சிபார்சுகள் கீழே தரப்பட்டிருக்கின்றன

இந்தச் சிபாரிசுகளை ஆதாரமாகக் கொண்ட கல்வி முறை 1960-க்குள் நாடு முழுவதும் பூரணமாகச் செயல்படத் தொடங்கிவிடும்.

(1) பல மாதிரி ஆரம்பப் பள்ளிக்கூடங்களையும், நடுத்தரப் பள்ளிக்கூடங்களையும், செகண்டரி உயர்தரப் பள்ளிக்கூடங்களையும் இணைத்து மத்தியப்படுத்திவிட வேண்டும்.

(2) 7 வயதிலிருந்து 16 வயது வரை எல்லாவற்றையும் யும் தன்னுள் இணைத்துக் கொண்டுவிடும் 'காம்ப்ரஹென்ஸிவ்' பள்ளிக்கூட முறையை அமுலுக்குக்கொண்டு வரவேண்டும். இதன் காலம் 9 ஆண்டுகளாக இருக்க வேண்டும்.

(3) இந்த 9 ஆண்டுப்படிப்பையும், பால்யகட்டம் (7 வயதிலிருந்து 11 வயதுவரை): மத்திய கட்டம் (11 வயதிலிருந்து 14 வயதுவரை): உயர்கட்டம் (14 வயதிலிருந்து 16 வயதுவரை) என்று மூன்று கட்டங்களாகப் பிரிக்க வேண்டும். பால்ய கட்டத்தில் 4 வகுப்புகளும், மத்திய கட்டத்தில் 3 வகுப்புகளும், உயர் கட்டத்தில் 2 வகுப்புகளுமிருக்க வேண்டும். பால்ய கட்டத்தில், லோயர் கிரேடு ஆசிரியர்களும், மத்திய கட்டத்தில் ஹயர் கிரேட், ஆசிரியர்களும், உயர்கட்டத்தில், மொழித்தேர்ச்சியும், பல

பாடங்களில் தேர்ச்சியும் பெற்ற பட்டம் பெற்ற ஆசிரியர் களும் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லித் தரவேண்டும்

(4) ஆங்கிலம் கட்டாயப் பாடமாக 5-வது வகுப்பி லிருந்து ஆரம்பமாக வேண்டும். 9-வது வகுப்பில் ஆரம்பத் தொழிற் கல்விக்கு ஏற்பாடு செய்யவேண்டும். சந்தர்ப்பங் களுக்கேற்ப இந்தத் தொழில் ஞானமும்-பயிற்சியும் தனி யானதொழில் பள்ளிக்கூடங்களிலும், அல்லது இதே ' காம் பிரி ஹென்ஸிவ் ' பள்ளிக்கூடங்களிலும் அளிக்கப்பட வேண்டும். அவசியம் ஏற்படும்போது இப்பயிற்சி தீவிர மாக்கப்படவேண்டும்.

(5) எட்டாவது வகுப்பிலிருந்து ஆங்கிலம் கட்டாயப் பாடமாக இருக்க வேண்டியதில்லை. அடியில் விவரிக்கப் படும் ஏதாவது இரண்டு பாடங்களை இந்த வகுப்பிலிருந்து மாணவர்கள் இஷ்டபூர்வமாகக் கற்றுக் கொள்ளலாம்.

(1) ஜெர்மன்-ஆங்கில மொழிகள்.

(2) ஆங்கில மொழியும் ஒரு தொழில் ஞானந்தரும் பாடமும்.

(3) இரு தொழில்களைப் பற்றிய பயிற்சிகள்.

(4) ஆங்கில மொழியும், ஸ்வீடன் நாட்டுத் தொழில் ஏதாவதொன்றில் பயிற்சியும்.

(5) ஏதாவது ஒரு தொழில் சம்பந்தமான தத்துவப் படிப்பும், ஸ்வீடன் நாட்டுத் தொழில் ஒன்றின் செயல் முறைப்பயிற்சியும்.

**(6) கட்டாயப் பாடங்கள் போதிக்கப்பட வேண்டிய நேர விவரணம் :**

| | வாரத்திற்கு |
|---|---|
| (1) பிழைப்புக்கு வழி செய்யும் தொழி லின் செயல்முறைப் பயிற்சி | 20-லிருந்து 24 மணி |

(2) பொது விஷயங்கள் உடற் பயிற்சி விளையாட்டுகள் 10 மணி

(3) பிழைப்புக்கு வழிசெய்யும் தொழில் 4 விருந்து உத்தியோகம்பற்றிய புத்தகப் படிப்பு 6 மணி

**இஷ்ட பாடங்கள் போதிக்கப்பட வேண்டிய நேர விவரணம் :**

(1) மொழிகள்-இதர பொது விஷயங் களைப்பற்றிய பாடங்கள் 4 விருந்து 5 மணி

(7) 9-வது வகுப்பிலிருந்துதான் தொழில்-உத்தியோகம் சம்பந்தமான புத்தகப் படிப்புக்கும்-செயல் முறைப் பயிற்சிக்கும் மாணவர்கள் திருப்பிவிடப்பட வேண்டும்.

(8) வாரத்திற்கு மூன்று தொகுதி நேர வேலைப் பிரிவும், மாதத்திற்கு ஒரு தொகுதி நேர வேலைப் பிரிவும், விவசாய காலத்தில் மட்டும் அனுஷ்டிக்கப்படும் தொகுதி நேர வேலைப் பிரிவுமாக பலவிதமான தொகுதிகளாகப் பள்ளிக்கூடம் வேலை செய்யவேண்டும். வாரத் தொகுதி முறையின்படி மாணவர்கள் இரு கோஷ்டிகளாகப் பிரிக்கப்பட வேண்டும். (அதாவது, திங்கள்-செவ்வாய்-புதன்கிழமைகளில் பள்ளிக்கூடம் வரும் முதல் கோஷ்டி வியாழன்-வெள்ளி-சனிக்கிழமைகளில் பள்ளிக்கூடம் வரும் இரண்டாவது கோஷ்டி.)

(9) ஒரு மாதத்திலிருந்து மூன்று மாதங்களுக்கு நீடிக்கும் மாதாந்திரத் தொகுதி முறையின்படி, தொழிற் பயிற்சிக்குத் தீவிர ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

(10) விவசாயம்-இதை யொட்டிய இதர தொழில்களில் நிறைந்த பயிற்சியையும், ஞானத்தையும் குழந்தைகள் பெறும் வண்ணம் தினம் இரண்டு மணிக்குக் குறையாமல் போதனைக் காலம் இருக்கவேண்டும். இங்கே

பள்ளிக்கூடத்திற்குள் கொடுக்கப்படும் போதனை செயல் முறைப் பயிற்சியுடன் குழந்தைகளுக்கு வெளியில் நடக்கும் வேலைகளை நேரில் பார்த்து உற்சாகமும், அறிவும் பெறு வதற்கு ஏற்பாடுகளும் செய்யப்பட வேண்டும்.

(11) பால்ய கட்டத்தில், நாட்டு மொழிப் போதனை யுடன், சிறு கைத்தொழில்கள்-தையல் வேலை-மர வேலை களில் ஆரம்பப் பயிற்சி முதலியவைகளில் குழந்தைகள் தேர்ச்சி பெறவேண்டும்; இங்கே இருபால் குழந்தைகளும் கலந்தே படிக்கவேண்டும்; இருபால் குழந்தைகளும் ஆர் வத்துடன் படிப்பதற்கான சூழ்நிலை சிருஷ்டிக்கப்பட வேண்டும். மத்திய கட்டத்தில், இந்தப் பயிற்சிகள் எல்லாம் கட்டாயமாக்கப்பட வேண்டும். தொழில் பயிற்சி தரும் விஷயத்தில் பால் வரம்புகளும் சக்திகளும் கவனிக் கப்பட வேண்டும்.

(12) உயர் கட்டத்தில் குடும்பப் பராமரிப்புக் கலை யைக் கட்டாயமாக இருபால் குழந்தைகளும் கற்றுக் கொண்டாக வேண்டும். வீட்டை நிர்வகிப்பது-வீட்டுக்குத் தேவையான சாமான்களை வாங்குவது, சிக்கனமாகச் செல வழிப்பது, சமைப்பது, மாவு அரைப்பது போன்ற பல வேலைகளில் பயிற்சி தரப்படவேண்டும். தவிரவும், சர்வே செய்வது, என்ஜினீயரிங், தொழிற்சாலை விவரங்கள் முதலியவைகளிலும் பயிற்சி தரவேண்டும்.

(13) எல்லாப் பள்ளிக்கூடங்களிலும், பொதுவாக 5½ நாட்களே பள்ளிக்கூட வேலை நாட்களாக இருக்க வேண்டும்.

### (ஏ) சீனு

(1) தொடர்ச்சியான சிறந்த பண்பாட்டைப் பெற்ற தொரு மாபெரும் சீனுவிலே இன்று கம்யூனிஸ்டுகளின் அதிகாரப் பிடிப்பின்கீழ் ஜனநாயக சர்வாதிகார ஆட்சி

நடைபெறுகிறது. புரட்சியின் வெற்றிக்குப் பிறகு, சீன நாடும் ஒரு இடைக்காலத்தைச் சமாளித்துக் கொண்டிருக்கிறது. சீன-ஜப்பானிய யுத்தம், தேசியவாதிகளுக்கும் கம்யூனிஸ்டுகளுக்கும் நடைபெற்ற நீண்ட நாளைய உள்நாட்டு யுத்தம் இவைகளினுல் சீன மக்கள் எவ்வளவோ வேதனைகளை அனுபவித்திருக்கிருர்கள். 1949-ல் மாஸேதுங் தலைமையில் புதிய சீன சர்க்கார் ஏற்பட்டது. ரஷ்ய 'லட்சியத்' திற்கொப்ப, ஆனுல் தங்கள் நாட்டின் நிலைமைகளை யொட்டிய மாறுபட்ட ராஜீய உபாயங்களின் மூலம் அங்கே கம்யூனிஸ்டுகள் சீன வாழ்வையே மாற்றியமைத்துக் கொண்டிருக்கிருர்கள். இன்று சீனுவில் புனரமைப்பு வேலைகள் எல்லாம் நடந்து கொண்டிருக்கும் நிலைமையிலிருக்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும். ஆயினும், முன்னேற்றப் பாதையில் அந்நாடு மாபெரும் சாதனைகளில் ஈடுபட்டிருக்கின்றது என்பதை மட்டும் மறுக்க இயலாது.

(2) 'கம்யூனிஸ்டு' சீனுவில் இன்னமும் ஆரம்பக் கல்வி நாடு பூராவும் விஸ்தரிக்கப்படவில்லை. இன்றுள்ள நிலைமையில், அங்கே 12 வயதுக்குட்பட்ட குழந்தைகள் எல்லோருக்கும் பள்ளிக்கூடங்களில் பூரா நேரமும் இருந்து படிக்கக்கூடிய வசதிகள் பூரணமாக இருக்கின்றன என்று சொல்வதற்கில்லை.

(3) சீனக் கல்வியின் முக்கியமான நோக்கங்களாவன :

1. 'ஏகபோகி' களின் உரிமையாயிருந்த கல்வியைப் 'பாட்டாளி' வர்க்கத்தின் உரிமையாக்குவது.

2. குழந்தைகளை யெல்லாம் நல்ல 'கம்யூனிஸ்ட்' களாக மாற்றுவது.

3. எவ்வளவு பேருக்கு முடியுமோ அவ்வளவு பேருக்கு எழுதவும் படிக்கவும் வசதி செய்வது.

4. பிரத்தியட்ச அரசியல் பொருளாதார நிலைமைகளை யொட்டிப் 'பழமை' யான பிற்போக்குக் கொள்கைகளை மாற்றும் ரீதியில் கல்வி முறையை அமைப்பது.

5. புத்தகப் படிப்புக்கும்-செயல்முறைக்கும் இசைந்த முறையில் கல்வி அமைப்பை பூராவாகப் மாற்றி அமைப்பது.

மேலே கூறப்பட்ட லட்சியப் பாதையில், சிறுபிரா யத்திலிருந்தே, குழந்தைகளுக்குக் கல்வியளிக்க வேண்டும் என்பதே புதிய சீன சர்க்காரின் திட்டமாகும்.

(4) 'முதலாளித்வ-நிலப்பிரபுத்வ' ஆட்சியில் ஆரம் பக் கல்வி கற்கக்கூடிய வசதியில்லாமல் படிக்க முடியாம லிருந்துவிட்ட விவசாயிகளின், தொழிலாளிகளின் குழந்தை களில் 13-14 வயதாகிவிட்டவர்களுக்கு இப்போது ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் முதல் சலுகை அளிக்கப்படுகிறது. இப்போது 7 வயதுக் குழந்தையின் படிப்பிலிருந்து அவர்கள் படிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். இதனால், இன்று ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் இடநெருக்கடி ஏற்பட்டிருக்கிறது.

(5) தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் பல பள்ளிக் கூடங்கள் இன்னமும் நாடு முழுவதும் இருக்கின்றன. சர்க்கார் இவைகளுக்கு, தற்போதைக்கு ஊக்கமும் உதவியு மளிக்கிறார்கள். கிராமங்களில் விவசாயிகளே தான் தங்க ளுக்கெனப் பள்ளிக்கூடங்களை நிர்மாணித்துக் கொள்ளு கிறார்கள். அவர்களுக்குள்ள பணவசதியையொட்டியும், அவர்களின் சொந்தக் கற்பனைப்படியும் அந்தப் பள்ளிக் கூடங்கள் அமைகின்றன.

(6) பத்துச் சிறு குழந்தைகளைப் பெற்றுள்ள ஒரு தொழிலாளிக்கு ஒரு குழந்தைப் பராமரிப்பு நிலையம் என்றும், 20 குழந்தைகளுக்கு (3 வயதிலிருந்து 6 வயது வரை உள்ளவர்களுக்கு) ஒரு 'கிண்டர் கார்டன்' பள்ளிக்கூடம்

என்றும் சர்க்கார் திட்டமிட்டிருக்கிருர்கள். இந்தக் 'கிண்டர் கார்டன்' பள்ளிக்கூடங்கள் இப்போதைக்கு நகரங்களில்தான் நடைபெறுகின்றன.

(7) ஆரம்பப் பள்ளிக்கூட முறையில், ஜூனியர் ஸீனியர் என்றரீதியில் இதுவரை இருந்துவந்த வேற்றுமை கொஞ்சங் கொஞ்சமாக நீக்கப்படுகிறது.

(8) 1951-ம் வருஷத்தில் வரையப்பட்ட புதுக் கல்வித் திட்டத்தில்7 வயதிலிருந்து 12 வயதுவரை ஆரம்பக் கல்வி யளிக்கப்படவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. அதன்படியான நடைமுறைகள் 1952-ல் அமுலுக்கு வந்தன. இந்த ஆரம்பக் கல்வியின் காலம் ஐந்து ஆண்டுகளாகும்.

(9) 3 வயதிலிருந்தே ஆரம்பக்கல்வி ஆரம்பமாகிறது என்றுதான் சொல்லவேண்டும். ஏனெனில் 3 வயதிலிருந்து 5 வயது வரையில் உள்ள குழந்தைகளுக்காக நடத்தப்படும் 'நர்ஸரிப் பள்ளிக்கூடங்களும், 5 வயதிலிருந்து 7 வயது வரையில் உள்ள குழந்தைகளுக்காக நடத்தப்படும் 'கிண்டர் கார்டன்' பள்ளிக்கூடங்களும் ஆரம்பக்கல்வியின் விஸ்தரிப்புகளாகவே அமைந்திருக்கின்றன.

(10) 7 வயதிலிருந்து 18 வயது வரை- அதாவது 'பிரைமரி' (5 ஆண்டுகள்), 'ஜூனியர் மிடில்' (3 ஆண்டுகள்), 'ஸீனியர் மிடில்' (3 ஆண்டுகள்)- கல்வி கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது.

(11) அநேகமாக எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் இருபால் குழந்தைகளும் கலந்தே படிக்கிருர்கள்.

(12) ஒழிந்த வேளை-குறுகிய கால ஆரம்பப் பள்ளிக்கூடங்களும்-விவசாயிகள்-தொழிலாளிகளுக்கென இருக்கின்றன.

(13) வாரத்திற்கு 6 நாட்கள் பள்ளிக்கூடம் வேலை செய்கின்றன.

(14) தினம் 5 மணி நேரம் பள்ளிக்கூடம் வேலை செய்கிறது.

(15) புரட்சித் தத்துவங்களில் பொதுவான ஞானத்தையும், விஞ்ஞானத் தத்துவங்களில் அடிப்படை ஞானத்தையும் குழந்தைகள் பெறும் வண்ணம் பாடத் திட்டமும், போதனையும் வகுக்கப்பட்டிருக்கின்றன.

## (ஐ) எகிப்து

ஜீவநதியாகிய நைல்நதி பாய்கின்ற காரணத்தினால் எகிப்தின் வளம் பெருகியிருக்கிறது. இக்கரையில் தோன்றிய எகிப்தியரின் நாகரிகமும், கலாச்சாரமும் உலகறியும் பெருமை பெற்றவை என்பதை நாமும் அறிந்திருக்கிறோம். வானமளந்திடும் பொற்புடன் கம்பீரமாக நிற்கும் அந்நாட்டு 'பிரமிட்'கள் உலக வரலாற்றில் இறவாத இடத்தைப் பெற்றுவிட்டன. ஏனெனில் எகிப்து நாட்டுப் பண்பாட்டின் சின்னங்களாக அவை சரித்திராசிரியர்களின் கவனத்தைக் கவர்ந்திருக்கின்றன.

1836-ல் முகமதலி பாக்ஷா என்பவர், எகிப்திய கல்வி முறையை மேனாட்டுக்கல்வி முறைக்குச் சரிநிகராக மாற்றியமைக்க அஸ்திவாரம் போட்டார். அதுவரை எகிப்தில், அல்-அஹார் சர்வகலாசாலையும், 'குத்தாப்'களுமே கல்வியளிக்கும் ஸ்தாபனங்களாக இருந்தன. (குத்தாப் என்பது தான் எகிப்தின் புராதன ஆரம்பப் பள்ளிக்கூடம்) அராபிய மொழியில் நல்ல தேர்ச்சியையும், கொரானை நன்கு புரிந்து கொண்டு அதை மனப்பாடம் செய்வதில் ஆற்றலையும் குழந்தைகள் பெறவேண்டுமென்ற அளவுக்கே இந்த ஸ்தாபனங்கள் கல்வியைப் போதித்தன. மக்களின் கலாச்

6

சாரத்திலிருந்து இக் கல்விமுறை மூலாதாரம் பெற்றது என்றே சொல்லவேண்டும். "உலக வல்லரசுகளின் கோஷ்டியில் எகிப்தும் ஒரு ஸ்தானத்தை உத்திரவாதமாகப் பெற வல்ல ஒரு சக்தியை அளிக்கக்கூடிய" புதிய கல்வி முறையொன்றைப் புகுத்த முகமதலி பாக்ஷா விரும்பினுர். அவருடைய விருப்பத்தின் விளைவாகத் தோன்றியதுதான் எகிப்திய நவீனக் கல்விமுறை. இந்த நவீனக் கல்விமுறை புராதனக் கல்வி முறையை முழுதும் மாற்றிவிடவில்லை. முகமதலி பாக்ஷாவால் புகுத்தப்பட்ட நவீன மேனுட்டுக் கல்வி முறையும், வழிவழியாய் வளர்ந்த எகிப்தின் புராதன மத-மொழிக் கல்வி முறையும் பரஸ்பரம் வெவ்வேருகவே வளர்ந்து வந்தன.

1882-ல் பிரிட்டிஷார் அந்நாட்டைப் பிடித்துக்கொண்டனர். அவர்கள் தங்கள் ஆங்கில மொழியைப் புகுத்தியதன் மூலம் 'புதிய' பள்ளிக்கூடமுறை அங்கே தோன்றியது. இந்தப் பள்ளிக்கூடங்களில் போதனு மொழி ஆங்கிலமாயிருந்தது. சரித்திரம், பூகோளம், விஞ்ஞானம், இதர பாடங்கள் எல்லாம் ஆங்கில மொழியிலேயே போதிக்கப்பட்டன. ஆங்கில மொழியின் செல்வாக்குப் பெற்ற புதிய கல்வி முறையும், புராதனக் கல்வி முறையும் எகிப்திய சமுதாயத்தில் இருவிதமான ராஜீய சக்திகளைச் சிருஷ்டித்து விட்டன. புராதன வழியையே பற்றிச் செல்ல வேண்டுமென்ற மதவாதிகளின் உணர்ச்சி ராஜீய வடிவம் எடுத்துக்கொண்டது ஒருபுறம். மற்ருருபுறம், ஆங்கில மொழியின் தேர்ச்சியால் வளர்ந்துவிட்ட புதிய எகிப்திய தேசீய உணர்ச்சி. இந்தப் புதிய தேசீயம் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராகவிருந்ததே யொழிய, மத-மொழி வெறியுடனிருக்கவில்லை. எகிப்து தன்னுட்சி பெற்று, சமூக பொருளாதார வாழ்வைப் பலப்படுத்திக்கொள்ள வேண்டுமானுல், கல்வியில் விஞ்ஞானப் பாணியைப் புகுத்திவிட வேண்டும் என்

றும், அப்போதுதான் அக்கல்வி வழியில் பயிலும் மாணவர்கள் எகிப்தின் எதிர்கால வாழ்விற்குச் சிறப்புறச் சேவை செய்ய முடியும் என்றும் இந்த தேசீய வாதிகள் நம்பினுர்கள். புராதன சிறப்பியல்புகளையும் நவீன கால முன்னேற்றப் போக்குகளுடன் இணைக்கவேண்டும் என்பதே இவர்களுடைய வாதமாகும். 1923-ல் எகிப்து நாட்டின் புதிய அரசியல் திட்டம் அமுலுக்கு வந்தது. இதன்படி, எகிப்தியர் உள்நாட்டு நிர்வாகத்தைப் பொறுத்த மட்டில் பூர்ண சுயாட்சி பெற்றனர். இந்த அரசியல் திட்டத்தின் 19-வது விதியின்படி, 6-வயதிலிருந்து 12-வயதுவரை ஒவ்வொரு குழந்தைக்கும் கட்டாயப் படிப்புக்கு உத்திரவாதமளிக்கப்பட்டது. பின்னர் மாறி மாறி ஏற்பட்ட கட்சி சர்க்கார்களின் மாறுபட்ட கொள்கைகளினுல் கல்வி வளர்ச்சியின் முன்னேற்றத்தில் விருவிருப்பு இருக்கவில்லை. ஒரு கட்சி சர்க்கார், ஆரம்பக் கல்விதான் முக்கியம் என்று கருதியது. இன்னெரு சர்க்காரோவெனில் 'செகண்டரி' உயர் கல்வி தான் மிக முக்கியம் என்று கருதியது. மூன்ருவது கட்சியோவெனில் கல்விமுறையில் நிலவி நின்ற 'த்வைத'தன்மையை அகற்றிவிட்டு ஒரே சீராக இயங்கும் அடிப்படை ஆரம்பக் கல்வியைப் புகுத்தவேண்டுமென்று கருதியது. கல்வி பெறுவதில் எல்லாக்குழந்தைகளுக்கும்சமவாய்ப்பிருக்க வேண்டும் என்று பல தலைவர்கள் முழங்க ஆரம்பித்தார்கள். ஆயினும், சமவாய்ப்பு என்ற சொல்லுக்கு இத்தலைவர்கள் இருவித அர்த்தங்களைக் கற்பித்தனர்! தன்னுடைய திறமைகளைப் பூரணமாக அபிவிருத்தி செய்துகொள்ள அனுமதிக்கும் கல்வி முறையில்தான் குழந்தைகள் பயிலவேண்டும் என்பது ஒரு சாரார் கருத்து. மற்றெரு சாராரோவெனில், கல்வி பெறுவதில் குழந்தைகளுக்கு எவ்விதக் கட்டுப்பாடும் இருக்கக் கூடாது; படிக்கவிரும்புகின்ற எல்லோருக்கும் எல்லாக் கல்விமுறைகளும் திறந்தேயிருக்கவேண்டும்

என்று கூறினார்கள். இந்த மாறுபட்ட கருத்துள்ளவர்களின் தலையீடுகளாலும், அதிகாரத்தினாலும் கல்வி முன்னேற்றம் விருவிருப்பாக இல்லையென்று சொல்லலாமேயொழிய, அடியோடு தேங்கிவிட்டது என்று சொல்ல முடியாது. ஆயினும் எல்லாக் கருத்தினரும் கல்வியில் அபிவிருத்தி ஏற்படவேண்டும் என்றுதான் ஏகோபித்த அபிப்பிராயங் கொண்டிருந்தனர் என்பதைச் சொல்லித் தீரவேண்டும்.

ஆரம்பக் கல்வியளிப்பதில் இருவித முறைகள் இருந்து வந்தன என்று ஏற்கனவே நான் குறிப்பிட்டேன். ஒன்று 'எலிமெண்டரி' கல்வி என்றும் மற்றொன்று 'பிரைமரி' கல்வி என்றும் அழைக்கப்பட்டன. 'பிரைமரி' கல்விதான் இரண்டிலும் சிறந்ததாயிருந்தது. தரத்திலும், அது குழந்தைகளுக்குத் தாராளமாக அளித்த வாய்ப்புகளிலிருந்துமே அது சிறந்ததாகக் கருதப்பட்டது. 'பிரைமரி' பள்ளிக்கூடத்தில் படிக்கும் குழந்தை தனது 12-வது வயதில் ஒரு பரீட்சை எழுதவேண்டும். அப்பரீட்சையில் தேறிவிட்டால் அக் குழந்தை நேராக 'செகண்டரி' பள்ளிக்கூடத்திற்குப் போகமுடியும். பிறகு உயர்கல்வி கற்க சர்வ கலாசாலைக்குப் போகமுடியும். ஆனால், 'எலிமெண்டரி' பள்ளிக்கூடத்தில் படிக்கும் குழந்தை அதிகச் சிறப்பாக ஒரு 'எலிமெண்டரி' போதனா முறைப் பள்ளிக்கூடத்திற்கோ அல்லது அல்-அஹார் கல்விக் கலாசாலைக்கோ அல்லது 'எலிமெண்டரி' வர்த்தக—தொழில்—விவசாயப் பள்ளிக்கூடத்திற்கோதான் மேற்படிப்புக்காக நேராகப் போக முடியுமேயொழிய, சர்வகலாசாலை உயர் படிப்புக்குப் போக முடியாது. தவிரவும் இந்த இருவிதக் கல்விமுறைகளுக்கிடையே வேறு சில அடிப்படையான வித்தியாசங்களுமுண்டு. 'பிரைமரி' பள்ளிக்கூடத்தில் வாசிக்கும் குழந்தை சம்பளம் கட்டியாக வேண்டும். ஆனால், 'எலி

மெண்டரி' பள்ளிக்கூடத்தில் படிக்கும் குழந்தைகளுக்குச் சம்பளம் இல்லை. 'பிரைமரி' பள்ளிக்கூடக் குழந்தை 8-வது வயதில் ஏதாவதொரு அந்நிய மொழியைக் கற்றுகவேண்டும். அக்குழந்தைக்குப் போதிக்கச் சிறந்த ஆசிரியர்கள் உண்டு. நல்ல பாடப்புத்தகங்கள், நல்ல சாதனங்கள், நல்ல கட்டிட வசதி முதலிய யாவும் 'பிரைமரி' பள்ளிக்கூடக் குழந்தைக்கு இருந்தன. இவைகள் எல்லாம் 'எலிமெண்டரி' பள்ளிக்கூடத்தில் படிக்கும் குழந்தைக்கு இல்லை. இதன் விளைவாக, 'பிரைமரி' பள்ளிக்கூடத்தில் படிக்கும் குழந்தைகள் 12வது வயதில் 'எலிமெண்டரி' பள்ளிக்கூட குழந்தையைக் காட்டிலும் கல்வியறிவில் சிறந்து விளங்கிற்று. மேலும் 'பிரைமரி' பள்ளிக்கூடக் குழந்தையின் எதிர்காலம் 'எலிமெண்டரி' பள்ளிக்கூடக் குழந்தையினுடையதைக் காட்டிலும் பிரகாசமாயிருந்தது. இருவிதக் கல்வி முறைகளுக்கும் இடையே நிலவி நின்ற முக்கியமான வித்தியாசத்தை நிர்ணயித்தது சம்பளப் பணமேயல்லாது குழந்தைகளிடையே காணப்படும் திறமையோ அல்லது திறமையின்மையோ அல்ல!

இந்த இருவிதக் கல்விமுறைகளையும் இணைத்து ஒன்று படுத்த எவ்வளவோ வழிகள் கையாளப்பட்டன.

(1) 1938-ல், 'பிரைமரி' பள்ளிக்கூடத்தின் முதலாண்டு பாட திட்டத்திலிருந்தும், 1945-ல் இரண்டாமாண்டு பாட திட்டத்திலிருந்தும் அந்நிய மொழி போதனை அகற்றப்பட்டது. 'எலிமெண்டரி' பள்ளிக்கூடக் குழந்தை 10 வயது வரையில் 'பிரைமரி' பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிப்பதற்கு வசதியாக இவ்வேற்பாடு செய்யப்பட்டது. இது ஒரு பெரிய திருத்தமாகும்.

(2) 1945-ல் 'எலிமெண்டரி' பள்ளிக்கூடக் குழந்தையும் 'பிரைமரி' தேர்வுப் பரீட்சையில் கலந்துகொள்ள அனுமதிக்கப்பட்டது. அக்குழந்தை, அந்நிய மொழி சம்பந்த

மான பரீட்சைக்குப் பதிலாக அராபிய மொழி சம்பந்த மான பரீட்சை எழுத அனுமதிக்கப்பட்டது. இதன் விளை வாக, 'எலிமெண்டரி' பள்ளிக்கூடக் குழந்தைக்கு 'செகண் டரி' படிப்புக்குச் செல்ல வாய்ப்புக் கிட்டியது. இவ்வேற் பாடு 'எலிமெண்டரி' பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கு புதிய சகாப்தத்தையே சிருஷ்டித்தது என்றுகூடச் சொல்லலாம்.

(3) 1944-ல் 'பிரைமரி' பள்ளிக்கூடச் சம்பள விதி அகற்றப்பட்டது. இதுவே முக்கியமான நடவடிக்கை யாகும். 1949-ல் இதற்கு அரசியல் திட்டபூர்வமான சம்ம தம் அளிக்கப்பட்டது. மேலும் தங்கள் குழந்தைகள் படிக்கும் புத்தகங்களுக்காகவும், உபயோகப்படுத்தும் இதர பள்ளிக்கூடச் சாதனங்களுக்காகவும், பள்ளிக்கூடத் தில் அளிக்கப்படும் உணவுக்காகவும் பெற்றோர்கள் பணம் கொடுக்க வேண்டியதில்லை என்றும் சர்க்கார் தீர்மானித்தார் கள். இதனுல், எவ்வளவு ஏழ்மையான குடும்பத்தைச் சேர்ந் தவராயினும் எல்லாக் குழந்தைகளும் தாங்கள் விரும்பிய படிப்பை இலவசமாகப் படிப்பதற்குச் சம வாய்ப்புக் கிட்டியது என்று சொல்லலாம்.

(4) 'பிரைமரி' பள்ளிக்கூடத்தின் மூன்ருமாண்டுப் பாடத் திட்டத்தில் அந்நிய மொழிக்கு வகை செய்யப்பட் டிருந்ததைத் தவிர வேறு ஒரு வித்தியாசமும் 'பிரைமரி' 'எலிமெண்டரி' கல்விமுறைகளுக்கிடையே இல்லாமற் செய்யப்பட்டது.

(5) 6-வயதிலிருந்து 12-வயது வரையில் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் படிக்கும் குழந்தைகளுக்கும் ஒரே அந்தஸ்தைக் கொடுக்க வேண்டுமென்பதே தற்போது காணப்படும் போக்காகும்.

(6) 1951-ல், எகிப்து பார்லிமெண்டு 6-வயதிலிருந்து 12-வயது வரை அளிக்கப்படும் ஆரம்பக் கல்வியைக் கட்

டாயமாக்கும் ஒரு மசோதாவை நிறைவேற்றியது. முதல் இரண்டாண்டுகளுக்குக் கொடுக்கப்படும் 'கிண்டர்கார் டன்' கல்வி வகுப்புகளில் குழந்தைகளுக்கு மொழி, கலே, கணிதம், விளையாட்டுகள் முதலியவை போதிக்கப்படுகின் றன. மூன்ருவது, நான்காவது ஆண்டுகளில் கொரான், அராபிய மொழி, கணிதம், செயல்முறை, க்ஷேத்திரக் கணி தம், கலைகள், கைத்தொழிற் (தோட்டக் கலை அல்லது தையல் வேலை) பயிற்சி, விளையாட்டுகள், சங்கீதம் முதலி யவை போதிக்கப்படுகின்றன. ஐந்து, ஆருவது ஆண்டு களில் ஒரு அந்நிய மொழியுட்பட மேலே கூறப்பட்ட பாடங்களுடன், சமூகப் பாடங்களும், விஞ்ஞானப் பாடங் களும் போதிக்கப்படுகின்றன.

(7) கிராமப் பகுதியில் அளிக்கப்படும் கல்வியைப் பற்றியும் சொல்லியாக வேண்டும். சமீபகாலம் வரையில் நகரப் பகுதியில் உள்ள 'எலிமெண்டரி-பிரைமரி' பள்ளிக் கூடங்களில் என்னென்ன பாடங்கள் சொல்லித்தரப்பட்டு வந்தனவோ அதே பாடங்கள்தான் கிராமப் பகுதி 'எலிமெண்டரி-பிரைமரி' பகுதி பள்ளிக்கூடங்களிலும் சொல்லித்தரப்பட்டு வந்தன.

1943-ல்தான் எகிப்தில் கிராமப் பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப்பட்டன. கிராமாந்திரப் படிப்பு முறையில் அடிப்படையான மாறுதல்களைச் செய்யவேண்டுமென்ருல் கிராமப் பகுதிப் பள்ளிக்கூடங்களுக்கென விசேஷ ஆசிரி யர்களைத் தயார் செய்வது அவசியம் என்று உணரப்பட்டது. 1947-ல் கெய்ரோவுக்கு 20 மைல்களுக்கு அப்பாலுள்ள ஒரு இடத்தில் ஒரு போதனுமுறைப் பயிற்சிப் பள்ளிக் கூடம் திறக்கப்பட்டது. இப் பள்ளிக்கூடத்திற் பயிற்சி பெற்று கிராமப் பள்ளிக்கூடங்களுக்கு ஆசிரியர்களாக நியமிக்கப்படுபவர்கள், தங்கள் மாணவர்களுக்கு, அவர்கள்

நல்ல பிரஜைகளாக வாழ்வதற்கும், கிராமாந்திர வாழ்க்கையின் நுட்பங்களையெல்லாம் தெரிந்து கொள்வதற்கும், கிராம வாழ்க்கையுடன் இரண்டறக் கலந்து பழகும் திறமையைப் பெறுவதற்கும், கிராமப் பகுதியின் தொடர்ச்சியான முன்னேற்றத்திற்குப் பணி செய்யும் உற்சாகமான மனதைப் பெறுவதற்கும் நன்ருகப் போதிக்கவேண்டும் என்று உத்தரவிடப்பட்டார்கள். இந்த ஆசிரியர்களுக்குப் பயிற்சிக் காலம் 5 ஆண்டுகளாகும். தங்களுடைய 6 ஆண்டுப் 'பிரைமரி' படிப்பை முடித்துக் கொண்டவர்களிலிருந்து தான் இந்த ஆசிரியர் பயிற்சிக்கான மாணவர்கள் பொறுக்கப்பட்டார்கள்.

(8) கட்டாயக் கல்விமுறை என்பது ஆரம்பக்கல்விக் கட்டத்திற்குப் பொருந்தியதாயிருக்கிறது. இந்தக் கல்வியளிக்கும் பூராப் பொறுப்பையும் கல்வி மந்திரி இலாகாவே நிர்வகிக்கிறது.

(9) உடல் நலக் குறைவு என்ற காரணத்தைத் தவிர வேறு எந்தக் காரணத்தைக் கொண்டும் எந்தக் குழந்தையும் பள்ளிக்கூடத்திற்குப் போகாமலிருக்க முடியாது. மீறி நடந்தால், பெற்ருேருக்கு ஒரு எகிப்திய பவுன் அபராதமோ அல்லது ஒரு வாரம் வரை சிறைத் தண்டனையோ விதிக்கப்படும்.

(10) நகரப் பள்ளிக்கூடத்தில் போதிக்கப்படும் வர்த்தகத் தொழில் படிப்பும், கிராமப் பகுதிகளில் போதிக்கப்படும் விவசாயப் படிப்பும் இஷ்டபூர்வமான பாடங்களாக வாரத்திற்கு மூன்று நாட்களில் தினம் 2 மணிநேரத்திற்குச் சொல்லித் தரப்படுகிறது.

(11) கட்டாய ஆரம்பக் கல்விச் செலவுக்கென புதிய வரியை சர்க்கார் வசூலிக்கிருர்கள். தனிப்பட்டவர்களும், மத ஸ்தாபகர்களும், அந்நிய நாட்டவரும் தனிப் பள்ளிக்

கூடங்களைப் பூரண சுதந்திரத்துடன் நடத்துகிறார்கள். 1950-ல் நிறைவேற்றப்பட்ட சர்க்காரல்லாதார் பள்ளிக் கூடச் சட்டப்படி, அந்தப் பள்ளிக்கூடங்களில் வேலை செய்யும் ஆசிரியர்களும் சர்க்கார் ஊழியர்கள் போல சர்க்காரிடமிருந்து சம்பளம் பெறுபவர்களாக மாற்றப்பட்டார்கள். அந்நிய நாட்டவர் நடத்தும் பள்ளிக்கூடங்களில், எகிப்திய தாய் மொழி, சரித்திரம், பூகோளம் முதலியவை போதிக்கப்பட வேண்டுமென்று சர்க்கார் விதித்திருக்கிறார்கள்.

குறிப்பு :— தற்போது எகிப்தில் முடியாட்சி மறைந்து விட்டது. 'புரட்சிக் கவுன்சில்'ன் பேரால் ஒரு வகை ராணுவ ஆட்சி நடைபெறுகிறது. இந்த ஆட்சியின் கீழ் கல்விக் கொள்கை நிர்வாக விஷயத்தில் தீவிரமான மாறுதல் எதுவும் இதுவரை ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. பழைய கல்வி முறையில் அதாவது அதிக மதச் சார்புள்ள கல்வி முறையில் அதிகமான மாறுதல்களைச் செய்வார்களா என்பது சந்தேகமே! எனினும் பொறுத்துப் பார்ப்போம்!

## (ஒ) இஸ்ரேல்

இங்கே ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் எட்டுக் கிரேடுகளில் எட்டாண்டுப் படிப்பு சொல்லித்தரப்படுகிறது. பாலஸ்தீனத்தில் (யூதர் பகுதியில்) மூன்றுவித மனப் போக்குகளையொட்டிய மூன்றுவிதப் பள்ளிக்கூடங்களிருக்கின்றன. அவையாவன :—

(1) பொது, (2) மிஸ்ராஹி (3) தொழில். பொது ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் அளிக்கப்படும் கல்வியில் யூத மதப் பண்பாடு பிரதிபலிக்க வேண்டுமென்றும், ஆனால் மத

நியதிகளை அனுசரிப்பதைப் பெற்றோர்களுக்கும், வீடுகளுக்கும் விட்டுவிட வேண்டுமென்றும், முதல் மனப்போக்கில் ஊறியவர்கள் நம்புகிறார்கள். அவர்களின் நம்பிக்கையின் படியே பொது ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் நடக்கின்றன. 100-க்கு 53 பேர்கள் இந்தப் பள்ளிக்கூடங்களில் படிக்கிறார்கள்.

மிஸ்ராஹி முறையில் நடக்கும் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் யூத மத போதனைக்கே முதலிடம் தரப்படுகிறது. 100-க்கு 24 பேர்கள் இந்தப் பள்ளிக்கூடங்களில் படிக்கிறார்கள்.

தொழிற் பயிற்சி யளிக்கும் ரீதியில் நடைபெறும் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில், தேசீய உணர்ச்சி தொழிற் சங்க இயக்கம் இவை கலந்த கல்வி முறை அளிக்கப்படுகிறது. சரீர உழைப்புக்கே இந்தக் கல்வியில் முக்கிய ஸ்தானம் அளிக்கப்படுகிறது. நிலத்திலும், தொழிற்சாலைகளிலும் சளைக்காது வேலை செய்ய வேண்டுவதற்காகவும், வியாபாரம், பாங்குகள், உத்தியோகங்கள் முதலிய துறைகளில் ஏற்படும் அதிகக் 'கூட்ட'த்தைக் குறைப்பதற்காகவும், சிறு பிராயத்திலிருந்தே குழந்தைகள் தொழிற் பயிற்சி பெற வேண்டும் என்ற அடிப்படையில் இங்கே கல்வியளிக்கப்படுகிறது.

ஆரம்பக் கல்வி கட்டாயமில்லை ; அநேகமாக எல்லா ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலும் சம்பளம் வசூலிக்கப்படுகிறது. ஆசிரியர்கள் ஒழுக்க சீலர்களாகவும், மதப் பற்றுள்ளவர்களாகவும் இருக்க வேண்டுமென்று விதிக்கப்படுகிறது "தந்தையே சிறந்த ஆசான்" என்பது யூதர்களின் கருத்தாகும்.

பெண்கள் பள்ளிக்கூடத்தில், கைத்தொழில் பயிற்சிக்கும், தையல் வேலைக்கும் 3 மணி நேரம் அதிகமாக ஒதுக்கப்படுகிறது. இது மூன்ருவது கிரேடிலிருந்து ஆரம்பமாகிறது. பைபிள், ஹீப்ரு மொழி, கணிதம், சித்திரம் சிற்பம், இசைப் பயிற்சி, தோட்டக்கலை முதலிய பாடங்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் நேரங்களைச் சிறிது குறைப்பதன் மூலமே இந்த அதிகப்படி 3 மணி நேரம் ஒதுக்கப்படுகிறது. பொது ஆரம்பப் பள்ளிக்கூடங்களைப் போலவே ஐந்து-ஆருவது கிரேடுகளில் இரண்டு காலப் பகுதிகளும் ஏழு—எட்டாவது கிரேடுகளில் மூன்று காலப் பகுதிகளும் மத போதனைக்கென மிஸ்ராஹி ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலும் ஒதுக்கப்படுகின்றன. இதேபோல பொது மிஸ்ராஹி பெண்களின் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் மத போதனைக்கென காலப் பகுதிகள் ஒதுக்கப்படுகின்றன.

தொழில் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் ஆண்-பெண் குழந்தைகள் கலந்தே படிக்கிருர்கள். கைத்தொழிற் பயிற்சியளிக்கும் விஷயத்தில்தான் இங்கே பால் அடிப்படையில் வித்தியாசம் காண்பிக்கப்படுகின்றது.

ஒவ்வொரு மனப்போக்கையும் பிரதிபலிப்பவர்களின் தனித்தனியான பள்ளிக்கூடங்களின் பாடம்-போதனை நடைமுறையெல்லாம் அவர்களின் மத்திய கமிட்டியொன்ருல் கல்வி இலாகாவின் மேற்பார்வையில் தயாரிக்கப்படுகின்றது.

தங்கள் தாய் நாட்டின் அமைப்பு-சரித்திரம் முதலிய விஷயங்களை ஒவ்வொரு குழந்தையும் பயிலவேண்டுமென்ற கட்டாயம் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் அமுல் செய்யப்படுகின்றது.

## (தொழில்) ஆரம்பப் பள்ளிக்கூடத்தின் பாடத் திட்டமும்-போதனை காலப்பகுதிகளும்

| பாட விவரம் | 8 கிரேடுகளில் ஒரு வாரத்திற்கான காலப் பகுதிகள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| படித்தல் (இலக்கியம்) | ... | ... | 7 | 7 | 4 | 4 | 3 | 3 |
| மொழி { இலக்கணம் எழுதுதல் | ... | ... | ... | ... | 2 | 2 | 2 | 2 |
| புராதன இலக்கியம் | ... | ... | ... | ... | ... | ... | 1 | 1 |
| பைபிள் | ... | ... | 3 | 4 | 4 | 4 | 3 | 3 |
| சமூகக் கல்வி (பேச்சுக்கள்) | ... | ... | ... | ... | 1 | 2 | 2 | 2 |
| தாயகத்தின்-சரித்திரம் | .. | ... | 4 | 2 | 1 | ... | ... | ... |
| யூதர்-யூதமதம்-தொழிற்சங்க இயக்கம் | ... | ... | ... | ... | ... | ... | 1 | 2 |
| பூகோளம் | ... | ... | ... | ... | 2 | 2 | 2 | 2 |
| இயற்கை நூல் | ... | ... | ... | 3 | 3 | 4 | 4 | 4 |
| யூத-பொதுச் சரித்திரம் | ... | ... | ... | ... | ... | 2 | 3 | 3 |
| புராதன-கலாசார சரித்திரம் | ... | ... | ... | 1 | 1 | ... | ... | ... |
| கணிதம் | ... | ... | 3 | 3 | 4 | 4 | 5 | 5 |
| தொழிற்பயிற்சி | ... | ... | 5 | 5 | 6 | 5 | 4 | 4 |
| தோட்டக் கலை-தையல் வேலை விவசாயம் முதலியன | ... | ... | 5 | 5 | 6 | 6 | 7 | 7 |
| சித்திரம்-சிற்பம் | ... | ... | 2 | 2 | 2 | 2 | 2 | 1 |
| இசைப்பாடம் | ... | ... | 2 | 2 | 1 | 1 | 1 | 1 |
| உடற்பயிற்சி | ... | ... | 2 | 2 | 2 | 2 | 2 | 2 |
| ஆங்கிலம் | ... | ... | ... | ... | 5 | 5 | 4 | 4 |
| மொத்தம் | 29 | 29 | 33 | 36 | 44 | 45 | 46 | 46 |

## (பொது) ஆரம்பப் பள்ளிக்கூடத்தின் பாடத் திட்டமும், போதனு காலப் பகுதிகளும்

| பாட விவரம் | எட்டு கிரேடுகளிலும் ஒரு வாரத்திற்கான காலப் பகுதிகள் | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | |
| பைபிள் | ... | ... | 6 | 5 | 5 | 5 | 5 | 4 | ↑ இயற்கை நூலுமுண்டு ↓ |
| ஹீப்ரு | ... | ... | 6 | 7 | 5 | 4 | 4 | 5 | |
| நீதிப்பாடம் (மிஷ்ஞு) | ... | ... | ... | ... | ... | ... | 2 | 2 | |
| தாயகச் சரித்திரம் பூகோளம் | ... | ... | 6 | 4 | 4 | 4 | 4 | 4 | |
| பொது சரித்திரம் | ... | ... | ... | ... | 2 | 2 | 3 | 3 | |
| கணிதம் | ... | ... | 4 | 4 | 4 | 5 | 5 | 5 | |
| சித்திரம்-சிற்பம் | ... | ... | ... | 2 | 2 | 2 | 2 | 2 | |
| இசைப்பாடம் | ... | ... | 2 | 2 | 2 | 2 | 1 | 1 | |
| தோட்டக்கலை | ... | ... | ... | 2 | 2 | 2 | 1 | 1 | |
| உடற்பயிற்சி | ... | ... | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | |
| ஆங்கிலம் | ... | ... | ... | ... | 5 | 5 | 4 | 4 | |
| மொத்தம் | 24 | 42 | 26 | 28 | 33 | 33 | 33 | 33 | |

**1-2 கிரேடுகளில் அந்தந்தப் பள்ளிக்கூடமே காலப் பகுதியைத் தீர்மானிக்கிறது.**

## (ஓ) அயர்குடியரசு

ஆங்கில மொழி பேசப்படும் நாடுகளில் உள்ள கல்வித் திட்டங்களைப் போலவே இங்கும் கல்வித் திட்டம் உள்ளது. அது ஆரம்பக் கல்வித் திட்டமானாலும் சரி, உயர்தரக் கல்வித் திட்டமானாலும் சரி அப்படியே அமைந்திருக்கிறது. ஆனால், கல்வித் துறையில் சர்க்காரின் நிர்வாகப் பொறுப்பு விஷயத்தில் மட்டும் இது மற்ற திட்டங்களிலிருந்து மாறுபட்டதாயிருக்கிறது. பெற்றோர்களுக்கு முக்கியமான பொறுப்பளிக்கப்பட்டிருப்பது முதல் அம்சம். நிலங்களை விட்டு வெளியேறுவதும், நகர விஸ்தரிப்பு அதிகமாவதும் தடுக்கப்பட்டிருப்பதும் இரண்டாவது அம்சம்.

"குழந்தைகளுக்குக் கல்வியளிக்கும் முதன்மையான இயற்கையான ஆசிரியர் குடும்பமேயாகும் என்பதை சர்க்கார் அங்கீகரிக்கிறது. தங்கள் வசதிகளுக்கேற்பத் தங்கள் குழந்தைகளுக்கு மத அறிவு தொழில்-சமூகக் கல்வியளிக்கும் பெற்றோர்களின் மாற்ற முடியாத உரிமைக்கு சர்க்கார் உத்தரவாதம் அளிக்கிறது" என்று சர்க்காரின் கல்விச் சட்டத்தில் ஒரு விதி கூறுகிறது.

7 வயதிலிருந்து 12 வயதுவரை ஆரம்பக் கல்வி போதிக்கப்படுகிறது. வாரத்திற்கு $5\frac{1}{2}$ நாட்கள் பள்ளிக்கூட வேலை நாட்கள். தினம் பள்ளிக்கூடம் $5\frac{1}{2}$ மணி நேரம் வேலை செய்கிறது.

1930-வருஷத்திய தொழில் கல்விச் சட்டப்படி (அ) அந்தந்த ஸ்தல நிலைமைகளுக்கேற்ப, பாடப்படிப்பைத் தொடர்ந்து தொழிற் பயிற்சிக்கு ஏற்பாடு செய்யவும், (ஆ) அந்தப் பயிற்சிக்கு தேவையான உபகரணங்களையும், உதவிகளையும் அளிக்கவும் தொழில் கல்விக் கமிட்டிகள் ஒவ்வொரு இடத்திலும் அமைக்கப்பட்டன. எல்லாப் பள்ளிக்கூடங்களிலுமே மத போதனை கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது.

ஆரம்பக் கல்வி முறையைத் தனிப்பட்டவர்களே நடத்துகிறார்கள். சர்க்கார் பண உதவிதான் அளிக்கிறார்கள். அங்கு அளிக்கப்படும் கல்வி இலவசமானது. கட்டிடங்கள் கட்டுவதற்கான செலவில் பெரும் பகுதியை சர்க்கார்தான் கொடுக்கிறார்கள். எல்லாப் பள்ளிக்கூடங்களும் மத-இனப் பிரிவுகளையொட்டியே நடக்கின்றன. ஒவ்வொரு மதப் பிரிவுக்கும் தனியான பள்ளிக்கூடம் இருக்கிறது. தேவைப்படும் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்களில் இனமாக ஒரு வேளை உணவு அளிக்கப்படுகிறது.

## (ஔ) ஜப்பான்

'உதய சூரியன்' என்று அழைக்கப்படும் ஜப்பான் நாட்டின் மன்னரின் பிரமாண சாஸனத்தின் கடைசி ஐந்து ஷரத்துக்களின் சாராம்சமாவது—

"குழந்தைகள் எல்லாம் உலக ஞானம் பெறும் வகையிலும், அதே சமயம் சாம்ராஜ்யத்தின் நலன்களைப் போற்றிக் காப்பாற்றும் வகையிலும் கல்வியைப் பெறுவதுதான் ராஜாங்க லட்சியமாகும்"

ராஜ்யத்தில் வாழ்கின்ற அத்தனை பெரும் மன்னருக்கு விஸ்வாஸமாக தேச சேவையில், தங்களுடைய தொழில்களைச் செவ்வனே செய்வதன் மூலம் ஈடுபடவேண்டும்என்ற அடிப்படையிலேயே ஜப்பானிய நாட்டின் கல்வி முறை வளர்ந்திருக்கிறது; இது சரித்திர உண்மையாகும்.

1886-ல் டோக்கியோ சர்வகலாசாலை வகுத்த முக்கியமான கோட்பாடு என்னவென்றால், "ராஜ்யத்தின் வளத்திற்கு ஆதாரமான விஞ்ஞானம், கலைகள், குடிசைக் கைத் தொழில்கள், கனத் தொழில்களைப் பற்றிய தத்துவ ஞானத்தையும், செயல்முறைப் பயிற்சியையும் குழந்தை

களுக்குச் சிறு பிராயம் முதற்கொண்டே கற்றுக்கொடுக்க வேண்டும். இதுவே நமது கல்வி முறையின் ஆதார லட்சியமாகவும் இருக்கவேண்டும்'' என்பதுதான்! ஜப்பானியக் கல்வி முறையைப் பற்றி ஆராயவேண்டுமானுல் அதை இரண்டுபகுதிகளாகத்தான் ஆராயமுடியும். சென்றயுத்தத்திற்கு முன்பிருந்த, மன்னரின் "தெய்வீகத் தன்மையுள்ள ஆட்சியின் கீழ் தொடர்ச்சியாக வளர்ந்த கல்வி முறையை முதற் பகுதியாகவும், இரண்டாவது யுத்தத்தில் ஈடுபட்டதால் மக்கள் மனேபாவத்திலும், அரசியல் வாழ்விலும் ஏற்பட்ட பல மாறுதல்களாலும், அமெரிக்கமேலாதிக்கச் செல்வாக்கினுலும் புதிதாய் உருவாகியிருக்கும் கல்வி முறையை இரண்டாவது பகுதியாகவும் ஆராயவேண்டியிருக்கிறது.

முதற் பகுதியில்:—

ஆரம்பக்கல்வித் திட்டப்படி பள்ளிக்கூடங்களில் போதனைக்கென இரண்டு பிரிவு உண்டு. 6-வயதிலிருந்து 9-வயது முடிய முதற் பிரிவு. 10-வயதிலிருந்து 13-வயது முடிய இரண்டாவது பிரிவு; இவைகள் கீழ் வகுப்புகள் என்றும், உயர் வகுப்புகள் என்றும் அழைக்கப்பட்டன. கல்வி முறையில் 'த்வைத'த் தன்மை நிலவியிருந்தது.

போதிக்கப்பட்டு வந்த பாடங்கள்:—

1. நீதி போதனை
2. ஜப்பானிய மொழி
3. சுலப கணிதம் (கீழ் வகுப்புகளுக்கு)
4. கடின அல்லது உயர்தரக் கணிதம் (மேல் வகுப்புகளுக்கு)
5. சரித்திரம். பூகோளம், மனித உடற்கூறு நூல், பிராணி நூல்—தாவர நூல் (மேல் வகுப்புகளுக்கு மட்டும்)

6. இசைப் பாடம்
7. பௌதிகம், ரசாயனம், சுரங்க நூல் (மேல் வகுப்புகளுக்கு மட்டும்)
8. உடற்பயிற்சி, விளையாட்டுகள்
9. தையல் வேலை, பூ வேலை, (கீழ் வகுப்புகளிலுள்ள பெண் குழந்தைகளுக்கு மட்டும்)
10. விவசாயம், வர்த்தகப் பாடங்கள் (மேல் வகுப்பு களுக்கு மட்டும்)
11. குடிசைத் தொழில்கள், யந்திரத் தொழில்களைப் பற்றிய பாடங்கள் (மேல் வகுப்புக்களுக்கு மட்டும்.)

எட்டு கிரேடுகளுக்குமாக மொத்தமாக ஒரு வாரத்தில் முறையே 21, 23, 25, 29, 30, 30, 30, 30 மணிநேரம்போதனு நேரமாயிருந்தது.

யுத்தத்திற்கு முன்பு இருந்த ஜப்பானிய முறையில் நிலவி நின்ற மூன்று முக்கிய அம்சங்கள் இவைதான்.

1. நிலைத்ததாயிருந்தது.
2. ஒரே சீராக இருந்தது.
3. மேலிருந்து திணிக்கப்பட்டதாக இயங்கியது.

' சக்கரவர்த்திக்காகத் தன் கடமையைச் செய்யும் ஆர்வம் குழந்தையின் மனத்தில் சிறுபிராய முதற்கொண்டு வளர்ந்தோங்க வேண்டுமென்பதுதான் முக்கியம் ' என்ற போக்குத் தொடர்ச்சியாக இந்த நாட்டின் கல்வி முறையில் இருந்திருக்கிறது. இது ஒருவித தீவிர தேசீய உணர்ச்சியே யாகும். ஆயினும், பிரெஞ்சு, ஆங்கில, ஜெர்மனி, அமெரிக் கச் செல்வாக்குகள் ஜப்பானியக் கல்விமுறையில் புகவில்லை என்று சொல்ல முடியாது. இந்த மொழிகளையெல்லாம் ஜப்பானியக் குழந்தைகள் கற்கவேண்டும் ; அப்போதுதான்

ஜப்பானியக் குழந்தைகளின் அறிவும் தொழில் நுணுக்க ஞானமும், விஞ்ஞானத் திறமையும் சிறு பிராயம் முதற் கொண்டு வளர்ந்தோங்கமுடியும்என்ற கருத்தைத் தங்களின் தேசீய அவசியத்திற்காக ஜப்பானியக் கல்வியாளர்களும்—ஆட்சியாளர்களும் கொண்டிருந்தார்கள். எனவே புறச் சிறப்புக்களைத் தனதாக்கிக்கொள்ளும் வன்மை பெற்ற ஜப்பானிய தேசீயம், இந்த மொழிகளின் போதனையையும் தங்கள் கல்வித்திட்டத்தில் சேர்த்துக் கொண்டதில் ஆச்சரியப்படுவதற் கொன்றுமில்லை !

ஜப்பானியப் பொருளாதாரம், பரவல் முறையில் அநேகமாக நாட்டின் பூகோள—சீதோஷ்ண நிலைமைகளை யொட்டி அமைந்திருப்பதால், அந்த அடிப்படையில் குடிசைக் கைத்தொழில்களையும் — விவசாயம்—அது சம்பந்தமான வேலைகளையும் வளர்க்கும் சாயல் அல்லது சார்பு குழந்தையின் ஆரம்பக் கல்வியில் காணப்பட்டது. இது கிராமப் பள்ளிக்கூடப் படிப்பைப் பொறுத்தளவில் பொருந்தியிருந்தது.

நகரப் பள்ளிக்கூடப் படிப்பில், கனத்தொழில் பயிற்சியும்—வர்த்தகம் போன்ற தொழில் படிப்பும் (10, 14 வயதுக்குட்பட்ட) குழந்தைகளுக்கு அளிக்கப்பட்டன. இந்த வயது வரம்பிலிருந்து ஆரம்பிக்கப்பட்ட கல்விக்குப் பின், குழந்தைகள் தங்கள் எதிர்காலப் படிப்பையோ அல்லது தொழிலையோ நிர்ணயித்துக்கொள்ள வசதி இருக்கவேண்டும் என்று கருதப்பட்டது.

வாரத்திற்கு 6 நாட்களே பள்ளிக்கூட வேலை நாட்களாகும். ஒவ்வொரு ஆசிரியருக்கும் சராசரி 50 மாணவர்கள் இருக்க வேண்டு மென்றிருந்தது.

ஏப்ரல் மாதம் முதல் தேதி பள்ளிக்கூடம் ஆரம்பமாகும். அடுத்துத் தொடரும் ஆண்டு மார்ச் மாதத்தில் பள்ளிக்கூடம் விடுமுறைக்காக மூடப்படும்.

குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்குத் தவருமல் போக வேண்டும் என்பதற்குப் பெற்ருேர்கள் பொறுப்பாக்கப்பட்டார்கள். வீட்டிலோ அல்லது தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் பள்ளிக்கூடத்திலோ தன் குழந்தையை ஒருவர் படிக்க வைக்கவேண்டுமாஞல் அதற்கு சர்க்காரின் முன் அநுமதியை அவர் பெற்ருக வேண்டியிருந்தது. குழந்தையின் படிப்பை அலட்சியம் செய்துவிட்டு, குழந்தையை எவரும் எந்த வேலைக்கும் அமர்த்த முடியாது.

ஆரம்பப் பள்ளிக்கூடங்களில்தான் இருபால் குழந்தைகளும் கலந்தே படித்து வந்தார்கள். மதத்திலிருந்து கல்வி முற்றிலும் பிரிக்கப்பட்டிருந்தது. நீதி போதனைகளும், குடும்பம், தேசம் இவைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைப்பற்றிய போதனைகளும் அவசியம் அளிக்கப்பட்டன.

ஆரம்பப் பள்ளிக்கூடங்களின் பாடப் புத்தகங்கள் அனைத்தும் கல்வி இலாகாவினுல் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்ற விதி கட்டாயமாகவும், கண்டிப்பாகவும் அமுல் நடத்தப்பட்டது.

ஏழை அல்லது பணக்காரக் குழந்தை என்று வித்தியாசமோ, உயர்ந்த அல்லது தாழ்ந்த வகுப்புக் குழந்தை என்ற வித்தியாசமோ இருக்கவில்லை. எந்தக் குழந்தையும் கட்டாயமாக முதன் முதலில் ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் படித்தேயாக வேண்டுமென்றிருந்தது. ஆனுலும், விதிவிலக்காக, 'பியர்ஸ்' பள்ளிக்கூடங்கள் (பிரபுக்களின் குழந்தைகள் படிப்பதற்காகத் தனியாக இயங்கும் பள்ளிக்கூடங்கள்) சில இருந்தன.

பெண் குழந்தைகளுக்குக் கற்பு நெறிபற்றிய நீதிகளும், கற்பரசிகளின் புராண-சரித்திரக் கதைகளும் போதிக்கப்பட்டன. மேலும், அவர்களுக்குத் தையல்-பூ வேலைகளும், குடும்பக் கலையும் சொல்லித் தரப்பட்டன.

பெரிய நகரங்கள்-சிறிய நகரங்கள்-கிராமங்கள்-ஒவ்வொன்றும் தங்கள் தங்கள் தேவைகள்-சூழ்நிலைகளுக்கேற்ப ஆரம்பப் பள்ளிக் கூடங்களைக் கட்டிக்கொண்டார்கள்.

மேலே சொல்லப்பட்ட நிபந்தனைகளின்படி கார்ப்பொரேஷன்களும், தனிப்பட்டவர்களுங்கூடப் பள்ளிக் கூடங்களை நடத்துவதற்கு அனுமதிக்கப்பட்டார்கள்.

வருஷத்திற்கு 90 நாட்களுக்கு விடுமுறை விடப்பட்டது.

யுத்தம் முடிந்தவுடன் ஜப்பானியக் கல்விமுறையில் பல மாறுதல்கள் புகுத்தப்பட்டன. பழைய கல்வி முறையில் இருந்துவந்த தீவிர தேசீய வெறி, ராணுவ மனப்பான்மை, போன்ற போக்குகளை அகற்றும் நோக்கத்துடன் புதிய கல்வி முறையில் ஜனநாயகத் தன்மையும், பரவல் முறையிலான நிர்வாகக் கட்டமைப்பும் புகுத்தப்பட்டன. புதிய கல்விச் சீர்திருத்தத்தால் ஏற்பட்ட முக்கியமான மாறுதல் அம்சங்கள் பின்வருமாறு :

(1) ‘6-3-3-4’ என்ற திட்டம் புகுத்தப்பட்டிருக்கிறது. முதல் 9 ஆண்டுகளின் படிப்புக் கட்டாயமாக்கப் பட்டுள்ளது. பிரைமரி-செகண்டரி உயர் படிப்புபோன்ற படிப்பு படிப்படியாகக் கீழிருந்து மேலே போகும் கட்டங்களுக்கு ஒவ்வொரு குழந்தையும் போவதற்கு வசதி ஏற்படுத்தப் பட்டுள்ளது. கல்வியின் தரம் உயர்த்தப்பட்டுள்ளது. உயர் படிப்புக்குப் போவதற்குத் தகுதிபெறும் குழந்தைகள் அனைத்துக்கும் தகுந்த வாய்ப்புக்கள் அளிக்கப்பட்டுள்ளன.

(2) ஜப்பானிய சமூக நிலைமைகளுக்கேற்ப ஜனநாயகக் கல்விமுறை இருக்க வேண்டும் என்ற நியதி மாற்றப்படவேயில்லை.

சமூகச் சீர்திருத்தங்களைச் செய்யவல்ல ஒரு நிச்சயமான சக்தியை உடனடியாக ஏற்படுத்த வேண்டுமென்ற மன வலிமையைக் குழந்தைகளுக்கு ஊட்ட வேண்டிய போக்கில் கல்வியமைப்பிலும், நடைமுறைகளிலும் சில மாறுதல்கள் புகுத்தப்பட்டுள்ளன. மேலும் சுதந்திர ஜனநாயக வாழ்வில் எல்லோருக்கும் நம்பிக்கை ஏற்பட்டு அந்தப் பாதையில் ஜப்பானின் அரசியல் இயந்திரத்தை முடுக்கிவிட வேண்டுமென்ற எண்ணத்துடன் புதிய கல்வித் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

(3) கல்விப் பிரச்னைகளில் முடிவான அபிப்பிராயம் மக்களிடமே இருக்கவேண்டும் என்றும், கல்விச் சட்டங்களை நிறைவேற்றுவதிலும், நிர்வாகத்தில் ஈடுபடுவதிலும் மக்களுக்கு அதிக அக்கறையும், உற்சாகமும் ஏற்பட வேண்டும் என்றும், இதுவரை இத்துறையில் ஜப்பானில் நிலவியிருந்த யதேச்சாதிகாரக் குவியல் முறையில் உருவான போக்கு ஒழிக்கப்பட வேண்டும் என்றும் கருதப் பட்டது. இந்தக் கருத்துகளுக்கிணங்கக் கல்வித் திட்டத்தில் பல மாறுதல்கள் புகுத்தப் பட்டன.

1950-ல் பாடத் திட்டங்கள் எல்லாம் பரிசீலிக்கப் பட்டன. பாடபோதனை நேரங்களிலும் பள்ளிக்கூட வேலை நாட்கள் விஷயத்திலும் விடுமுறை விஷயத்திலும், பிரமாதமான மாறுதல்கள் செய்யப்பட்டு விடவில்லை.

ஆயினும் பாடத்திட்டங்களில் சில மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன. நாடு முழுவதுக்குமாக சர்க்காரால் தொகுக்கப்பட்ட பாடப் புத்தகங்கள் மூலம் வெறும் புத்தகப் படிப்பு மட்டுமே (யுத்தத்திற்கு முன்பு) குழந்தைகளுக்கு அளிக்கப்பட்டது. கேள்விகளுக்குப் பதில் அளிப்பதும், புத்தகத்தில் இருப்பதைப் பாராமல் ஒப்புவிப்பதுமே ஆரம்பக் கல்வித் திட்டத்தின் சாரமாயிருந்தது ! இப்போது இவைகள் எல்லாம் மாற்றப் பட்டுவிட்டன. குழந்தை

களின் அனுபவங்களுக்கே புதிய பாடத் திட்டத்தில் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. பாடங்களில் அவசியமற்ற பிரிவுகள் இருக்கக் கூடாது என்று தீர்மானிக்கப்பட்டு, அதன்படி பழைய பாடப் பிரிவுகள் எல்லாம் நீக்கப் பட்டுவிட்டன. குழந்தைகளின் அனுபோதனை-சரித்திரம்-பூகோளம் என்ற தனித்தனியான பிரிவுப் பாடங்களுக்குப் பதிலாக, சமூக அறிவுப் பாடம் என்ற ஒரே தொகுப்புப் பாடம் புகுத்தப்பட்டுள்ளது. தவிர தாவரநூல்-பிராணிநூல்-மனித உடற்கூறு நூல் சுரங்கநூல் - பௌதீகம் -ரஸாயனம் என்ற தனித்தனியான பிரிவுப் பாடங்களுக்குப் பதிலாக விஞ்ஞானப் பாடம் என்ற ஒரே தொகுப்புப் பாடம் புகுத்தப் பட்டுள்ளது. ஒழுக்க போதனைப் பாடம் தீவிரமாக்கப் பட்டுள்ளது.

1947-லிருந்து 1949 வரையில், இப்புதிய கல்வி முறையில் ஆசிரியர்களுக்கு மறு பயிற்சி அளிக்கப் பட்டது. இதன் விளைவாக 6 லட்சம் ஆசிரியர்கள் மறு பயிற்சி பெற்றனர்.

1872-ல் ஜப்பானில் அமுலுக்கு வந்த கல்வி முறையின் குவியல் போக்கும் சர்வ வியாபக மத்திய மேலாதிக்கமும் இன்று அகற்றப் பட்டுள்ளன. 1947-ல் கல்வி முறையில் பரவல் நிர்வாக அதிகாரம் ஓரளவுக்குப் புகுத்தப் பட்டது. 1948-ல் இது இன்னும் தீவிரமாக்கப் பட்டது. ஒவ்வொரு ஜில்லாவிலும் பெரிய ஐந்து நகரங்களிலும் கல்விக் 'கமிஷன்'கள் ஏற்படுத்தப்பட்டன. இதர சிறிய பிராந்தியங்களுக்கும் அவை விரும்பினால் இவ்விதக் 'கமிஷன்'களை அமைத்துக் கொள்ளும் அதிகாரம் அளிக்கப்பட்டது. கல்வி-விஞ்ஞானம், கலாசாரம் முதலிய துறைகளில் இந்தக் 'கமிஷன்' களுக்குப் பூரண அதிகாரம் அளிக்கப்பட்டது. ஜப்பானிய 'டயட்' டுக்கு (பார்லி

மெண்டுக்கு) அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவது போல, இந்தக் ' கமிஷன் 'அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப்படுபவர்களாக இருக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது. இந்தக் 'கமிஷன்'களின் அதிகாரத்திற்கு உட்பட்டவராகவே கல்வி இலாகா ' டைரக்டர் 'பதவி வகிக்கிருர். கல்வி மந்திரியின் இலாகா இந்தக் ' கமிஷன் 'களுக்கும், சர்வ கலாசாலைகளுக்கும், இதர விஞ்ஞான-கலாசார ஸ்தாபனங்கள் - கழகங்களுக்கும் யோசனைகளையும், புத்திமதிகளையுமே அளிக்கிறது.

மேலே கூறப்பட்ட கல்வித் துறை மாறுதல்களை எல்லாம் இன்றைய ஜப்பானியர் சர்க்கார் அங்கே படை நிறுத்தம் செய்திருக்கும் ராணுவ அதிகாரிகளின் மேற்பார்வையின் கீழ்தான் செய்திருக்கிருர்கள் என்பதை நாம் கவனிக்க வேண்டும். சென்ற யுத்தத்தில் ஈடுபட்டகாரணத்திஞல் ஜப்பானுக்குத் தன் விதியைத் தானே நிர்ணயித்துக்கொள்ளும் பூரண சுதந்திரம் இன்னும் வந்துவிடவில்லை ! ஆயினும், அமெரிக்க ராணுவத்தினரின் ' பிடிப்பு ' அதன் மீது இன்னும் தீவிரமாக இருக்கிறது என்று சொல்லவும் முடியாது!

புதிய ஜப்பானிய அரசியல் வாழ்வில் மூன்று விதமான அரசியல் போக்குகள் நிலவி நிற்கின்றன. இவைகளின் பிரத்யட்ச செல்வாக்குகளை நாம் கவனிக்கத் தவறக் கூடாது. அவைகள் பின்வருமாறு :

1. ஜன நாயக முதலாளித்துவப் போக்கு.

2. ஏகாதிபத்தியக் கனவு காணும்-பழைய ராணுவ மனப்பான்மையில் வளர்ந்து வந்த சாம்ராஜ்யவாதப் போக்கு.

3. கம்யூனிஸப் போக்கு.

மேலே எடுத்துக் காட்டப்பட்ட மூன்று அரசியல் போக்குகளும் நேர்முகமாகவோ அல்லது மறைமுக மாகவோ அரசியல் ஆதிக்கம் பெறப் போட்டியிடுகின்றன. எனவே இப்போதைய திருத்தப்பட்ட புதிய கல்வி முறை வருங்காலத்தில் எந்த உருவத்தை எடுத்துக்கொள்ளும் என்பதைப்பற்றி உறுதியாக ஒன்றுமே சொல்வதற்கில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் ஒரு முக்கியமான உண்மையை மனதிலிறுத்திக்கொள்ள வேண்டும். ஜப்பானியர்களின் ஆழ்ந்த ' பாரம்பரிய ' தேசீயமானது,எவ்வித அரசியல் மாறுதலாலும் அழிந்து விடாமல், தொடர்ந்து வந்திருக்கிறது என்பதுதான் அந்த உண்மையாகும்!

## (ஃ) ஜெர்மனி (மேற்கு-கிழக்கு)

இதற்குமுன் குறிப்பிடப்பட்ட நாடுகளில் சரித்திர ரீதியில் எவ்வாறு கல்விப்போக்குகளும்-முறைகளும் வளர்ச்சிபெற்றன என்பதைப்பற்றி நான் விரிவாக ஆராய வேயில்லை. எவ்வித உள்நாட்டு வெளிநாட்டுச் சம்பவங் களாலும் அவைகளின் ஸ்திரத் தன்மை பிரமாதமாக மாருதிருந்ததே அதற்குக் காரணமாகும். ஆனுல், ஜப்பான் ஜெர்மனி முதலிய நாடுகளில் உலக யுத்தத்தால் பிரமாத மான மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. அந்நாடுகளின் ஒவ் வொரு துறையிலும் இந்த மாறுதல்களை நாம் பார்க்க முடிகின்றது. பல தலைமுறைகளாகத் தொடர்ந்து வந்த சமுதாய முறைகளின் மீது இடையில் யதேச்சாதிகாரம் தன் செல்வாக்கை வெறிப்போக்கில் திணித்ததையும் பிறகு அதன் பயனுய் அந்நாட்டு மக்கள் கொடுமையான நாசகார உலகயுத்தத்தில் ஈடுபடுத்தப் பட்டதையும், முடிவில் யுத்தகாலத்தின் விளைவுகளான ஏமாற்றம், வேதனைகள், பிறநாடுகளின் மேலாதிக்கம் முதலியவை களை அனுபவிக்க நேர்ந்ததையும், இன்று மெதுவாக

## * மேற்கு ஜெர்மனியின் பொதுவான ஆரம்பக்கல்வி அமைப்பு




| 5 | நர்ஸரி பள்ளிக்கூடம் (இஷ்டப்பூர்வமானது) |
| --- | --- |

குறிப்பு :— மேற்கு ஜெர்மனியில் இனறு பொதுவாக அமுலிலுள்ள 'ஹாம்பர்க் பிளான்' என்ற கல்வி முறையின் ஆரம்பக்கல்விக் கட்டம் : லண்டன் சர்வ கலாசாலையின் கல்விக் கழகமும், 'இவான் பிரதர்ஸ்' என்ற புத்தகப் பிரசுராலயம் கூட்டாக வெளியிட்டுள்ள தி இயர் புக் ஆப் எஜுகேஷன்—1952 என்ற புத்தகத்தில் ஜெர்மனியின் கல்வியைப்பற்றிய ஹான்ஸ் வென்கி என்பவர் எழுதிய கட்டுரையில் போடப்பட்டிருக்கும் கல்வி அமைப்புப் படத்தைப் பார்த்துப் போடப்பட்டுள்ளது.

........ இத்தப் புள்ளிக்கோடுகளுள்ள கட்டமே ஆரம்பக் கல்வியின் சரியான கட்டமாகும். 6—14 வரையில் கல்வி கட்டாயமாக்கப் பட்டிருக்கிறது என்பதைக் காட்டப் புள்ளிக் கோடுகள் கீழிருந்து மேல் வரையிலும் போடப்பட்டிருக்கின்றன

அவைகள் தங்களின் பிரகாசமான எதிர்காலத்தை நோக்கி முன்னேறுவதையும் நாம் தொடர்ச்சியாகப் பார்த்து வருகிறோம். ஒரு குழப்பமான நெருக்கடி நிலைமைதான் இந் நாடுகளிரண்டிலும் இன்னும் நீடிக்கின்றன என்பதை மட்டும் மறைப்பதற்கில்லை. இந்நாடுகளின் இன்றைய ராஜீயச் செல்வாக்கு ஸ்திரமான ஜனநாயகத்தில் நிலைக்குமா அல்லது இடையில் தோன்றி மறைந்த 'தேசீய' சர்வாதிகார வழியை ஏற்று அதில் நிலைத்து நிற்குமா அல்லது இடது சாரிகளின் கம்யூனிஸ சர்வாதிகாரத்தில் நிலைத்து நிற்குமா என்பதைப் பற்றி நாம் முடிவாக இப்போதைக்குத் தீர்ப்புக் கூறிவிட முடியாது. ஆயினும், இம்மூன்று வித ராஜீய சக்திகளும் தங்கள் தங்கள் ஆதிக்கத்தை நிலை நாட்ட இந்நாடுகளில் போட்டா போட்டியிலும், பதட்ட பிரசாரங்களிலும் ஈடுபட்டிருப்பது நாம் காணும் பிரத்தியட்சக் காட்சியாகும்.

ஜெர்மனி இன்று இரண்டு 'ஜெர்மனி'களாக (கிழக்கு -மேற்கு) துண்டாடப்பட்டிருக்கின்றது. மேற்கு ஜெர்மனியோ மேலும் பன்னிரண்டு ராஜ்யங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் தனியான பார்லிமெண்டும் கல்விமுறையும் இருக்கின்றன. இந்த ராஜ்யப் பிரிவினை ஜெர்மனிக்குப் புதிதல்ல. 1933-க்கு முன்பும் இதே மாதிரியான ராஜ்யப்பிரிவினையிருந்திருக்கிறது. ஜெர்மனியின் கல்வி முறையிலும் ஸ்விட்சர்லாந்தின் சாயலும், அமெரிக்க சாயலும், பிரிட்டனின் சாயலும் கலந்திருந்தன. பொதுவானகல்விச் சட்டத்தின் படி அனைத்திலும் ஒரு ஒருமைப்பாட்டைப் புகுத்துவதற்கு உகந்த முறையில் நிர்மாண ரீதியான பயனுள்ளபோட்டா போட்டிகளுக்கு ஊக்கமளிப்பதாயிருந்தன அக்கல்வி முறைகள். ஆயினும் இதில் 1933-லிருந்து வேறு விதமான ராஜீய நோக்கமுள்ள மாறுதல்கள் தோன்றின

இக்காலத்தில் கல்வித்துறையில் ஒரு தேக்க நிலைமை ஏற்பட்டது. பல முற்போக்குக் கல்வி நிபுணர்கள் எல்லாம் ஒன்று வேலையினின்று நீக்கப்பட்டார்கள் ; அல்லது அவர்களுடைய செல்வாக்கெல்லாம் ஒழிக்கப்பட்டது ; சுதந்திரமாக இயங்கி வந்த போதனு முறைகள் எல்லாம் கண்டிக்கப்பட்டு நிறுத்தப்பட்டன ; ஆராய்ச்சிப் பள்ளிக் கூடங்களும் பரிக்ஷார்த்தப் பள்ளிக்கூடங்களும் அன்று மூடப்பட்டன ; அல்லது ராஜீய சர்வாதிகார முறைக்கேற்ப மாற்றியமைக்கப்பட்டன. பழைய ஆசிரியர்களெல்லாம் 'தேசீய' சர்வாதிகாரப் பாதையில் போகவேண்டும் அல்லது வேலையையிழக்கவேண்டும் என்று நிர்பந்திக்கப்பட்டனர். தங்களுடைய சர்வாதிகார வெறிப் போக்குக்கு இணைந்து பணியாற்றும் புதிய ஆசிரியர்களை ஆட்சியாளர்கள் அவசர அவசரமாகத்தயார் செய்து பள்ளிக்கூடங்களில் அவர்களை நிரப்பினார்கள். இக்காலத்தில் மற்ற சுதந்திர ஜனநாயக நாடுகளில் கல்வித்துறையில் அதிசயிக்கத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. மகாயுத்தம்கூட அந்நாடுகளின் இந்த முன்னேற்றத்தைத் தடை செய்ய முடியவில்லை!

இரண்டாவது உலக யுத்தத்தின் முடிவில் நாஜி ஆட்சிப்பிடிப்பிலிருந்து ஜெர்மனி விடுதலை பெற்றது. ஆயினும், தன் சமுதாய வாழ்வைப் புதுப்பித்துக்கொள்ளும் சுதந்திரம் ஜெர்மனிக்கு உடனடியாக அளிக்கப்படவில்லை.

பிற நாடுகளின் ' பராமரிப்'பின் கீழும், மேலதிகாரத்தின் கீழும் சிலகாலம் இருக்கவேண்டியதிருந்தது. இந் நிலைமையின்விளைவாக எல்லாப்பள்ளிக் கூடங்களும் ஆறு மாதங்களுக்கு மூடப்பட்டுவிட்டன. நாஜி முறையின் கீழ் உருவான ஆசிரியர்கள் எல்லாம் நீக்கப்பட்டனர். படை நிறுவியிருந்த நாடுகளின் மேற்பார்வையின்கீழ் அவர்களின் திட்டப்படி பள்ளிக்கூடங்கள் எல்லாம் மாற்றி அமைக்கப்பட்டன. பின், இந்த மேற்பார்வை நிலைமை அதிகப்படி

யான சுதந்திரத்தை ஜெர்மனி அடையும் ரீதியில் மாறிற்று. ஆனாலும், கல்வித் துறையில் நாஜி ஆட்சியின் கீழ் ஏற்பட்ட தேக்க நிலைமை மட்டும் முற்றிலும் மாறிவிடவில்லை. இந்தத் தேக்க நிலைமையிலிருந்து ஜெர்மனியைத் தட்டி எழுப்பும் வேலையை ஜெர்மனி தொடர்ந்து செய்யத் தொடங்கியிருக்கிறது. எனவே, கல்வித் துறையில் ஜெர்மனி இன்னும் ஒரு சோதனையான இடைக்காலத்தில் தானிருக்கிறது என்பதைநாம்கவனிக்க வேண்டும். வெளிநாட்டு மேற்பார்வை ஆதிக்கத்திற்கும், தன் விதியைத் தானே நிர்ணயித்துக்கொள்ளும் சுதந்திரத்தைப் பூரணமாகப் பெறுவதற்கும் இடையே ஜெர்மனி இன்று இருக்கிறது என்று நாம் கொள்ள வேண்டும்.

1945-46-ல்தான் ஜெர்மனி கல்வி நிபுணர்கள் ஜெர்மன் கல்விமுறையைத் திருத்தியமைக்கத் தொடங்கினார்கள்.

1945-ம் ஆண்டு செப்டம்பர் முதல் தேதிக்குள் அநேகமாக எல்லாப் பிரைமரிப் பள்ளிக்கூடங்களும் திறக்கப்பட்டுவிட்டன. ஆசிரியர் பற்றுக்குறை, எழுதும் சாதனங்கள், புத்தகங்கள் இல்லாமை, உடைந்த ஜன்னல்கள், போதாத தளவாடச் சாமான்கள், இவைகளுக்கிடையே தான் இந்தப் புனரமைப்பு வேலை தொடங்கிற்று. ஆயினும், கல்வி நிபுணர்களுக்கு இக்காலத்தில் புதிய ஊக்கம் பொங்கித் ததும்பிற்று என்பதைச் சொல்லாமலிருப்பதற்கில்லை! இதைத் தொடர்ந்து ஜில்லா-ராஜ்யக் கல்வி அதிகாரிகள் நியமிக்கப்பட்டார்கள். பொதுப்படையான கல்விக் கொள்கைகளும், நடைமுறைகளும் வகுக்கப்பட்டன. இந்தக் காலத்தில் தான், (1945-46) கல்வி முறையில் பழமையையும், புதுமையையும் ஜனநாயகப் பாணியில் இணைக்கும் போக்குப் புகுத்தப்பட்டது என்று சொல்லவேண்டும். 1947-ம் ஆண்டு ஜூன் 25ந் தேதியில் நேச நாடுகளின் மேற்பார்வைக் கூட்டுக்கமிஷன் மேற்கு

ஜெர்மனியின் கல்விச் சீர்திருத்தம் சம்பந்தமாக ஒரு உத்தரவைப் பிறப்பித்தது. அந்த உத்தரவில் சொல்லப் பட்டிருந்த நடைமுறை விதிகள் பின்வருவன :—

1. கல்வி பெறுவதில் எல்லோருக்கும் சமவாய்ப்பு இருக்க வேண்டும்.

2. 6 வயதிலிருந்து 14 வயது வரை எல்லோருக்கும் இலவசமாகவும் கட்டாயமாகவும் கல்வி அளிக்கவேண்டும்.

3. 14 வயதிலிருந்து 18 வயது வரை ஓழிந்தவேலைக் கல்வி அளிக்கப்படவேண்டும்.

4. பிரைமரி-செகண்டரி கல்வியளிப்பதற்காகப் பொதுவான பள்ளிக்கூடம் இருக்கவேண்டும்.

5. செகண்டரி கல்வி 12 வயதில் ஆரம்பமாக வேண்டும்.

6. இந்த செகண்டரி கல்விமுறையில் பலவிதங்களும் இருக்கவேண்டும்.

7 குழந்தைகளுக்குக் கல்வி கற்கும் சாதனங்கள் எல்லாமே இலவசமாக அளிக்கப்படவேண்டும்.

8. எல்லா ஆசிரியர்களுக்கும் சர்வகலாசாலைப் போதனுமுறைப் பயிற்சி இருக்கவேண்டும்.

இந்த நடைமுறை விதிகளையே 1933-ம் வருஷத்திற்கு முன்பே ஜெர்மனி ஆசிரியர்கள் வற்புறுத்தியிருக்கிருர்கள். அப்போதிருந்த வெய்மர் ஆட்சி, அநேகமாக இந்தச் சிபார்சுகளையெல்லாம் ஒப்புக்கொண்டதோடு, இவைகளை அமுலுக்குக் கொண்டு வரவும் திட்டமிட்டது. ஆனல், அந்த ஆட்சி கவிழ்ந்தபின் தலைதூக்கிய நாஜி ஆட்சி இவைகளையெல்லாம் நிறுத்தி விட்டது.

"பள்ளிக்கூடந்தான் குழந்தைகளின்—கல்வி நிபுணர்களின் தர்மகர்த்தா "— இந்த லட்சியந்தான் ஜெர்மன்

சமஷ்டிக் குடியரசின் அரசியல் திட்டத்தில் இடம் பெற்றிருக்கிறது.

பள்ளிக்கூட முறையைத் திருத்தி யமைப்பதுதான் புதிய கல்விச் சட்டங்களின் நோக்கமாக இருந்தது. எனவே, இந்நோக்கப்படி விசால பெர்லினில்தான் முதன் முதலாக 1947-ல் கல்விச் சட்டத்தை நிறைவேற்றினார்கள். இந்தச் சட்டத்திற்கு நேசநாடுகளின் கூட்டுத்தளபதி எட்டு மாதங்களுக்குப் பிறகு அங்கீகாரம் அளித்தார். இச் சட்டப்படி இங்கே, 6 வயதிலிருந்து 14 வயது வரை கட்டாயப் பிரைமரி படிப்பு நீடிக்க வேண்டுமென்றும், உயர் ஹைஸ்கூல் படிப்பு 4 ஆண்டுகளுக்கு நீடிக்க வேண்டுமென்றும், இந்த 4 ஆண்டுப்படிப்பு செயல்முறைப்படிப் பென்றும், புத்தகமூலப் படிப்பென்றும் பிரிக்கப்பட வேண்டுமென்றும் விதிக்கும் நடைமுறைகள் அமுலுக்கு வந்தன. 1949-ல் ஹாம்பர்க் ராஜ்யம், 6 ஆண்டுகளுக்கு பிரைமரி படிப்பு நீடிக்க வேண்டுமென்றும், அதன் தொடர்ச்சியாக 6 ஆறு ஆண்டுகளுக்கு செகண்டரிப் படிப்பு நீடிக்க வேண்டுமென்றும், இந்த ஆறு ஆண்டுப் படிப்பு செயல்முறை, தொழில் முறை, புத்தக மூலப் படிப்பு ஆகிய மூன்று பிரிவுகளுள்ளதாக இருக்க வேண்டுமென்றும் விதிக்கும் கல்விச் சட்டத்தை நிறைவேற்றியது.

பள்ளிக்கூடங்களின் நெருங்கிய மேற்பார்வை ஸ்தாபனங்களாகவும் நிர்வாக ஸ்தாபனங்களாகவும் ஸ்தல ஸ்தாபனங்களே இயங்க வேண்டுமென்ற சட்டமும் நிறைவேற்றப்பட்டது. மத்திய மேலாதிக்கத்தின் சர்வ வியாபகநிர்வாகக் கட்டுப்பாடு அதிகாரத்தை இச்சட்டம் மாற்றி, கல்வி ஸ்தாபன நிர்வாகத்தில் பரவலான அதிகார முறையை இச்சட்டம் புகுத்தி விட்டது. கல்வித் துறையில் ஜனநாயகப் பரவல் முறையை மீண்டும் புகுத்திய பெருமை இத்துணிச்சலான சட்டத்திற்கே சாரும். இச்சட்டத்தின்

விளைவாகப் பெரிய அளவில் வாதப் பிரதிவாதங்கள் எழுந்தன. இந்த விவாதங்களின் விளைவாகக் கல்விப் பிரச்னைகளைத் தீர்ப்பதில் ஒரு புதிய முற்போக்கு உணர்ச்சியும் உத்வேகமும் ஜெர்மனியில் எழுந்திருக்கிறது என்பது கண்கூடான உண்மையாகும்.

இரண்டாவது முக்கிய மாறுதலைக் கவனிப்போம். வகுப்புகளின் அடிப்படையில் இயங்கிவந்த பலதரப்பட்ட பள்ளிக்கூடங்களையும், சுலபமாக வளைந்து கொடுக்கும் தன்மையுள்ள பொதுப் பள்ளிக்கூட முறையின் கீழ் ஒரு நிலைப்படுத்தியதுதான் அந்த முக்கிய மாறுதலாகும். இதன் விளைவாகப் பொது பிரைமரி பள்ளிக்கூட முறையின் கீழ் எல்லா இடங்களிலும் மொத்த ஆண்டுகளின் நீடிப்பைத் தவிர மற்றவிஷயங்களின் சீரான ஒருமை முன்னேற்றத் தன்மை புகுத்தப்பட்டது. சில இடங்களில், 4 ஆண்டுப் பிரைமரிப் படிப்பும், சில இடங்களில் 6 ஆண்டு பிரைமரிப் படிப்பும் அமுலுக்கு வந்தன. 4-6 ஆண்டுப் பிரைமரிப் படிப்பு முறைகளின் கர்த்தாக்கள் ராஜீய திருஷ்டியில்தான் கல்விப் பிரச்னையைப் பார்க்கிறார்களே ஒழிய கல்வி மனோதத்துவ திருஷ்டிகளில் பார்ப்பதில்லை!

"ஒரு குழந்தையின் திறமையை அதன் பத்தாவது வயதில் கண்டறிந்து நிர்ணயித்து விடமுடியாது. ஒரு குழந்தைக்குத் தானே எதையும் செய்ய வல்லதொரு திறமையும், தன்னைச் சூழ்ந்திருக்கும் நலன்களில் அக்கறையும் சில சமயங்களில் 14 அல்லது 15 வயதுகளில்தான் உருப் பெறுகிறது என்று சொல்லவேண்டும். எனவே, பள்ளிக்கூட முறை மூன்று விதங்களாகப் பிரிக்கப்பட வேண்டும். முதலாவதாக, குழந்தைப் பருவத்தையொட்டிய ரீதியில் பூர்த்தியானதொரு போதனைமுறை யிருக்க வேண்டும்; இரண்டாவதாக, (6 வயதிலிருந்து 14 வயது வரை நீடிக்கும்) மெதுவாகவும், சீராகவும், விரிவடையவும்,

செய்யக்கூடிய பல நடவடிக்கைகளைக் கொண்ட, இதயம் போன்றிருக்கும் ஒரு பொதுவான போதனுமுறை தொடர வேண்டும். இந்த முறையில் தங்களுடைய விருப்பத்திற்கிணங்கக் குழந்தைகள் எந்த நடவடிக்கையையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமை இருக்கவேண்டும். மூன்ருவதாக, (15 வயதிலிருந்து 18 அல்லது 19 வயது வரை நீடிக்கும்.) இங்கே போதன முறை தனித்தனியாகவும், தனித்தனியாக இயங்கும் பலதரப்பட்ட பள்ளிக்கூடங்களிலும் கொடுக்கப்பட வேண்டும். இப்படிப்பட்ட ஒரு புதிய கல்வி ஸ்தாபன நிர்வாக அமைப்பால்தான் தற்காலத்திற்குப் பொருந்தாத தனித்தனி வகுப்புப் பள்ளிக்கூடப் பழங்கால முறையும், இடைக்காலத்தில் தோன்றிய முறை அதாவது ஒரு குறிப்பிட்ட திட்டப்படி நடக்கும் பள்ளிக்கூடத்தில் ஒரு நிர்ணய வயதில் சேரவேண்டுமென்று விதிக்கும் பொதுப் பள்ளிக்கூட முறையும் மாறி, சுலபமாக வளைந்து கொடுக்கும் தன்மையுள்ள பொதுப் பள்ளிக்கூட லட்சியம் சித்தியாகும்" என்று ஜெர்மன் பேராசிரியரும், பிரபல கல்வி நிபுணருமான பிரான்ஸ் ஹில்கர் "நியூ ஈரா" என்ற பத்திரிகையில் குறிப்பிடுகிருர். இவர் குறிப்பிடும் லட்சியப்போர்டுக்குத்தான் இன்று ஜெர்மன் சமஷ்டிக் குடியரசில் பேராதரவு பொங்கி வருகிறது. இந்த முறைக்கு மாறுகின்ற நிலைமையைப் படிப்படியாகத்தான் சிருஷ்டிக்க முடியும் என்று ஜெர்மன் கல்வி நிபுணர்கள் கருதுகிருர்கள். இந்த முறைப் பள்ளிக்கூடம் முதன் முதலில் 1945-ல் ஹெஸ்ஸியில் பரீட்சார்த்தமாகத் துவக்கப்பட்டது. இதில் அங்கே வெற்றி காணப்பட்டது.

லோயர் ஸாக்ஸனி என்ற இடத்திலும் இப் பரீட்சார்த்தப் பள்ளிக்கூடம் துவக்கப்பட்டது. இந்த ஏற்பாட்டின் படியிலான பள்ளிக்கூட முறையைக் கிராமப் பகுதிகளிலும் நுழைக்க ஏற்பாடுகள் நடைபெறுகின்றன.

கிராமங்களைக் கோஷ்டி கோஷ்டியாகப் பிரித்து, ஒவ்வொரு கோஷ்டிக்கும் மத்தியப் பகுதியில் இம் முறைப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப் படுகின்றன. ஒரே வகுப்புப் பள்ளிக்கூடம் தற்காலத்திற்குப் பொருந்தாத முறையல்ல என்று இங்கே கருதப்படுகிறது. குழந்தைகளின் எண்ணிக்கை குறைவாக இருக்கும் நிலையில், குழந்தைகளைத் தனித்தனியாகக் கவனித்துப் போதிப்பதிலும், குழந்தைகளுக்குக் கோஷ்டிப் பயிற்சியளிப்பதிலும், திறமைப்பெற்ற ஆசிரியர்களால் இம் முறைப் பள்ளிக்கூடங்கள் நவீனத் தேவைகளுக்குப் பொருத்தமாக இயங்க முடியும் என்று கருதப்படுகிறது. வெறும் வறட்டுப் பாடப் படிப்பளிக்கும் பள்ளிக்கூட முறையை மாற்றி, குழந்தையின் சுறு சுறுப்பையும் முயற்சிகளையும், பல திறமைகளையும் வளர்ப்பதை மைய நோக்கமாகக் கொண்ட பள்ளிக்கூட முறையை விஸ்தரிப்பதிலேயே இன்றைய ஜெர்மன் சமஷ்டிக் குடியரசு சார்பாரும், கல்வி நிபுணர்களும், பெற்றோர்களும் கண்ணுங் கருத்துமாயிருக்கிறார்கள். 1933-லிருந்து 1945 வரையில் அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டிருந்த கல்வி ஆர்வம் இன்று புதிய வேகத்துடன் எழுந்திருக்கிறது என்பதைத்தான் இந்த சீர்திருத்தங்கள் அறிவிக்கின்றன.

இந்த முறைக் கல்வியைப் போதிப்பதற்காக ஆசிரியர்களுக்குப் புதிய பயிற்சியும், பாட போதனையும் அளிக்கப் படுகின்றன.

பாடத் திட்டம் என்பது வேலைத்திட்டமாக மலர வேண்டும் என்பதும், வீடு-தேசம் என்ற குறுகிய எல்லை வரம்புகளுக்கப்பால் சூழ்ந்திருக்கும் விரிந்த உலகத்தைக் குழந்தைகள் 'கண்டுபிடிக்க' வேண்டுமென்பதுமே ஜெர்மன் நாட்டின் புதிய கல்வி முறை வலியுறுத்தும் முக்கிய அம்சங்களாகும்.

6 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கும் செயல்படும் 'நர்சரி'களும் 'கிண்டர் கார்டன்'களும் கட்டாயமான ஒரு பகுதியாக ஆரம்பக் கல்வியுடன் இணைக்கப்படவில்லை இஷ்டப்பூர்வமான ஒரு ஏற்பாடாகவே இயங்கி வருகிறது.

சோவியத் செல்வாக்கு மண்டலத்தின் கீழ் செயல்படும் கிழக்கு ஜெர்மனியில் ஆரம்பப் பள்ளிக்கூடம் 6 வயதிலிருந்து 14 வயது வரை குழந்தைகளுக்குக் கட்டாயமாகவும் இலவசமாகவும் கல்வியளிக்கிறது. 6 வயதிலிருந்து 11 வயது வரையில் உள்ள கட்டத்திற்குத்தான் சரியான ஆரம்பப் பள்ளிக்கூடக் கட்டம் என்று அழைக்கப்படுகிறது. ஆரம்பப் பள்ளிக்கூடத்தின் 7, 8-வது வகுப்புகளில் செகண்டரிப் பள்ளிக்கூடத்தில் படிக்கச்செல்லும் குழந்தைகளுக்காக பூர்வாங்கமானதும் விசேஷமானதுமான பாடங்கள் போதிக்கப்படுகின்றன. இந்தக் கிழக்கு ஜெர்மனியின், ஜெர்மன் ஜனநாயக் குடியரசின் சர்க்கார் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் ஒரே மாதிரியான கல்வி நடவடிக்கைகள் இருக்க வேண்டுமென்று விதித்திருக்கிறார்கள். "நம்பிக்கையுள்ள, உணர்ச்சியுள்ள, உற்சாகமுள்ள அரசியல் முறை ஆதரவாளர்களை உற்பத்தி செய்வதே" கிழக்கு ஜெர்மனியின் பிரதானமானக் கல்வி நோக்கமாகும்.

கிழக்கு ஜெர்மனியின் கல்வி முறையில் அரசியல் முறையின் கீழ் எல்லோரும் கட்டுப்பட்டிருக்கவேண்டுமென்ற போக்கையும் மேற்கு ஜெர்மனியின் கல்வி முறையில், பொதுவாழ்வென்ற கட்டுக்கோப்பின் கீழ் சுதந்தரமாக இயங்கவேண்டுமென்ற போக்கையும் பிரதிபலிக்கின்றன.

கிழக்கு-மேற்கு ஜெர்மன் பகுதிகளிரண்டிலுமே பள்ளிக்கூடத்தில் போதிக்கப்படும் பாடங்களில் அவ்வளவு வித்தியாசமிருப்பதாகச் சொல்வதற்கில்லை. பொதுவாக வருஷத்திற்கு 250 நாட்களுக்குப் பள்ளிக்கூடம் வேலை

செய்கின்றது. தினம் காலை 8 மணியிலிருந்து பிற்பகல் 1 மணி வரையிலும் மாலை 3 மணியிலிருந்து 5 அல்லது 5-30 மணி வரையிலும் பள்ளிக்கூடம் வேலை செய்கிறது. முதல் வேளைப் படிப்பு அநேகமாகப் புத்தகப் படிப்புத் தான். இரண்டாம் வேளைப் படிப்பு, கவனிப்பதிலும், கைப் பழக்கத்தை விருத்தி செய்து கொள்ளுவதிலுமாக அமைந்திருக்கிறது.

போதிக்கப்படும் பாடங்கள்:—

(1) மதம்.

(2) ஜெர்மன்மொழி.

(3) படப் பாடங்கள்-(இவை 5-வது வகுப்பிலிருந்து 8-வது வகுப்புவரை கிடையாது.)

(4) கணிதம்.

(5) க்ஷேத்திரக் கணிதம் (முதல் ஐந்து வகுப்புகளுக்குக் கிடையாது.)

(6) சரித்திரம் (முதல் மூன்று வகுப்புகளுக்குக் கிடையாது.)

(7) இயற்கை விஞ்ஞானம்.

(8) பூகோளம்-(முதல் மூன்று வகுப்புகளுக்குக் கிடையாது.)

(9) சித்திரம்.

(10) எழுதுதல் (முதல் ஆரம்ப வகுப்புக்குக் கிடையாது.)

(11) இசை.

(12) உடற்பயிற்சி-விளையாட்டுகள்.

பெண் குழந்தைகளுக்குத் தையல் வேலையும், பூவேலையும் சொல்லித்தரப்படுகின்றன.

பெற்றோர்களின் பரம்பரையில் குழந்தைகள் வளர வேண்டுமென்றும், எந்த வேலையையும், அது கவர்ச்சிகர

மாகவோ அல்லது இன்பமாகவோ இருந்தாலும் இல்லா விட்டாலும் அந்த வேலையைக் குழந்தைகள் சிறு பிராயத் திலிருந்தே செய்ய வேண்டுமென்ற ஒரு இல்ல உணர்ச்சிச் சூழ்நிலை படிக்கும் குழந்தையைச் சுற்றி அமைந்திருப்பதை ஜெர்மன் கல்வி முறையில் நாம் கவனிக்கவேண்டும். வீடு போதிக்கும் கற்பனைத் திறனினுலும், உற்சாகத்தினு லுமே ஜெர்மன் கல்வி முறை பயனுள்ளதாக மேலும் மேலும் வளமான தெம்புடன் வளர்ச்சியடைய முடியும் என்பது இன்றைய ஜெர்மானியக் கல்வி நிபுணர்களின் கருத்தாகும்.

இரண்டு பிரிவுகளாக வல்லரசுகளின் போட்டா போட்டியின் விளைவாகப் பிரிக்கப்பட்டிருக்கும் ஜெர்மனி தன் சுய வலிமையினுலே ஒன்று சேர்வது மட்டும் நிச்சயம். அந்நிலைமையில் இருவிதக்கல்வி முறைகளில் அப்போதைய அரசியல் கொள்கைக்கிணங்க ஒன்றுக இணைக்கப்படுவதும் நிச்சயம். இதை எவரும் தடுக்க முடியாமல் போவதை சரித்திர நிகழ்ச்சி நிரூபணம் செய்யப்போகும் நாள் தூரத்தில் இல்லை.

### (க) ஹாலந்து

1. வனப்பு மிகுந்த இச்சிறு நாட்டில் விவசாய வேலை யும், தோட்ட வேலையுமே பிரதானமானவையாகும். இந் நாடு தன்னுடைய விடுதலைக்காக நீண்ட நாளைய போராட் டங்களை நடத்தியிருப்பதாக இதன் சரித்திரம் கூறுகிறது. டச்சு மக்கள் சுதந்திரத்தைப் பெரிதும் மதிப்பவர்கள். அதன் சரித்திரமும், பூகோள அமைப்பும் அவர்களைத் தனித்தன்மை உணர்ச்சியுள்ளவர்களாக மாற்றியிருக் கின்றன.

2. பள்ளிக்கூடங்களின் மீது அரசாங்கம் ஆதிக்கம் வகிப்பதை டச்சு மக்கள் விரும்புவதில்லை. இதன் காரண

மாகத்தான் ஹாலந்தில் பலவிதமான பள்ளிக்கூடங்களிருக்கின்றன. அரசாங்கத்தினரால் நடத்தப்படும் பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கை மிகச்சொற்பமே. முனிஸிபாலிடிகளால் பல பள்ளிக்கூடங்கள் நடத்தப்படுகின்றன. தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் பள்ளிக்கூடங்களே அதிகமாயிருக்கின்றன. சர்க்காா சார்பற்றுச்செய்யப்படும் இந்தத் ''தனிமை'ப் பள்ளிக்கூடங்களை, மதக் கோட்பாடுகள் அல்லது வாழ்க்கை கல்வி சம்பந்தமான தனிக் கருத்துக்களைக் கொண்ட ஒரு கோஷ்டியினர் நடத்துகிறார்கள். தாங்கள் தனியாகப் பள்ளிக்கூடங்களை நடத்துவதையே இக் கோஷ்டியினர் விரும்புகிறார்கள். மற்றப் பள்ளிக்கூடங்களுக்கு அளிக்கப்படும் அதே ஆதரவும்-உதவியும் இந்தத் ''தனிமை''ப் பள்ளிக்கூடங்களுக்கும் அளிக்கப்படுகிறது. சர்க்காரின் ஆதரவும்-உதவியும் பெரும்பாலும் ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்கே அளிக்கப்படுகின்றன. தனிப்பட்டவர் நடத்தும் பள்ளிக்கூடங்களின் தரம் சர்க்கார் பள்ளிக்கூடங்களுக்குச் சமமாக இருக்கவேண்டுமென்று சர்க்கார் விதித்திருக்கிறார்கள். பாடத்திட்டம் - குறைந்த பட்சப் போதனை நேரம் சம்பந்தமாக சர்க்கார் சில விதிகளை வகுத்திருந்த போதிலும், தனிப்பட்டவர்களின் பள்ளிக்கூடங்களின் அன்றாட நிர்வாக விஷயத்திலோ, போதிக்கும் முறையிலோ, ஆசிரியர்கள் நியமன விஷயத்திலோ தலையிடுவதில்லை.

3. எல்லா ஆசிரியர்களுக்கும் சர்க்கார்தான் சம்பளம் தருகிறார்கள். இந்தச் சம்பளம் உபாத்திமைத் தொழிலை நன்றாகக் கௌரவிக்கும் ரீதியிலும், வாழ்க்கைத்தரச் செலவை யொட்டியுமிருக்கின்றன.

4. பெற்றோர்களோ அல்லது கல்வி விஷயத்தில் அக்கரையுள்ளவர்களோ அவர்கள் எந்த மதப்பிரிவைச் சேர்ந்தவராயினும் தனிமையாகப் பள்ளிக்கூடங்களை ஆரம்பித்து நடத்தலாம்.

5. 'கிண்டர் கார்டனை' அடித்தளமாகவும், சர்வகலா சாலையைச் சிகரமாகவும் கொண்டிருக்கிறது டச்சுக் கல்விமுறை.

6. 7 வயதிலிருந்து 15 வயதுவரை கல்வி கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது.

7. 'கிண்டர் கார்டன்' பள்ளிக்கூடங்கள் எல்லாம் தனிப்பட்டவர்களாலும், முனிஸிபாலிடிகளாலும் நடத்தப்படுகின்றன.

8. ஆரம்பக் கல்வி 7 வயதிலிருந்து 13 வயதுவரை (ஆறு ஆண்டுகள்) போதிக்கப்படுகிறது.

9. கட்டாயக் கல்வித் திட்டம் கண்டிப்பாக அமுல் நடத்தப்படுகிறது. ஒவ்வொரு முனிஸிபல் பிரதேசத்திலும், "ஆஜர் கமிட்டிகள்" இருக்கின்றன. இந்தக் கமிட்டிகள் தான் பள்ளிக்கூடங்களுக்கு ஆஜராகமலிருக்கும் குற்றங்களைக் கண்டுபிடிக்கின்றன. அப்படிப்பட்டவர்களைத் தண்டிக்கும் அதிகாரம் இக்கமிட்டிகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

10. ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் போதிக்கப்படும் பாடங்கள்:—

(1) படித்தல்
(2) எழுதுதல்
(3) டச்சு மொழி
(4) டச்சு நாட்டின் சரித்திரம்
(5) பூகோளம்
(6) பொது விஞ்ஞானம்
(7) இசைப் பாடம்
(8) சித்திரம்
(9) உடற்பயிற்சி
(10) கைப்பழக்கந்தரும் வேலைகள்
(11) தையல் வேலை

மேல் வகுப்புகளில் பிரெஞ்சு மொழியும் ஆங்கில மொழியும் போதிக்கப்படுகின்றன.

11. வாரத்திற்கு 26 காலப் பகுதிகள், ஒவ்வொரு காலப்பகுதியும் 1 மணி நேரம் நீடிக்கிறது.

12. ஆருண்டுப் படிப்புக்குமேல் உயர் படிப்புக்குப் போக விரும்பாத அல்லது முடியாத குழந்தைகள் ஏழாவது, எட்டாவது வகுப்புகளில் தொடர்ந்து படிக்கலாம். கீழ் வகுப்புகளில் அவர்களுக்குப் போதிக்கப்பட்ட அதே பாடங்கள் இவ்வகுப்புகளில் இன்னும் தீவிரமாகப் போதிக்கப்படுகின்றன. ஆங்கில மொழியுங்கூடப் போதிக்கப்படுகிறது.

13. ஆரம்பக் கைத்தொழில் பள்ளிக்கூடங்களும் தனியாக இருக்கின்றன. இங்கே, ஏதாவதொரு கைத்தொழிலில் குழந்தைகள் கட்டாயம் பயிற்சி பெற வேண்டும். அத்துடன். அவர்களுக்குப் பொதுவான கல்வியும் கூடவே அளிக்கப்படுகிறது. இந்தப் பள்ளிப் படிப்புக் காலம் இரண்டே ஆண்டுகள்தான். உலோகத் தொழில், மின்சாரத் தொழில், மரத் தச்சுத் தொழில், கொத்து வேலை, அச்சு வேலை, வர்ணம் பூசும்வேலை, தையல் வேலை, ரொட்டி தயாரிக்கும் வேலை முதலிய வாழ்வுடன் இசைந்த பல வேலைகளுக்கான பயிற்சிகள் இப்பள்ளிக்கூடத்தில் அளிக்கப்படுகின்றன.

14 பெண் குழந்தைகளுக்குக் குடும்பக் கலையில் பயிற்சியளிப்பதற்கெனத் தனிப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. இந்தப் பயிற்சிக்காலம் இரண்டு அல்லது மூன்று ஆண்டுக்ளாகும்.

15. கிராமப் பகுதிப் பள்ளிக்கூடங்களில் விவசாயத்திற்கும் – தோட்டக்கலைப் பயிற்சிக்கும் விசேஷ வாய்ப்புகள் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன.

# 5. 'பிராஜக்ட்' முறை

குழந்தைகளுக்குக் கல்வியளிப்பதில் ஆதியில் இருந்த முதல் முறை தான் இந்த 'பிராஜக்ட்' முறை என்பதாகும். இந்த முறை என்னவோ புராதனமானதுதான். ஆயினும் 'பிராஜக்ட்' என்ற சொல் மட்டும் புதுமையானதாகும்! கல்வித் துறையில், இச்சொல், உபயோகமுள்ள செயல் அல்லது லாபகரமான தொழிலேயே குறிக்கிறது. எனவே, குழந்தைகளுக்கு அளிக்கப்படும் 'பிராஜக்ட்' முறைக்கல்வி யின் தனிச்சிறப்பு இதுதான். குழந்தை தானே தொழில் செய்வதன் மூலம் பெறுகின்ற அநுபவங் கலந்த அறிவுதான் இக் கல்வி முறையின் விசேஷமான சிறப்பு அம்சமாகும்.

இந்த 'பிராஜக்ட்' முறைக் கல்வி இன்று பல பிற நாடுகளில் செயல்படுகின்றது.

இந்த முறையில் பயிற்சி பெறும் குழந்தைகளின் மனோபாவம்—பழக்கம்—பண்பு ஆகியவைகள் எல்லாம் விரிந்து வளர்ந்து அபிவிருத்தியடைகின்றன. எனவே கல்வித் துறையில் இம்முறை சிறந்ததெனக் கூறப்படு கின்றது. குழந்தைகளின் உடல்—மனம்—ஆத்மா—இம் மூன்றும் திட்டமிடப்பட்ட—உபயோகமுள்ள செயல்கள் மூலம் பரி பக்குவமடைவதால்தான் இம் முறையைப் பல நாடுகள் சிறந்ததெனச் சாதிக்கின்றன. இந்த முறையின் கர்த்தாவே **டாக்டர் கில் பாட்ரிக்** ஆவார். "குழந்தைகள் தங்களேச் சுற்றியுள்ள இயற்கையான சூழ்நிலையை ஆதார மாகக் கொண்டு முழுமனதுடன் உபயோகமுள்ள செயல் களேச் செய்யவேண்டும். அப்படிச் செய்யும்போது அவர் களுக்கு மிகுந்த உற்சாகம் ஏற்படுகிறது; நல்ல அநுபவம்

ஏற்படுகிறது. அத்துடன் ஆழ்ந்த திறனுள்ள அறிவும் மலர்கிறது'' என்கிறார் டாக்டர் கில் பாட்ரிக்.

திட்டமிடப்பட்டுச் செயல்படும் இம்முறைக் கல்வி மூன்று விதிகளை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. குழந்தையின் வசதிக்காகவே இம்மூன்று விதிகள் உள்ளன.

யோசித்துத் திட்டமிடுதல்—திட்டப்படி செய்வித்தல்—செய்தபின் ஏற்படும் பலனால் அநுபவத்தைப் பெறுதல் அல்லது தீர்மானித்தல்—இவையே இம் மூன்று விதிகளாகும்.

யோசித்துத் திட்டமிடுதலே மிக முக்கியமானது; உபயோககரமானதாகவும் உடனடியான தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடியதாகவும், லாபகரமானதாகவும் இருக்கக்கூடிய திட்டத்தையே யோசித்துத் தீர்மானிக்க வேண்டுமென' இவர் வற்புறுத்துகிறார். ''நமது திட்டம் சரியாயிருந்தால், அதனின்று பிரயோஜனமான செயலும். அச் செயலுக்கேற்ற நற்பலனும் தோன்றும். பிரயோஜனத்தையோ அல்லது லாபத்தையோ அளிக்கச் சக்தியற்ற செயல்கள் அல்லது தொழில்களைக் குழந்தைகள் செய்வதால் அவர்களுக்கு ஒருவிதப் பயனும் ஏற்படாது—'' இவ்வாறு டாக்டர் கில் பாட்ரிக் கூறுகிறார்.

எந்த வேலைக்கும் திட்டமிடுதல் மிக அவசியமானதொரு அம்சம் என்பதை நாம் கவனிக்கத் தவறக்கூடாது. குழந்தையும் அதன் உலகில் அதன் வழியில் திட்டங்களைத் தயார் செய்துகொள்ளப் பழகிக்கொள்ள வேண்டும். இதனால் குழந்தைக்கு ஆழ்ந்து சிந்திக்கும் வழக்கமும், ஆராய்ச்சி செய்யும் வழக்கமும் ஏற்படுகின்றன.

தான் ஆழ்ந்து சிந்தனை செய்து திட்டமிட்டபின், அத்திட்டப்படி செயலில் இறங்குவதன் மூலம் குழந்தைக்கு அநுபவம் பிறந்து, வளர்ந்து முதிர்கிறது; அநுபவ ரீதியான

அறிவே நிலைத்து நிற்கிறது. பற்பல சூழ்நிலைகளுக்கு ஏற்ற வாறு குழந்தையின் மூளை செயல்பட நேரிடுவதால், செய லால் செய்பவனுக்கு ஏற்படும் பெரிய மனமாறுதல் ஆக்கம் ஆகிய குண அல்லது சக்தி இயல்புகள் குழந்தைக்கு ஏற் படுகின்றன; ஆகையால்தான் ஒன்றைப்பற்றிப் புத்தகத் தின் மூலம் படித்துத் தெரிந்துகொள்வதற்கும், அந்த ஒன் றைத் தானே செய்வதன் மூலம் நன்றாக அறிந்து கொள்வ தற்கும் மலைக்கும் மடுவிற்கும் உள்ள வித்தியாசமிருக் கிறது. தானே செய்த செயலின் விளைவால் குழந்தைக்குத் தீர்மானிக்கும் சக்தி ஏற்படுகிறது! இந்தச் சக்தி, குழந்தை யின் வளர்ச்சிக்கு மிகவும் அவசியமானதொரு சாதனமே யாகும். தன் செயல் போக்கில் ஏற்படக்கூடிய சிறிய தவறைத் தவிர்க்கவும், திருத்திக்கொள்ளவும் ஒரு சந்தர்ப் பம்-ஒரு அரிய வாய்ப்புக் கிட்டுகிறது. வெற்றிபெறும் குழந் தைக்கு ஏற்படும் மனத்திருப்தியும்—ஆனந்தமும் கொஞ்ச நஞ்சமல்ல! புதிய புதிய, பெரிய பெரிய பரிசோதனை களை முழு நம்பிக்கையுடனும் ஆழ்ந்த உறுதியுடனும் செய் யத் தூண்டுவதற்கு இம் மனத் திருப்தியும்—ஆனந்தமும் குழந்தைக்குப் பெரிதும் உதவி செய்கின்றன.

இந்த 'பிராஜக்ட்' முறைக் கல்வியின் கீழ், செயல்—அநுபவம்—பரிசோதனை ஆகிய அம்சங்கள் நெருக்கமாக இணைக்கப்பட்டுள்ளன.

தேன் கூடுகளில் சுறுசுறுப்பாகத் தேனீக்கள் திட்ட மிட்டுச் செயல்படும் அழகினையொத்து, இம்முறைப் பள்ளி களில் குழந்தைகள் தேனீக்களைப் போலச் சுறுசுறுப்பாகச் செயல்கள் அல்லது தொழில்களில் ஈடுபட்டு வேலை செய் கிறார்கள். இம்முறைப் பள்ளிகளில் வேலை செய்யும் ஆசி ரியர்கள் உயர்ந்த கல்வி போதகர்களாகவே மாறிவிடு கின்றனர்!

படித்தல்—எழுததல்—கணிதம் ஆகிய மூன்று விஷயங்களில் அறிவைப் பெறுவதோடு, வயதை யொட்டிய சீரான வழியில், திறமையையும்—சாமர்த்தியத்தையும் வளர்க்கின்ற செயல் முறைப் படிப்பின்மூலம், அநுபவம் நிறைந்த ஆழ்ந்த ஞானத்தைக் குழந்தை பெறவேண்டும் என்பதே இத் திட்டமுறைக் கல்வியின் நோக்கமாகும்.

## முக்கிய அம்சங்கள்:

1. சமுதாயத்திற்கும்—கல்வி பயில்வோர்களின் வாழ்க்கைக்கும் ஏற்ப அமையும் செயல்முறைக் கல்வி அளிக்கப்படுகின்றது.

2. 'செய்வது மூலம் அறிவதே' இக் கல்வியின் அடிப்படைக் கொள்கையாகும்.

3. இந்த ஆக்கவேலைப் படிப்பு முறையினுல் குழந்தைகளின் உள்ளம் தூய்மை பெறுகிறது.

4. குழந்தையின் மனேதத்துவ அடிப்படையில் இம் முறைக் கல்வி நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

5. ஜனநாயக அடிப்படையில் அமைக்கப்பட்ட சிறு சமூகமாகவே இம்முறையில் செயல்படும் ஒரு பள்ளி காட்சியளிக்கிறது.

6. ஒவ்வொரு நிலையிலும் கல்வி பூரணமாக அளிக்கப் படுகிறது; அதிக நேரம் போதனையின் கஷ்டத்தைக் குழந்தைகள் அநுபவிக்கவேண்டியது இல்லை.

7. உண்மையுள்ள—மனிதாபிமான முள்ள—நேர்மையானவருங்காலப் பிரஜைகளை இப் பள்ளிகள் உற்பத்தி செய்கின்றன.

8. விளையாட்டுகள் மூலமும்—கேளிக்கைகள் மூலமும் உபயோகமான வேலைகளைச் செய்யும் உத்சாகம் எழுப்பப்படுகின்றது.

9. பழமையின் சாரம்—புதுமையின் அவசியம்—நிகழ்கால அநுபவங்கள்—வருங்காலத் தேவைகள்—இவை அனைத்துமே கவனிக்கப்படுகின்றன. இவைகளின் அடிப்படையிலேயே பாடத்திட்டங்கள் வகுக்கப்படுகின்றன.

10. சமுதாய உணர்ச்சியையும், விட்டுக்கொடுக்கும் நல்லெண்ணத்தையும் குழந்தைகள் அறிந்து கொள்ளும் விதத்தில் போதனையும்—செயல் திட்டமும் இருக்கின்றன.

# 6. கட்டாயக் கல்வி

ஐக்கிய நாடுகளின் ஸ்தாபனம் இருப்பதை நாம் அனைவரும் அறிவோம். அதில் பாரதமும் பெருமையுடன் அங்கம் வகிக்கிறது. சர்வதேச அமைதிக்காக இடைவிடாது பாடு படுகிறது என்பதையும் நாம் அறிவோம்; உலகில் உள்ள பல நாடுகள் பாரதத்தின் பணியை ஒப்புக்கொண்டுமிருக் கின்றன.

இந்த ஸ்தாபனத்தின் சேவை விரிவாகிக் கொண்டிருக் கிறது. எத்துணையோ தீய சக்திகள் இந்த ஸ்தாபனத்தின் ஆதார லட்சியத்திற்கு முரணாக நடந்து கொண்டாலும்— இந்த ஸ்தாபனத்தை தமது சொல்லுக்குத் 'தலையாட்டும் கருவி'யாகப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தாலும், இந்த ஸ்தாபனம் போன்றதொரு இணைப்பு ஏற்பாட்டின் அவசியத்தை உணர்ந்த பல நாடுகள், இதன் லட்சியத் தைக் காத்து நிற்கவே அல்லும் பகலும் உள்ளேயும்— வெளியிலும் உழைக்கின்றன.

இந்த ஸ்தாபனத்தின் ஒரு அங்கமாக இருந்துகொண்டு மிகவும் பயனுள்ள சேவையைச் செய்துவரும் **'ஐக்ய நாடு களின் கல்வி-விஞ்ஞான-கலாச்சாரப் பிரிவு,'** தனது **32**-வது சிபார்சில் கட்டாயக் கல்வியின் அவசியம் பற்றிப் பின்வரு மாறு கூறியிருக்கிறது:—

1 ஐக்ய நாடுக்ளின் ஸ்தாபனம் எல்லோருக்கும் சம உரிமைக்கும்-சம வாய்ப்புக்கும் உத்திரவாத மளித்திருக்கிறது. எனவே, இதில் அங்கம் வகிக் கும் நாடுகளில் எங்கெல்லாம் கட்டாயக் கல்வி அமுலில் இல்லையோ அங்கெல்லாம் உடனடி யாகக் கட்டாயக் கல்வி முறையைக் கொண்டு வரத் திட்டமிட வேண்டும்.

2. இந்தக் கட்டாயக் கல்வி முறையைப் புகுத்துவதில் எவ்வளவோ சங்கடங்கள் இருக்கத்தான் செய்யும். அங்கெல்லாம் இப்போதுள்ள கல்வி முறைகளில் மாற்றங்களைச் செய்ய நேரிடும். நிதி—சமூக ரீதியிலான பல புதிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியிருக்கும். எனவே, அந்நாடுகளில் மந்திரி சபை அளவில் இயங்கும் கமிட்டிகளையோ அல்லது பிரதிநிதித்வ சபையில் அங்கம் வகிப்பவர்களையும், நாட்டில் உள்ள மக்கள் செல்வாக்குடன் பொதுநல வேலைகளில் உற்சாகமாக ஈடுபட்டிருக்கும் ஊழியர்களையும் கொண்ட கூட்டுக் கமிட்டிகளையோ அந்தந்த சர்க்கார்கள் உடனடியாக ஏற்படுத்த வேண்டும்; கட்டாயக் கல்வியின் சகல அம்சங்களையும் ஆராய்ந்து, அதன் அமுலுக்கு வேண்டியவற்றை முடிவு செய்யும் வகையில் காரியங்கள் விறு விறுப்புடன் நடக்க வேண்டும்.

3. கட்டாயக் கல்வியை உடனேயே புகுத்துவதற்கான வழிகளையும், ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவை நிர்ணயித்து அதற்குள் இத் திட்டம் பூரணமாக நிறைவேறுவதற்கான வழிகளையும் கொண்ட திட்டங்களே தேவை.

4. இப்போது பள்ளி செல்லும் வயதுள்ளவர்களின் எண்ணிக்கை—இனிவரும் காலத்தில் இவர்களின் எண்ணிக்கை—இவை பற்றிய பூராப் புள்ளி விவரங்களையும் நன்ருகச் சேகரித்துக் கொண்ட பிறகே, கட்டாயக் கல்வி முறையைப் புகுத்துவதற்கான திட்டம்பற்றி முடிவு செய்யவேண்டும்.

5. நாட்டின் பொருளாதார—நிதி—சமூக—பூகோள—அரசியல்-மொழி போன்ற இந்த அம்சங்களுடன்

இணைந்ததொரு கட்டாயக் கல்வி முறையே வெற்றியைத் தரும்

6. கட்டாயக் கல்வி முறையைப் பூரணமாகப் புகுத்துவதில் ஒரு முக்கிய விஷயத்தை மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். இத்திட்டம் வளர்ந்து கொடுக்கும் ரீதியிலும், விளைவுகள்-கால மாறுதல்களை யொட்டிய திருத்தங்களையும்-தழுவல்களையும் ஏற்றுக்கொண்டு செல்லும் ரீதியிலும் இருக்க வேண்டும்.

7. இத்திட்டத்தைப் பற்றி மக்களிடையே நல்ல பிரச்சாரம் செய்யவேண்டும். தனிப்பட்டவருக்கும்-சமுதாயம் பூராவிற்கு இத்திட்டத்தால் ஏற்படுகின்ற நற்பலன்களை மக்கள் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்; அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெற, அவர்களின் சமுதாய பலத்தை அவர்களுடைய உற்சாகத்தின் மூலமே திரட்ட வேண்டும்.

8. கட்டாயக் கல்வியைப் பூரணமாகப் புகுத்துவது என்பது ஒரு நீண்டகாலத் திட்டம் என்பதை மறந்துவிடக் கூடாது. எனவே, இத்திட்டம் பற்றிய பிரச்சாரமும் - இத்திட்ட அமுலும் ஏக காலத்தில் நாடெங்கிலும் துவக்கப்பட வேண்டுமா? அல்லது அதிக கவனம் செலுத்த வல்ல போக்கில் சில பிராந்தியங்களில் மட்டும் துவக்கப்பட வேண்டுமா? என்பதை அந்தந்த சர்க்கார்கள் மிக ஜாக்கிரதையுடன் தீர்மானிக்க வேண்டும்.

9. கட்டாயக் கல்வி முறையின் பூரண அமுலால் பயனடைகின்றவர்கள் ஆண் குழந்தைகளோடு

பெண் குழந்தைகளுந்தான் என்பதை எந்த சர்க்காரும் மறந்துவிடக் கூடாது.

10. பல நாடுகளில் இந்தக் கட்டாயக் கல்விமுறையைப் புகுத்த முடியாமைக்குப் பெரிதும் காரணமாயிருப்பது நிதிமுடைதான். எனவே, நிதி விஷயம் பற்றிப் பூராவாக முன்கூட்டியே நிர்ணயித்துக் கொள்ள வேண்டும்; எவ்வாறு இத்திட்ட அமுலுக்குவேண்டிய பண வசதியைப் பெறுவது-அப்படிக் கிடைக்கும் பண வசதியை எவ்வாறு நல்ல முறையில் இத் திட்டத்தை நிறைவேற்றுவதற்குப் பயன்படுத்திக் கொள்வது-இவைகளைப் பற்றி மிக ஜாக்கிரதையாகத் தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

11. பண வசதி பெறும் போக்கில் ஒரு நாட்டிற்கும் மற்ெருரு நாட்டிற்கும் வித்தியாசமான வழிகள் இருக்கலாம். எனவே, ஒரே மாதிரியான வழி எல்லா நாடுகளுக்கும் பொருந்தாது. சில நாடுகளில் புதிய ஸ்தல அல்லது தேசம் பூராவிற்குமான வரி விதிப்பு அவசியப்படலாம்; சில நாடுகளில் அந்தந்த சர்க்கார்கள் தங்கள் கல்விச் செலவினத்தில் இத்திட்ட அமுலுக்கெனத் தனியான தொகையை ஒதுக்கலாம்; அல்லது ஒரு குறிப்பிட்ட கெடுவிற்குள் திருப்பித் தருவதாக வாக்களிக்கும் கடன் கோரிக்கைகளை அந்தந்த சர்க்கார்கள் வெளியிட்டு, மக்களிடமிருந்தே கடன் பணம் பெறலாம்.

12. ஒரு நாட்டின் நிதி அமைப்பு முறை அனுமதிக்கும் அளவிற்கு மத்திய—ஸ்தல அதிகாரத்தின் கூட்டு ஏற்பாடு இத்திட்ட அமுலுக்கென ஏற்படுவது தான் சாலச் சிறந்ததாகும்

13. 'கல்வித் துறையில் மூலதனத்தைப் போடுவது சரியான-பத்திரமான கொள்கையாகும்' என்ற எண்ணம் மக்களிடையே தீவிரமாகப் பரவ வகை செய்தல் வேண்டும்.

14. மொழிப் பிரச்னை ஏற்பட்டிருக்கும் நாடுகளில் கட்டாயக் கல்வி முறையின் காலம் குறுகியதாக இருக்கக் கூடாது. தான்பள்ளிக்கூடத்தில் பெறும் கல்வி நீடித்துத் தனக்குப் பயன்தரக்கூடியது என்றும், சமுதாய வாழ்வினில் பூரண பங்கு எடுத்துக்கொள்ளத் தனக்கு உதவிசெய்யவல்லது என்றும் ஒரு நிலைமை ஏற்படும் வரை ஒரு குழந்தை பள்ளிப் படிப்பை விட்டு விடக்கூடாது.

15. கட்டாயக் கல்வி முறை சம்பந்தமான சட்டம் இன்னமும் கொண்டுவரப்படாத நாடுகளில், உடனடியாக ஐக்ய நாடுகளின் கல்வி சாஸனப்படி, கட்டாயக் கல்விக்கான குறைந்த பட்சக் கால அளவை உடனடியாக அந்தந்த சர்க்கார்கள் நிர்ணயித்துவிட வேண்டும்.

16. சில நாடுகளில் இந்தக் கால அளவை 5, 6, 7 ஆண்டுகளாக நிர்ணயித்திருக்கிறார்கள். இன்னமும் 50 சத விகிதத்திற்கு மேலிருக்கும் குழந்தைகள் கட்டாயக் கல்விமுறையின் கீழ் வராது இருந்தாலும், இந்தக் கால அளவுகளைக் குறைக்க வேண்டுமென்பதில்லை. இம்மாதிரி 'பதுங்கும்' குழந்தைகளைப் படிப்படியாக இத்திட்டத்தின் கீழ் கொண்டுவரச் சட்டப்படியான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.

17. கட்டாயக் கல்வி முறையைப் பூரணமாகப் புகுத்தும் அளவிற்குத் தயாராகியிருக்கும் நாடுகளில்—

பள்ளி செல்லும் வயதடைந்த மொத்தக் குழந்தைகளில் 70 அல்லது 80 சத விகிதத்தினர் இக் கட்டாயக் கல்வி முறையின் கீழ் பள்ளிக்கூடங்களுக்குப் போய்க் கொண்டிருக்கும் நாடுகளில், கட்டாயக் கல்விமுறையின் அமுல் காலத்தை 7 லிருந்து 8 ஆண்டுகளுக்கு விஸ்தரிக்கலாம்.

18. கட்டாயக் கல்விமுறை பூரணமாகச் செயல்படும் நாடுகளில், 14 அல்லது 15 வயதுக்கு மேலும் கூட, ஆரம்பக் கல்வி அமைப்பின் கீழோ அல்லது பலதரப்பட்ட செகண்டரி கல்வி அமைப்பின் கீழோ முழு நேர அடிப்படையிலோ அல்லது பகுதி நேர அடிப்படையிலோ இந்தக் கட்டாயக் கல்விமுறை விதிகளை விஸ்தரிக்கலாம்.

19. உத்தியோகத்தில் சேருவதற்கான வயது வரம்பும் பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேறுவதற்கான வயது வரம்பும் (சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டுள்ள) ஒவ்வொரு துறைக்கும் ஏற்றதாக இருக்கும்படியாக தீர்மானிக்கப்படவேண்டும். தேசீயக் கல்விக்கும்—தொழில்துறை அதிகாரிகளுக்கும் இடையே அதிக பட்ச ஒத்துழைப்பு இருக்க வேண்டும்; இவ்வித ஒத்துழைப்பு சர்வதேச அளவில் கூட மலரவேண்டும்; அத்துடன் கட்டாயக் கல்வி முறையை அமுல் நடத்தும் ஸ்தாபனங்களுக்கும் குழந்தைகள்-வாலிபர்கள் செய்யும் வேலைகளுக்குப் பொறுப்பாயிருப்பவர்களுக்கும் இடையேயும் இவ்வித ஒத்துழைப்பு அவசியம் நிலவ வேண்டும்.

20. கல்வி வசதிகளைப் பூரணமாகப் பெற எல்லாக் குழந்தைகளுக்கும் உரிமை உண்டு; இந்த அடிப்படையில் கல்வி அதிகாரிகள் எங்கெல்லாம்

முடியுமோ அங்கெல்லாம் போதிய ஸ்தாபனங்களை திறுவியாக வேண்டும் ; நோயாளிக் குழந்தைகள்-சரீரத் தெம்பில்லாத குழந்தைகள்-தூரத்தில் வசிக்கும் காரணத்தால் ஒதுக்கப்பட்ட குழந்தைகள்-இவர்களுக்குக் கல்விவசதியில்லை என்ற காலம் மலையேறிவிட்டது. எல்லோருக்கும் கல்வி வசதி தரப்படும் என்ற ரீதியில் சகல நடவடிக்கைகளும் எடுக்கப்பட வேண்டும்.

21. படகோட்டிகள் - மாலுமிகள் - இவர்களின் குழந்தைகளுக்கும் நிலையான இருப்பிடம் இல்லாத காரணத்தினால், அத்தகையோரின் குழந்தைகளுக்குத் தங்கியிருந்து படிக்கும் வசதிக்கோ அல்லது தபால் மூலம் போதனைக்கோ ஏற்பாடு செய்யப்படவேண்டும்.

22. நாடோடி இனங்களின் குழந்தைகளுக்குக் கல்வியளிப்பது என்பது பெரும் பிரச்னையாகிவிட்டது. இந்தப் பிரச்னைக்குத் தகுந்த பரிகாரத்தைக் காணக் கல்வி அதிகாரிகள் முயலவேண்டும். ஊர் ஊராகச் செல்லக்கூடிய 'வாகனப் பள்ளிக்கூடங்களை' இதற்கு ஒரு பரிகாரம் என்று மேற்கொள்ளலாம் ; ஆயினும் இந்தப் பரிகாரத்தைச் சில விஷேச சந்தர்ப்பங்களில்தான் மேற்கொள்ள வேண்டும்.

23. பள்ளி செல்லும் வயதடைகிற குழந்தைகளின் எண்ணிக்கையை, ஒவ்வொரு ஸ்தலத்திலும் குறித்த கால அடிப்படையில், கணக்கிட வேண்டும் ; இதனுல் கட்டாயக் கல்விமுறை அமுலைச் செவ்வனே கட்டுப்படுத்த முடியும்.

24. இக்கல்வி முறையின் விதிகளை மீறுகின்ற பெற்றோருக்கு அபராதம் விதிப்பது போன்ற ஏற்பாடுகள் இருக்கவேண்டும்; ஆயினும், இந்த ஏற்பாட்டைக் காட்டிலும் சிறந்தது பெற்றோர்களின் மத்தியில் தீவிரப் பிரச்சாரம் செய்து, அவர்கள் இந்த நல்ல முறையை ஏற்றுக் கொள்ளும்படி செய்வதேயாகும்.

25. பெற்றோர்களுக்கும்-ஆசிரியர்களுக்கும் இடையே நெருங்கிய நேச உறவும் ஒத்துழைப்பும் நிலவுமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். பெற்றோர் ஸ்தாபனங்களும்-சமூக ஊழியர்களும் இத்திட்ட வெற்றிக்குப் பெரிதும் சேவை செய்யக் கூடியவர்கள் என்பதை ஒவ்வொரு பிரஜையும்-ஒவ்வொரு கல்வி அதிகாரியும் உணர்ந்தாக வேண்டும்.

26. கட்டாயக் கல்வி முறையின் மூலம், சம்பளம் மட்டும் இல்லை என்ற நிலைமை மாறி, படிப்படியாகக் குழந்தைகளுக்குப் பாடப்புத்தகங்கள்-இதர பள்ளிச் சாமான்கள் எல்லாமே இலவசமாக அளிக்கப்படுகின்ற நிலைமையும் ஏற்பட்டாக வேண்டும்.

27. தூரத்தின் காரணமாகக் குழந்தைகள் பள்ளிக்கூடம் செல்ல முடியாதிருக்கும் நிலைமையை, எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம், தவிர்த்தாக வேண்டும்; பள்ளிக்கூடத்தை நடு நாயகமான இடத்தில் நிர்மாணிப்பது—போக்குவரத்து வசதிகளை ஏற்படுத்துவது-தங்கியிருந்து படிக்கவல்ல பள்ளிக்கூடங்களை ஏற்படுத்துவது போன்ற வழிகளில்தான் இந்த நிலைமையைத் தவிர்க்க முடியும்.

28. பள்ளிக்கூடத்திலேயே வைத்தியவசதி [சாப்பாட்டு வசதி-முடியுமானல் உடையளிக்கும் வசதி-ஆகியவைகளுக்குக் கல்வி அதிகாரிகளே ஏற்பாடு செய்யவேண்டும் ; இவ்வாருன வசதிகளின் காரணமாகப் பள்ளி செல்லுகின்றவர்களின் எண்ணிக்கையும் பெருகும்.

29. பள்ளிக்கூட வேலைகளைப் பெற்ருேர்கள் பாராட்ட வேண்டும். தங்கள் குழந்தைகளுக்கு அளிக்கப் படும் கட்டாயக் கல்வி முறையை வரவேற்க வேண்டும். இதற்காகப் பள்ளிக்கூடங்கள் சமுதாய வாழ்வுடன் இரண்டறக் கலந்திருக்கவேண்டும்! மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவும் சமூக—பொருளாதார—ஆரோக்ய — கைத்தொழில் கலை – கலாசாரத் துறைகளில் முன்னேற்றம் காணவும் ஆசிரியர்கள் தங்கள் பங்குப் பணியை ஆற்ற வேண்டும். இந்த லட்சியத்திற்கேற்பப் பள்ளிக்கூடங்கள் குழந்தைகளுக்குப் பாடத் திட்டத்தை வகுக்கவேண்டும். இப் பாடத்திட்டம் குழந்தைகளின் கலைத்திறனுக் கேற்பவும் அமைய வேண்டும். தாங்கள் வாழுகின்ற சுற்றுச் சார்பினை யொட்டியும் இந்தப் பாடத் திட்டம் இருக்கவேண்டும் ; மேலும், தாங்கள் வாழுகின்ற பகுதிகள் அபிவிருத்தி யடைய வேண்டுமென்ற அக்கரையும் உணர்ச்சியும் ஏற் படுமளவுக்கு இந்தப் பாடத்திட்டம் குழந்தைகளுக்கு ஊக்கம் ஊட்டுவதாகவிருக்க வேண்டும். இந்தப் பள்ளிக்கூடங்கள், முதியோருக்கு அளிக்கப்படும் அடிப்படைக் கல்வியின் அனுபவங்களையும்—படிப்பினைகளையும், கவனித்துப் பயன் பெற வேண்டும்.

30. எழுத்தறிவின்மை நிலவுகின்ற சமூகங்களிடையே கட்டாயக்கல்வி முறையுடன், முதியோர் கல்வித்திட்டமும் மேற்கொள்ளப்பட வேண்டும். இதனால் பெற்றோர்களுக்குப் புதிய ஊக்கம் ஏற்படுகின்றது ; தங்களுடைய குழந்தைகள் கட்டாயமாகக் கல்வி வசதி பெறுவதில் பெற்றோர்கள் இதனால் அதிக அக்கரைகாட்டத் தொடங்குவார்கள் ; மேலும், இதனால், பள்ளிகளை விட்டு விலகும் பையன்களுக்கும் முதியோருக்கும் இடையே அதிக அளவிற்கு நல்லுறவு வளர இடமும் ஏற்படுகிறது. முதியோருக்கு அளிக்கப்படும் அடிப்படைக் கல்வி வேலைக்கும், இதரச் சாதாரண பள்ளிக்கூட வேலைக்கும் நெருங்கிய இணைப்பாடு இருக்கவேண்டும்.

31. ஓராசிரியர் பள்ளிகளினால் நிர்வாகச் சங்கடங்களும், தொழிலுக்குரிய இடைஞ்சல்களும் ஏற்பட்டாலும், இம்முறைப் பள்ளிகளின் சிறப்பைக் குறைத்து மதிப்பிடக்கூடாது. கட்டாயக் கல்வி முறையின் அமுலுக்கு இப்பள்ளிகளே அதிகமான சேவையைச் செய்யமுடியும்.

32. பள்ளி ஆண்டின் காலத்தை நிர்ணயிக்கும்போது பிராந்திய அம்சங்களை—அதாவது, சீதோஷ்ண ஸ்திதி—விவசாய வேலைப் பருவங்கள் போன்ற அம்சங்களை மனத்திற் கொள்ளவேண்டும்.

33. இதே அம்சங்களை ஒட்டியே பள்ளிக்கூடத்தின் தினசரிக் காலப்பகுதிகளையும்—பாட நேரங்களையும் வகுக்கவேண்டும். இப்படிச் செய்தால்தான் பள்ளிக்கூடத்திற்குத் தினசரி வருகின்ற குழந்தைகளின் எண்ணிக்கை சீராக இருப்பதோடு, அக்குழந்தைகளுக்கும் சௌகரியமாயிருக்க முடியும்.

34. பொதுவில், தினசரி இரு வேளைப் பள்ளிக்கூடம் நடைபெறுவதுதான் எங்கினும் பின்பற்றப் படுகிறது. எங்கெல்லாம் (அ) போதுமான கட்டிட வசதியின்மையும் ஆசிரியர் பற்றுக்குறைவும் இருக்கின்றவோ—பருவக் கோளாறுகளின் காரணமாகக் குழந்தைகளின் கல்வி பெறும் உரிமை பாதிக்கப்படும் என்ற நிலைமை ஏற்படுகின்றதோ, (ஆ) சமூக—பொருளாதார அம்சங்களின் விளைவாகப் புதிய நிலைமைகள் தோன்றுகின்றனவோ அங்கெல்லாம் தினசரி ஒரு வேளைப் பள்ளிக்கூடத்தை நடத்தலாம். இம் மாதிரிப் பள்ளிக்கூடம், ஒரு அசாதாரணமான விதி விலக்காகவே நடத்தப்பட வேண்டுமென்பதுதான் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய விஷயமாகும்.

35. இம்மாதிரியான ஒரு வேளைப் பள்ளிக்கூடத்தின் கால அட்டவணையினால் ஆசிரியர்—மாணவருக்கு அதிக வேலை ஏற்பட்டுவிடக்கூடாது; அவர்களின் ஆரோக்கியமும் — திறமையும் சீர்கெட்டுவிடக் கூடாது.

36. சில நாடுகளில் கட்டாயக் கல்வி முறையின் பூரண அமுலுக்குப் பெரிய தடையாக நிற்பது மொழிப் பிரச்னையேயாகும். தாய்மொழியின் முக்கியத்துவத்தை மறந்துவிடாமல், தேசீய—பிராந்திய—ஸ்தல நிலைமைகளுக்கும், குழந்தையின் கல்வியின் மனேதத்துவ ரீதியிலான அம்சங்களுக்கும் முக்கிய மதிப்புத் தரவேண்டும்.

37. கட்டாயக் கல்வி முறையைப் புகுத்த விரும்பும் இயக்கத்தின் பிரதான சக்தி ஆசிரியர்களே என்பதை எவரும் மறந்துவிடக்கூடாது. மேலும்,

இந்த இயக்கம் தீவிரமாகப் பரவாதிருப்பதற்கு முக்கிய காரணமாயிருப்பது ஆசிரியர் பற்றுக் குறையே யாகும் என்பதையும் எவரும் மறந்து விடக்கூடாது. இந்தப் பிரதானக் குறையைப் போக்க வேண்டுமானால்,

(அ) உபாத்திமைத் தொழிலில் முக்கியம்—சிறப்பு—பெருமைக்கேற்ப ஆசிரியர்களின் சம்பள விகிதம் இருக்கவேண்டும்.

(ஆ) தங்களுடைய வேலைக்கு அடிக்கடி ஆபத்து ஏற்படாது என்ற பத்திர உணர்ச்சியுடன் ஆசிரியர்கள் வேலை செய்யும்படியான நிலைமைக்கு உத்திரவாதம் அளிக்கப்படவேண்டும்.

(இ) உபாத்திமைப் பயிற்சிப் பள்ளிகள் ஏராளமாக ஏற்படுத்தப்பட வேண்டும்.

38. ஆசியர்களுக்குப்பயிற்சிப் பள்ளிகளில் உயர்தரப் பயிற்சி, பூரணமாக அளிக்கப்படவேண்டும். கட்டாயக் கல்விமுறை விதிகளை அமுல்நடத்துவதற்காகக் குறுகிய காலப் பயிற்சி வகுப்புகளும் நடத்தப்படவேண்டும். ஆயினும், இப்பயிற்சியை ஒரு அவசரகால ஏற்பாடாகவே கருதவேண்டும். சமயம் வரும்போது, இந்தக் குறுகிய காலப் பயிற்சி பெற்ற ஆசிரியர்களுக்கு விரிவான பயிற்சியளிக்கப்படவேண்டும்.

39. எல்லா ஆசிரியர்களுக்கும் பொது—தொழில் என்ற இரு அம்சங்களிலும் பூரணமான பயிற்சி அளிக்கப்படவேண்டும்.

40. இவ்விதத் தொழில் பயிற்சி பெற்றுள்ள ஆசிரியர்கள்—சிறப்பாக கிராமப் பகுதிகளில் வேலை

செய்யும் ஆசிரியர்கள் கிராமச் சார்புத் தொழில் களுக்குரிய திறமையைப் பெற்றவராக இருக்க வேண்டும். தாங்கள் வசிக்கும் கிராமங்களின் பொது வாழ்வினிலும்-நடைபெறும் தொழில்களி லும் அவர்கள் தீவிரமான பங்கெடுத்துக் கொள்ள வேண்டும்; அக்கிராம மக்களின் பழக்க வழக்கங் கள்-தேவைகள்-அபிலாஷைகளில் இந்த ஆசிரியர் களுக்குப் போதிய ஞானமும், அக்கரையும் இருத் தல் வேண்டும். பொதுப் பண்பாடு-சுகாதாரம்-கைத்தொழில்கள்—விவசாயம்-இவை யாவையும் கொண்ட அடிப்படைக் கல்வியைப் பரப்புகின்ற தீவிர ஊழியர்களாகவும் இந்த ஆசிரியர்கள் பணி யாற்ற வேண்டும்.

41. கிராமப் பகுதிகளில் உற்சாகத்துடன் கல்விச் சேவையைச் செய்ய முன்வரும்படி ஆசிரியர் களுக்கு ஊக்கமளிக்கும் கவர்ச்சிகரமான ஏற்பாடு களைக் கல்வி அதிகாரிகள் செய்ய வேண்டும்.

42. கட்டாயக் கல்வி முறையைப் பூரணமாக அமுல் நடத்தும் ஏற்பாடுகளுடன் கூடவே, பள்ளிக் கூடக் கட்டிட நிர்மாணத்திற்கும் திட்டம் வகுத்து, அதைத் தொடர்ந்தாற்போல நடத்த வேண்டும். இந்தக் கட்டிட நிர்மாணத் திட்டத் தின்படி, பள்ளிக்கூடங்களுக்குக் கட்டிடங்களைக் கட்டுவதோடு, ஆசிரியர்களுக்கும் குடியிருப்பு இடங்களை நிர்மாணிக்கவும் வேண்டும்.

43. எந்த இடத்தில் பள்ளிக்கூடம் கட்டப்பட வேண் டும் என்பதை மிகக் கவனத்துடன் நிர்ணயிக்க வேண்டும்; பள்ளி வரும் குழந்தைகள் அதிகமாக வாழும் இடத்தையும், பள்ளிக்கூடத்திற்கு வர எவ்வளவு தூரம் குழந்தைகள் நடக்கவேண்டி

யிருக்கும் என்ற அம்சத்தையும் மனத்திற் கொண்டே, பள்ளி கட்டுமிடத்தைத் தேர்ந் தெடுக்கவேண்டும்.

44. பொருளாதாரச் சாத்தியக்கூறுகள்—கல்வி—சுகா தார—சீதோஷ்ண அம்சங்கள்—இவைகளை யொட் டியே பள்ளிக்கூடக் கட்டிட நிர்மாணத் திட்டம் இருத்தல் வேண்டும்.

45. சில விசேஷமான சந்தர்ப்பங்களில், தங்களுடைய ஊர்களின் பள்ளிகளைத் தாங்களே கட்டிக் கொள்ள வேண்டும் என்ற சமுதாய உணர்ச்சி யினை மக்களுக்கு ஊட்டவேண்டும்; இதனால் தங் களுடைய பொறுப்புகளை அதிகாரிகள் அறவே மறந்துவிடவேண்டுமென்பதில்லை!

46. அவசரகாலத் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள, கெட்டிக் கட்டிடமில்லாத இடங்களி லும்—கீற்று அல்லது துத்தநாகத் தகடுகளால் வேயப்பட்ட இடங்களிலும்—பள்ளிக்கூடத்திற் கென கட்டப்படாத சாதாரண இடங்களிலும் பள்ளிக்கூடங்களை நடத்தலாம்.

47. பள்ளிக்கூடத்திற்கெனக் கட்டிடங்களை நிர் மாணிக்கும் முக்கியப் பொறுப்பு சர்க்காரைச் சேர்ந்ததுதான்; ஆயினும் பள்ளிக்கூடம் கட்டுவ தற்குப்பூதானம் செய்கிறவர்களையும், நன்கொடை அளிப்பவர்களையும் ஊக்குவிப்பதிலும் பயனுண்டு: மேலும் அவசர நிலைமையின் காரணமாக விசேஷக் கடன்களைக் கேட்டுப் பெறுவது பற்றியும் யோசிக்கவேண்டும்.

48. எங்கெல்லாம் சாத்தியமோ அங்கெல்லாம், ஒவ் வொரு பள்ளிக்கூடத்திற்கும் ஒரு விளையாடும்

மைதானம், ஒரு தொழிற்சாலை, ஒரு வயல் அல்லது தோட்டம்-இவை இருக்கும்படியான நிலைமையைத் தோற்றுவிக்கவேண்டும்.

49. எங்கெல்லாம் சீதோஷ்ண ஸ்திதி அனுமதிக்கின்றதோ, அங்கெல்லாம் திறந்தவெளிப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தலாம்; இவை ஒருவாறு பள்ளிக்கூடக் கட்டிடப் பிரச்னையைச் சமாளிக்கக்கூடும்; ஆயினும், இம்மாதிரியான திறந்த வெளிப் பள்ளிக்கூடங்களினால் பணச் சிக்கனத்திற்கு வழி ஏற்படுகின்றதா, படிப்பு பாதிக்கப் படாமலிருக்கின்றதா, சுகாதாரம் கெட்டுவிடாமல் இருக்கின்றதா என்பன போன்ற அம்சங்களையும் ஜாக்கிரதையாக ஆராய வேண்டும்.

50. கிராம-நகரப் புனரமைப்புத் திட்டங்களில் பள்ளிக்கூடக் கட்டிட நிர்மாணம் முக்கியமான இடம் பெறவேண்டும்; ஏனெனில் எவ்வளவுக்கெவ்வளவு பள்ளிக்கூடக் கட்டிடங்கள் நிர்மாணிக்கப்படுகின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு பள்ளிக்கூடங்களை ஆரம்பித்து அவை மூலம் தீவிரமாகக் கட்டாயக் கல்வி முறையை அமுல் நடத்த முடியும்.

51. கட்டாயக் கல்விமுறை தீவிரமாகவும்—பூரணமாகவும் அமுலிலிருக்கும் நாடுகளில், இதே கட்டாயப் படிப்புமுறையை இளைஞர்களுக்கும் விஸ்தரிக்கும் ரீதியில் உடனடியாகத் திட்டம் வகுக்கப்பட வேண்டும்.

52. அதிகமான வாழ்க்கை வசதிகளின்றி அவதியுறும் குடும்பங்களுக்குப் பண உதவி அளிக்கும் பிரச்னையை சர்க்கார்கள் ஆராய வேண்டும்; அதுவும்,

அக்குடும்பங்களின் குழந்தைகள் வேலை செய்யத் துவங்கும் வயதடையுந் தருவாயில் இத்தகைய உதவி அக் குடும்பங்களுக்கு அவசியமாகத் தேவைப்படுகிறது. மேலும், சம்பாதிக்கும் திற மையை இழந்து நிற்கும் குடும்பங்களுக்கு அந்த நஷ்டத்திற்கு ஈடுசெய்வதற்கும், அவர்கள் தங்க ளுடைய குழந்தைகளைத் தொடர்ந்து பள்ளிக் கூடங்களுக்கு அனுப்புவதற்கும் பண உதவி அளிப்பது சர்க்காரின் கடமையா யிருக்க வேண்டும்.

53. குழந்தைகளின் மாறுபட்ட திறமைகள்—சக்தி கள்—அக்கரைகளை யொட்டியும், மாறுபட்ட சமூக—பொருளாதாரத் தேவைகளை யொட்டி யுமே நீடித்த கல்வியிருத்தல் வேண்டும். மேலும், இக்கல்வி புதுமைப் பண்பாட்டைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்வதாகவும் அமைய வேண்டும். தாம் பூரண ஞானம் பெற எந்த விஷ யங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும் என்பதை நிர்ணயிக்கும் பூரண உரிமையை மாண வர்களுக்கு அளிப்பதுதான் சிறந்ததாகும்.

54. விஞ்ஞானமும்—தொழில் நுணுக்க ஞானமும் மக்களுக்குப் பயன்படும் ரீதியிலும், மனிதத் தன் மையை வளர்க்கும் ரீதியிலும் இருக்கவேண்டும். மேலும், இத்துறைகளில் அளிக்கப்படும் கல்வி, பொது வாழ்க்கைக்கும்—நுண்ணிய ஆராய்ச்சிப் போக்கிற்கும் உதவி செய்யும்படியாகவும் இருக்க வேண்டும்.

55. ஆரம்பப் பள்ளிக்கூடம்—கைத்தொழில் பள்ளிக் கூடம்—கலைத்தொழில் பள்ளிக்கூடம்—செகண்

டரிப் பள்ளிக்கூடம்—இவைகளுக் கிடையே அதிகப்பட்ச இணைப்பாடு நிலவ வேண்டும்.

மேலே விவரிக்கப்பட்ட ஒவ்வொரு அம்சத்தையும் நாம் கவனமாகப் படித்தல் வேண்டும். "எல்லோருக்கும் கல்வி வசதி பெற உரிமையுண்டு" என்ற கோஷத்தை எட்டுத் திக்கிலும் முழக்கி, அந்த உரிமையின் அடிச்சுவட்டில், கட்டாயக் கல்விமுறையை அமுல் நடத்தாத எல்லா நாடுகளும் உடனேயே இம்முறையை அமுலுக்குக் கொண்டு வர வேண்டும் என்று வற்புறுத்தி, அதற்கான கோட்பாடுகள் வழிமுறைகளை அறிவித்துள்ள ஐக்ய நாடுகளின் கல்வி—விஞ்ஞான—கலாச்சார ஸ்தாபனத்தின் சேவையைப் பள்ளி செல்லும் வயதடைந்த ஒவ்வொரு குழந்தையும், ஒவ்வொரு ஆசிரியனும், ஒவ்வொரு தந்தையும்—தாயும் போற்றாம லிருக்க முடியாது.

# 7. சில பிரபல கல்வி நிபுணர்களும், அவர்களுடைய கல்விக் கொள்கைகளும்

**1. பெஸ்ட் லோஸி :**

ஸ்விட்ஸர்லாந்தில், ஜூரிச் நகரத்தில் பிறந்தவர். ரூஸோவின் சித்தாந்தத்தால் ஆதர்சம் பெற்ற இவர், சிறு பிராயத்திலிருந்து ஆரம்பமாகும் ஒரு இயற்கைக் கல்வி முறையை வகுத்தார். குழந்தையின் சுபாவத்தில் தெரியும் குண இயல்புகளை ஆராய்ந்து அந்த அடிப்படையில் கல்வி முறையை வகுத்த இப்பெரியார் தமது சொந்த வாழ்க்கையில் அதிகமான கஷ்டங்களை அனுபவித்தார்.

பிறப்பு : 1745-ம் ஆண்டு

இறப்பு : 1827-ம் ஆண்டு

**2. ப்ரோபல்**

ஜெர்மனி நாட்டில் பிறந்தவர்; மிகச் சிறந்த குழந்தைக் கல்வி நிபுணர். இவர் வகுத்த கல்வி முறையில், உடற்பயிற்சி—ஆன்மிக ஞானம்—அறிவுத்திறன், இம் மூன்றும் இணைந்தே இருக்கின்றன. குழந்தைப் பிராயத்திலிருந்தே இம்மூன்று துறைகளிலுமான பயிற்சிகள் கலந்தே தரப்பட வேண்டுமென்று இவருடைய கல்வித் திட்டம் வற்புறுத்துகிறது.

பிறப்பு : 1782-ம் ஆண்டு

இறப்பு : 1852-ம் ஆண்டு

**3. டாக்டர் ஹால் :**

அமெரிக்காவில் வாழ்ந்த ஒரு கல்வி நிபுணர். நிகழ் கால உணர்ச்சிகள்—தேவைகளைப் பிரதிபலிக்கும் பண் பாட்டுப்போக்கில் குழந்தைகளின் உள்ளம் உத்வேகத் துடன் ஈடுபடவேண்டும் என்ற அடிப்படையில் அமைந்த ஒரு கல்வித் திட்டத்தை இவர் வகுத்தார்.

பிறப்பு : 1846-ம் ஆண்டு

இறப்பு : 1924 ஆண்டு

**4 ஜான் டூயி :**

பிரபல அமெரிக்கக் கல்வி நிபுணரும், தத்துவ ஞானியு மாவார். ''ஜனநாயகக் கல்வி முறை'' என்ற தமது உயரிய நூலில் டூயி பின்வருமாறு எழுதுகிருர்:—''பள் ளிக்கூடம் உண்மையில் ஒரு பெரிய குடும்பமாக மலர்ச்சி பெறவேண்டும். குழந்தைகள் வீடுகளில் யதேச்சையாகவும் சுயேச்சையாகவும் கற்றுக் கொள்ளும் கட்டுப்பாட்டு உணர்ச்சியானது பள்ளிக்கூடத்தில் தொடர்ச்சியாகவும், பூரணமாகவும், நல்ல சாதனங்கள் மூலமான விஞ்ஞான ரீதியிலும் வளர்ச்சி பெற வேண்டும். குழந்தையின் சமு தாய உணர்ச்சிக்கு வீட்டிலிருந்தே அஸ்திவாரம் போட வேண்டும். வீட்டின் சூழ்நிலையில் இருந்தும், அங்கு பேசப்படும் பேச்சுக்களிலிருந்துமே குழந்தையின் ஆரம்பக் கல்வி ஆரம்பமாக வேண்டும். தன் குழந்தைக்கு எது சிறந்தது என்று உணரும் திறமையுள்ள பெற்ருேரே அந்தத் துறையிலான பயிற்சியை அந்தக் குழந்தைக்கு அளிக்க முடியும். அன்ருடம் வீட்டில் நடைபெறும் பேச் சுக்களில் ஈடுபடுவதிஞலும், வீட்டு வேலைகளில் பங்கு எடுத்துக்கொள்வதஞலும் குழந்தைகளுக்குப் போதிய ஞானம் ஏற்படுகிறது; செயல் திறனும் ஒழுக்கமும், இதரர் களின் உரிமைகளையும். அபிப்பிராயங்களையும் மதித்து

நடக்கும் குணமும், குடும்பத்தின் பொதுவான நலன்களைக் கருத்தில் கொள்ளும் உணர்ச்சியும் ஏற்படுகின்றன. இந்த அம்சங்களை யெல்லாம் திரட்டிப் பொதுமையாக்கும்போது தான் ஒரு லட்சியப் பள்ளிக்கூடம் மலருகிறது.'' டூயியின் இந்த லட்சியக் கல்விப் போக்கிலேயே 20-வது நூற்றாண்டின் மேற்கத்திய நாடுகளின் ஆரம்பக் கல்வித் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன.

பிறப்பு : 1859-ம் ஆண்டு

இறப்பு : 1952-ம் ஆண்டு

**5. ஒவைட் டெக்ரோலி :**

பெல்ஜியம் நாட்டில் பிறந்தவர். பிரபல டாக்டரும் கல்வி நிபுணருமாவார்.

''வாழ்வதற்குத் தயார் செய்வதல்ல கல்வி; ஆனால் கல்விதான் வாழ்வு என்பதை நாம் மறந்துவிடக்கூடாது'' இவருடைய கல்விக் கொள்கையின் ஆதார லட்சியம் இதுதான்!

கவனக் கவர்ச்சி அம்சங்கள் பல நிறைந்த ஒரு திட்டத்தின்படி இவர் போதனை முறையை வகுத்தார். ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் போதிக்கப்பட வேண்டிய பாடங்கள் எல்லாம் பல்வேறு கருத்துக்களின்-பல கோஷ்டிகளின் அடிப்படையில் வகுக்கப்படவேண்டுமென்றும், ஆயினும், இந்தக் கோஷ்டிகள் எழுதும் அல்லது பேசும் விஷயங்கள் தங்கு தடங்கலின்றியும், அடுத்தடுத்தும் வரிசைக் கிரமமாகவும் முன்னேறும் போக்கினைப் பிரதிபலிக்க வேண்டுமென்றும் இவர் வற்புறுத்தியிருக்கிறார்.

பிறப்பு : 1871-ம் ஆண்டு

இறப்பு : 1919-ம் ஆண்டு

### 6. மேரியா மாண்டிஸோரி :

இத்தாலிய நாட்டில் பிறந்த இந்த அம்மையார் உலகப் புகழ் பெற்ற ஒரு கல்வி நிபுணராவார். குழந்தைகளை வேலை செய்யச் சொல்வதையும், அவர்களுடைய உழைப்பைப் பயன்படுத்திக் கொள்வதையும் இவர் தீவிரமாக எதிர்த்தார். "குழந்தைகளின் மனம் திடமடையவேண்டும்" என்பதே இவருடைய கல்விக் கொள்கையின் சாராம்ச மாகும்.




பிறப்பு : 1872-ம் ஆண்டு

இறப்பு : 1952-ம் ஆண்டு

---

## முடிவுரை

ஆரம்பக் கல்வித் துறையில் இதர நாடுகளின் அனுபவங்களை நாமும் அப்படியே 'காப்பி' அடிக்கவேண்டும் என்பதற்காகநான் அவைகளைப்பற்றி எழுதவில்லை ; மேலும் அவைகள் எல்லாம் குறைகளேயில்லாதவை என்றோ, மாறுதலின்றி அவைகள் அப்படியே நிலைத்திருக்கக் கூடியவை என்றோ நான் சாதிக்க விரும்பவில்லை. ஒரு நாட்டில் ஒரு திட்டம் வெற்றியடைவதற்கும் அல்லது தோல்வியுறுவதற்கும் அந்த நாட்டின் நிலைமைகளும், மக்கள் மனோபாவமுமே காரணங்களாகும். எனவே, வேற்று நாடுகளின் சாதனைகளையும் தோல்விகளையும் நாம் கவனித்தேயாக வேண்டும். ஏனெனில், எண்ணித் துணிகின்ற மனித சமுதாயம் தனித்து வாழ இயலாதல்லவா! தவிரவும், இதர நாடுகளின் சாதனைகள்-தோல்விகளுடன் நமது, சாதனைகள்-தோல்விகளை ஒப்பிட்டுப் பார்க்கும் பழக்கம் நமது சிந்தனைகளைத் தூண்டுகிறது ; நாம் மற்ற நாடுகளுக்குப்

பின்னால் எவ்வளவு தூரத்திலிருக்கிறோம் அல்லது அவைகளுக்கு முன்னால் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறோம் என்பதைப் புலப்படுத்துகிறது.

நமது நிலைமைகளையும், வசதிகளையும், மக்களின் கால உணர்ச்சிகளையும் கருத்தில் கொண்டுதான் நாம் அந்த நாடுகளின் அனுபவங்களை ஆராய முடியும். ஆயினும், நம்முடைய அனுகுணமான சூழ்நிலைகளுக்கேற்ப அந்த நாடுகளில் தொடர்ச்சியாகவும், அனுபவப் போக்கிலும் உருவான திட்டங்களின் நல்ல அம்சங்களை நம்முடைய தாக்கிக் கொள்ள நாம் எக்காரணத்தைக் கொண்டும் பின் வாங்கவும் கூடாது. நல்லன யாவையும் ஏற்றுக் கொள்ளுவதுதான் சீரிய பண்பாட்டின் தனிச் சிறப்பாகும். இத்துறையில் இந்த ஆராய்ச்சி பயன்பட்டால், நான் என் கடமையைச் சரியானதொரு சமயத்தில் செய்தேன் என்று பெருமிதம் கொள்வேன்!

இக்கால வாழ்க்கையின் வேகத்தைச் சமாளித்துத் தானாக வேண்டும். கருத்துக்கள் முறையாக வருவதில்லை. துண்டு துணுக்குகளாகத்தான் வருகின்றன. சரித்திரம் போன்ற கடந்த காலத்தை மட்டும் பற்றிய கல்வி அவ்வளவு முக்கியமானதல்ல. தாரதரங்களை நிர்ணயிக்கக் குழந்தைகள் தங்கள் சக்திகளை உபயோகிக்கும் வழிகளை நாம் கற்பிக்கத் தொடங்கவேண்டும். புத்தகங்களை எப்படி உபயோகிப்பது, கருத்துக்களை எங்கே கண்டுபிடிப்பது, வாழ்வுடன் இசைந்த முறையை எப்படி நிர்ணயித்து அதன்படி நடப்பது, அவற்றையெல்லாம் கல்வியின் பிரிக்க முடியாத ஒரு பகுதியாக எப்படி ஒழுங்காக இணைப்பது என்ற முறைகளைக் குழந்தைகளுக்குக் கற்பிக்க வேண்டும். அப்பொழுதுதான் குழந்தைகளுக்குச் சீரான பூரணப் பயிற்சி கிடைக்கும்.

## BOOKS OF REFERENCE


1. Education in Arab Countries of the Near East—*By Roderic B. Matthews and Matta Akrawi.*

2 Activity in the Primary School—*By M. V. Daniel.*

3 The History of Western Education—*By William Boyd.*

4. Russia goes to School—*By Beatrice King.*

5. Public Education in the U. S. S. R—*By Medinsky*

6. The Swedish School Reform—1950—*By Ingemar During. (Edited)*

7. Education under Eight—*By D. E. M. Gardner.*

8. Education in the United States. Published—*By The Federal Agency-Office of Education.*

9. The year book of Education, 1949 & 1952 (Two volumes) Published *By Evans Brothers, London, in Association with the University of London Institute of Education*

10 Encyclopedia of Britanica

11 Education for a New Japan—*By Robert King Hall.*

12 Comparative Education—*By Nicholos Hans..*

13 The Jewish School—*By Nathan Marris.*

14 China To-day—*By Pandit Sunderlal.*

15 Culture and Education in New China. Published—*By Foreign Language Press : Peking : China.*

16 Schools and Life. Written—*By Hilda Lass in the Magazine 'Czechoslovak life.'*

17 Hans Wanka-Article on German Education.

18 Franz Hilker-Article on German Education in the Journal " New Era ."

19 The International Year Book of Education. Published—*By The International Bureau of Education, Geneva.*

20 New Japan—*By* N. *Ito.*

21 The Children's Workshop Community—*By Kees Boeke.*

22 Reccommendation No. 32 of the 14th International Conference on Public Education held under the auspices of The United Nations Educational, Scientific and Cultural Organisation.

23 Memorandm on " Project Method " Submitted *By Mr. J J. Moses, Headmaster, London Mission Training School, Erode, to the Elementary Education Committee constituted by the Government of Mardas*